


# பேராசிரியரின்
# திறனாய்வுத்திறன்

முதுகலை மாணாக்கர்கள் (2020-2022)
காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)

eBook
மின்நூல்

ஆய்வேட்டின் தலைப்புகள்

ந சுப்புரெட்டியரின் நோக்கில் பாஞ்சாலி சபதம்
ந சுப்புரெட்டியாரின் கண்ணோட்டத்தில் பாரதியார்
ந சுப்புரெட்டியார் போற்றும் கண்ணன்
ந சுப்புரெட்டியாரின் பார்வையில் குயில் பாட்டு
புதிய பார்வையில் மூவர் தேவாரம்



## ந சுப்பு ரெட்டியார்100
*Centenary Committee Publications*

ISBN: 978 81 948697 9 5

ஆய்வேட்டின் நூல்வடிவு

# பேராசிரியரின்
# திறனாய்வுத்திறன்

முதுகலை மாணாக்கர்கள் (2020-2022)
காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக
மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015-2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

பேராசிரியரின் நூல்களை பின்புலமாகக் கொண்டு படைக்கப்பெற்ற ஆய்வேடுகள்:

ந சுப்புரெட்டியாரின் நோக்கில் பாஞ்சாலி சபதம்
ந சுப்புரெட்டியாரின் கண்ணோட்டத்தில் பாரதியார்
ந சுப்புரெட்டியார் போற்றும் கண்ணன்
ந சுப்புரெட்டியாரின் பார்வையில் குயில் பாட்டு
புதிய பார்வையில் மூவர் தேவாரம்

ந சுப்பு ரெட்டியார் 100
*Centenary Committee Publications*




ISBN: 978 81 948697 9 5

eBOOK ~ மின் நூல்

# பேராசிரியரின்
# திறனாய்வுத்திறன்

காவேரி மகளிர் கல்லூரியின்
முதுகலை மாணாக்கர்களின் (2020-2022)
ஆய்வேட்டின் தொகுப்பு

தொகுப்பு:
**நூற்றாண்டுக் குழு**




**ந சுப்பு ரெட்டியார்100**

*Centenary Committee Publications*

பேராசிரியரின்

# திறனாய்வுத்திறன்



முதல் பதிப்பு – மே 2022

**Published by:**

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

**Na Subbu Reddiar 100 Educational Trust**
**AD-13, 5th Street, Anna Nagar West, Chennai – 600 040**

978 81 948697 9 5



Wrapper Design: **Centenary Committee**
Printed at: DJ Prints, Chennai – 600 095

# பதிப்புரை

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார் அவர்கள் எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று, ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர். திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர். பல பல்கலைக்கழகங்களில் சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி, நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர். பல ஆய்வாளர்களை உருவாக்கியவர். வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர். **136 [135 +1]** நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015 – 2016) 108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும் மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

பேராசிரியரின் நூற்றாண்டில் (2015 – 2016) நூற்றாண்டுக்குழு தமிழகமெங்கும் நடத்திய 108 நிகழ்வுகள் அகில இந்திய சாதனையாக அங்கீகரிக்கப் பெற்றுள்ளன. நூற்றாண்டில் பேராசிரியரின் தமிழ்த்திறத்தையும், அறிவுநுட்பத்தையும் வெளிக்கோணரும் பொருட்டு பன்னிரெண்டு நூட்கள் வெளியிட்டப்பெற்றன.

அவரது 120 நூல்கள், இந்திய அரசு நல்கிய **ISBN** எண்களுடன், மின் நூல்களாக மாற்றுப்பெற்று https://archive.org/details/@centenary1916nsr2016 என்ற இணைதளத்தில் அனைவரும் பதிவிறக்கம் செய்யும் வகையில் அமைக்கப்பெற்றுள்ளன.

பேராசிரியரின் படைப்பான "***கவிஞர் வாலியின் இராமாநுஜ காவியம் – ஒரு மதிப்பீடு***" எனும் நூலை பேராசிரியரின் நூற்றாண்டிற்குப் பின்பும் (102வது), இராமாநுஜரின் ஆயிரமாண்டிற்குப் பின்பும் (1002வது) நூற்றாண்டுக்குழு 2018ல் வெளியிட்டது.

பேராசிரியரின் நூட்களை அடித்தளமாக்கொண்டு சுமார் 30 முதுகலைப்பட்ட மாணாக்கர்கள், ஆய்வியல் நிறைஞர் மாணாக்கர்கள் மற்றும் முனைவர் பட்ட ஆய்வாளர்கள் பல்வேறு பல்கலைக் கழகங்களில் (சென்னைப் பல்கலைக்கழகம், மதுரை காமராஜ் பல்கலைக்கழகம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், அழகப்பா பல்கலைக்கழகம் மற்றும் தமிழ்நாடு ஆசிரியர் கல்வியியல் பல்கலைக்கழகம்) ஆய்வு மேற்கொண்டு சமர்ப்பித்த ஆய்வேடுகள் பின்னர் நூல்களாக வெளியிடப்பெற்றன..

மூன்று முனைவர் பட்ட ஆய்வாளர்கள் ஆய்வு மேற்கொண்டு, சென்னை பல்கலைக் கழகம், மதுரை காமராஜ் பல்கலைக் கழகம் மற்றும் பாரதியார் பல்கலைக் கழகம்

ஆகியவற்றில் ஆய்வேடு சமர்ப்பித்து முனைவர் பட்டம் பெற்றுள்ளனர். பதினெட்டு முதுகலை பட்ட மாணாக்கர்கள் ஆய்வேடு சமர்ப்பித்து முதுகலை பட்டம் பெற்றுள்ளனர். பதிநான்கு ஆய்வியல் நிறைஞர் மாணாக்கர்கள் ஆய்வேடு சமர்ப்பித்து ஆய்வியல் நிறைஞர் பட்டம் பெற்றுள்ளனர்.

சாகித்திய அகாதெமி "இந்திய இலக்கிய சிற்பிகள்" என்னும் வரிசையில் பேராசிரியரின் வாழ்க்கையினை நூல் வடிவில் கொண்டுவர முடிவுசெய்து நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகின்றது. விரைவில் அந்நூல் 2022ல் வெளிவருமென எதிர் பார்க்கப்பெறுகின்றது.

தமிழ்த்துறை, காவேரி மகளிர் கல்லூரி (பாரதிதாசன் பல்கலைக் கழகம்) பரிந்துரைத்த ஐந்து முதுகலைப்பட்ட மாணாக்கர்கட்கு **ந சுப்பு ரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளை NSR100 Kamatchi Ammal Fellowship** வழங்கியது. அதன்கீழ், பேராசிரியரின் ஏதேனும் ஒரு நூலை ஆய்வுக்குரிய மையக்கருத்தாக தேர்ந்தெடுத்து திறனாய்வு செய்யும் முதுகலைப்பட்ட மாணாக்கர்கட்கு உதவித்தொகையும், நூலைத் தேர்ந்தெடுக்க ஆலோசனையும், தேர்ந்தெடுக்கப் பெற்ற நூலும் வழங்கப்பெற்றன.

***திறனாய்வு செய்த மாணாக்கர்கள்:***

சீ தேவிகா (2020001)
ச ஜெனிபர் ரோஸி (20201002)
ச கனிமொழி (20201003)
ஜெ ஸ்ரீசிந்து (20201005)
ப விஜயலட்சுமி (20201006)

***ஆய்வேட்டின் தலைப்புகள்:***

**ந சுப்புரெட்டியாரின் நோக்கில் பாஞ்சாலி சபதம்**
**ந சுப்புரெட்டியாரின் கண்ணோட்டத்தில் பாரதியார்**
**ந சுப்புரெட்டியார் போற்றும் கண்ணன்**
**ந சுப்புரெட்டியாரின் பார்வையில் குயில் பாட்டு**
**புதிய பார்வையில் மூவர் தேவாரம்**

***தெரிவு செய்யப்பெற்ற பேராசிரியரின் நூல்கள்:***

***பாஞ்சாலி சபதம் - ஒரு நோக்கு***
https://archive.org/details/paanjaalisabathamorunokku
***புதுமை(வை)க் கவிஞர் சுப்பிரமணிய பாரதியார் - ஒரு கண்ணோட்டம்***
https://archive.org/details/puthumaikkavignarsubbharathi
***கண்ணன் பாட்டுத் திறன்***
https://archive.org/details/kannanpaattuthiran_201908
***குயில் பாட்டு - ஒரு மதிப்பீடு***
https://archive.org/details/kuyilpaattuorumathipeedu
***மூவர் தேவாரம் - புதிய பார்வை***
https://archive.org/details/moovarthevarampudhiyapaarvai

இவ்வாறு சமர்ப்பிக்கப்பெற்ற ஆய்வேடுகள் தொகுக்கப்பெற்று

**பேராசிரியரின்**

# திறனாய்வுத்திறன்

**முதுகலைப்பட்ட மாணாக்கர்கள் (2020-2022)**

**காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

எனும் நூலாக வெளியிடப் பெறுகின்றது. நூலின் ஒரு படி ஒவ்வொரு மாணாக்கர்கட்கும், 5 படிகள் கல்லூரிக்கும் வழங்கப்பெறுகின்றன.

**நூற்றாண்டுக்குழு**

# பொருளடக்கம்

## காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)

(பாரதிதாசன் பல்கலைக் கழகம்)

**முதுகலை பட்ட மாணாக்கர்களின் (2020 – 2022) ஆய்வேடு**

Compilation of Dissertations submitted by the Recipients of **'NSR100 Kamatchi Ammal Fellowship'** provided by **Na Subbu Reddiar 100 Educational Trust** in the Cauvery College for Women (Autonomous), Tiruchirappalli, Tamil Nadu

# NSR100
# KAMATCHI AMMAL
# FELLOWSHIP

## MA STUDENTS IN TAMIL



AWARDED TO :

**சீ தேவிகா**

(பதிவு எண்: 20201001)

காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
திருச்சிராப்பள்ளி ~ 620 018

உதவித்தொகையும், நூலைத் தேர்ந்தெடுக்க ஆலோசனையும், தேர்ந்தெடுக்கப்பெற்ற நூலும் வழங்கப்பெற்றன.

ஆய்வேட்டின் தலைப்பு: ந சுப்புரெட்டியாரின் நோக்கில் பாஞ்சாலி சபதம்

பேராசிரியரின் நூல்: *பாஞ்சாலி சபதம் – ஒரு நோக்கு*

பல்கலைக்கழகம்: பாரதிதாசன்

நெறியாளர்: முனைவர் அ. இரா. கோமதி

பட்டம்: முதுகலை (தமிழ்)

வருடம்: 2020–2022



www.nasubbureddiar100.in

# ந.சுப்புரெட்டியாரின் “நோக்கில் பாஞ்சாலி சபதம்”

திருச்சிராப்பள்ளி காவேரி மகளிர் கல்லூரி முதுகலைத் தமிழ் இலக்கியப் பட்டத்திற்காக அளிக்கப்பெறும் திட்டக்கட்டுரை


ஆய்வாளர்

**சீ. தேவிகா**

பதிவு எண் : 20201001

நெறியாளர்

முனைவர் **அ.இரா. கோமதி,** எம்.ஏ., எம்.பில்., பி.எச்.டி.,

இணைப்பேராசிரியர்

தமிழாய்வுத்துறை

காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)






**தமிழாய்வுத் துறை**

**காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

A தகுதி பெற்றது

திருச்சிராப்பள்ளி - 620 018


மார்ச் - 2022

# நன்றியுரை

நா.சுப்புரெட்டியார் நோக்கில் பாஞ்சாலி சபதம் என்ற தலைப்பில் இத்திட்டக்கட்டுரை எழுதவாய்ப்பளித்த காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)க்கு முதற்கண் என் நன்றியனைத் தெரிவித்துக் கொள்கிறேன். முதுகலைத் தமிழ் இலக்கியம் பயில எனக்கு வாய்ப்பளித்த காவேரி மகளிர் கல்லூரி ரெட்டி கல்வி அறக்கட்டளையினருக்கும், எம்மை வழிநடத்தும் எம் கல்லூரி முதல்வர் முனைவர் வெ.சுஜாதா அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்கு உதவி ஊக்கம் அளித்த தமிழாய்வுத்துறைப் பேராசிரியர்கள்அனைவருக்கும் என் நன்றி.

அவ்வாய்வுக் கட்டுரை சிறப்பாக அமையும் நோக்கில் ஆய்வு தொடர்பான கருத்துக்களை வழங்கி என்னை வழிநடத்தி கட்டுரையைச் செம்மைப்படுத்திய எம்நெறியாளர் முனைவர்.அ.இரா. கோமதி அவர்களுக்கு எனது நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

ந.சுப்புரெட்டியார் அவர்களின் படைப்பில் ஆய்வு செய்ய வாய்ப்பளித்து காமாட்சி அம்மாள் உதவித்தொகை நல்கிய ந.சுப்புரெட்டியர் நூற்றாண்டுநினைவு அறக்கட்டளையினருக்கு எம் நெஞ்சார்ந்த நன்றினை சமர்ப்பிக்கின்றேன்.

என் பெற்றோர் நா. சீனிவாசன், சீ. மல்லிகா உடன்பிறப்பு சீ. தேசிங்குராஜா ஆகியோருக்கு நன்றி.

ஆய்வுக்கு தேவையான நூல்களை தந்து உதவிய கல்லூரி நூலகத்திற்கும், எம் துறை நூலகத்திற்கும், துணை நின்ற தோழி மோகனாவிற்கும் நன்றி.

ஆய்வாளர் கையொப்பம்

# பொருளடக்கம்

## சுருக்கம் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ.ஆ | - | உரையாசிரியர் |
| கு.எண் | - | குறள் எண் |
| ப.எண் | - | பக்க எண் |
| பக் | .- | பக்கங்கள் |
| பா.எண் | - | பாடல் எண் |
| பா.அடி | - | பாடல் அடி |
| நூற்.எண் | - | நூற்பா எண் |
| மேநூ | - | மேலே கூறப்பட்டுள்ள நூல் |

# முன்னுரை

பாரதியார் இயற்றியுள்ள பாஞ்சாலிசபதம் இருபதாவது நூற்றாண்டில் ஒரு தமிழ் காப்பியம். தருமன் இந்திப்பிரத்ததில் இராசசுரயப் பெரு கேள்வி முடித்த பிறகு துரியோதனன் முதலிய கௌரவர்கள் அத்தினாபுரத்தில் மண்பம் ஒன்றில் சமைத்துப் பாண்டவர்களுக்கு அழைப்பு அனுப்பி அவர்களை அவமானப்படுத்திய கதைப் பகுதியைக் காப்பியப் பொதுருளாகப் கொணடு ஆக்கப் பெற்றுள்ள.ந.சுப்புரெட்டியார் தமிழ்நாடு.திருச்சி மாவட்டம் பெரகம்பி என்ற ஊரில் பிறந்தார்

## ஆய்வு தலைப்பு

ந.சுப்புரெட்டியாரின் நோக்கில ் பாஞ்சாலிசபதம் என்பது இவ் ஆய்வின் தலைப்பாகும்.

## ஆய்வு நோக்கம்

ந.சுப்புரெட்டியாரின் பாஞ்சாலிசபதம் பற்றிய கருத்துக்களைஆய்வதே இவ்ஆய்வின் நோக்கம்.

## ஆய்வு கருதுகோள்

பாஞ்சாலி சபதத்தில் உள்ளசமூகச் சிந்தனைகள் இவ்வாய்வின ் கருதுகோளாகஅமைகின்றது.

## ஆய்வு எல்லை

ந.சுப்புரெட்டியாரின் பாஞ்சாலி சபதம் என்னும் நூல் இவ்வாய்வு எல்லையாக அமைகின்றது.

## ஆய்வுமுறை

இவ்வாய்வு பகுப்பு மற்றும் தொகுப்பு ஆய்வு முறையாகஅமைகின்றது.

**ஆய்வேட்டின் அமைப்பு**

இந் ஆய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக முன்று இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன.

அவை:

| | | |
|---|---|---|
| இயல்1 | : | நூல் அமைப்பு |
| இயல்2 | : | கதைமாந்தர்கள் |
| இயல்3 | : | சமூகச்சிந்தனை |

**இயல் ஒன்று**

நூல் அமைப்பு,கதைச் சுருக்கம்,சூதாட்டமும் இழப்பும்,பாஞ்சாலி சபதம், முதலிய செய்திகள் முதல் இயலில் இடம்பெற்றுள்ளன.

**இயல் இரண்டு**

கௌரவர்கள், பாண்டவர்களின் பிறப்பு காவியத் தலைவி திரௌபதி பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன.

**இயல் மூன்று**

சமுகசிந்தனை குறித்தசெய்திகள் இடம்பெற்றுள்ளன.

**முதன்மைஆதாரம்**

இவ்ஆய்விற்கு ந.சுப்புரெட்டியார் அவர்களின் பாஞ்சாலி சபதம் என்ற நூல் முதன்மை ஆதாராமாக அமைகிறது.

**துணைமைஆதாரங்கள்**

பாஞ்சாலி சபதம் குறித்த செய்திகள் இடம்பெறும் இலக்கியங்கள் துணைமை ஆதாரங்களாக அமைகிறது

# இயல்-1

## நூல் அமைப்பு

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற இந்தியக் கவிஞர்களில் ஒருவர் சுப்பிரமணிய பாரதியார் இவரால் எழுதப்பட்ட காப்பியம் பாஞ்சாலி சபதம்.

**நமக்குத் தொழில் கவிதை**

**நாட்டிற் குழைத்தல்**

**இளமைப் பொழுது சோராது இருத்தல்**

என்று கூறினார் பாரதியார் இமைப்பொழுதும் சோராதிருத்தல் என்பது தான் இப்பாடலின் உயிர்நாடி. மக்கள் மனங்களில் ஆழமாகப் பதிந்துள்ள இதிகாசங்களுள் ஒன்றான மகாபாரதத்தில் நிகழ்ச்சி ஒன்றினைக் காப்பியத்தின் மையப்பொருளாகப் பாரதியார் தெரிவு செய்து படைத்துள்ளார். பாரதியாருக்கு முன்னரே கம்பரும்(இரணியின் கதை) வில்லி புத்தூராழ்வாரும் (நளாயினிகதை) இதுபோன்ற ஒரு கிளைக் கதையைத் தமிழாக்கியுள்ளனர். ஆனால் இவ்விருவருமே சம காலக்கண்ணோட்டத்துடன் அணுகவில்லை என்றே குறிப்பிடலாம். பாரதியார் அந்தப்பழைய நிகழ்வினை சமகால உணர்வின் அடிப்படையிலேயே படைத்திருக்கிறார்.

**“முன்னோர் மொழி பொருளே**

**யன்றி அவர் மொழியும்**

**பொன்னே போற் போற்றுவம்”**

என்ற நன்னூலார் கூறும் மரபும் இதற்கு வழிகாட்டியாக அமையும் என்று பாரதியார் கூறிகிறார்.

பாண்டவர்களின் பெருமையைக் கண்டு பொறாமை கொண்டான் துரியோதனன். தனக்குச் சேரவேண்டிய புகழ் தருமனுக்குச் செல்வதை நினைத்துக் கோபம்கொண்டான். பாஞ்சாலி, பலர் கூடியிருக்கும் அவையில் துரியோதனனை பார்த்துச் சிரித்ததும் கேலி செய்ததும் மீண்டும்

துரியோதனனைக் கோபமூட்டியது. தாய்மாமன் சகுனியின் மூலமாகப் பாண்டவர்களை வஞ்சனையாகச் சூதாட்டத்தில் ஈடுபடுத்தி, நாட்டையும் பொருளையும் அபகரித்து, காட்டுக்கு அனுப்பி வாழுமாறு செய்துவிடுகிறான், துரியோதனன் இந்நிலையில் பணயப் பொருளாகத் தன்னை வைத்து விளையாடிய பாண்டவர்களைப்பார்த்து எதிர்ப்புக்குரல் கொடுக்கிறாள் பாஞ்சாலி. அடிமையாக்கப்பட்ட பாஞ்சாலியைத் துகிலுரிதலில் கண்டனக்குரல் ஒலிக்கிறது.

**நூலின் அமைப்பு:-**

பாஞ்சாலி சபதம்' இரண்டு பாகங்களையும் ஐந்து சருக்கங்களையும் கொண்டது. முதற்பாகம் அழைப்புச் சருக்கம், சூதாட்டச்சருக்கம் என இரண்டு சருக்கங்களைக் கொண்டது. இரண்டாம் பாகம் அடிமைச்சருக்கம், துகில்உரியல் சருக்கம், சபதசருக்கம் என மூன்று சருக்கங்களைக் கொண்டது. ஒவ்வொருபாகமும் கடவுள்வாழ்த்துடன் தொடங்குகிறது. பராசக்தி, வாணி ஆகிய தெய்வங்களைப் பற்றிய கவிதைகள் ஆகும் பாண்டவர்களின் பெருமையைக் கண்டுபொறாமை கொண்ட துரியோதனன், பாண்டவர்களை அழிக்கச் சகுனியின் சூழ்ச்சியுடன் திருதராட்டிரன் இசைவுடன் விதுரனை அனுப்பிப் பாண்டவர்களைச் சூதுக்கு அழைக்கின்றான். சூதாட்டசருக்கத்தில், சகுனியின் சூழ்ச்சி, சூது திறமை, தருமன் நாட்டை இழந்து விடுவது பற்றி குறிப்பிடபடுகிறது. அடிமை சருக்கத்தில், சூதாட்டத்தின் மதிமயக்கத்தில் தன்னை இழந்த தருமன் தன் தம்பியர் நாழ்வரையும் இழக்கும் நிலை சித்தரிக்கப்படுகிறது.

துகிலுரிதல் சருக்கத்தில் தருமனிடத்தில் எதுவும் இல்லாத நிலையில் திரௌபதியை பகடைப் பொருளாக வைத்து இழக்கிறான். திரௌபதியை அடிமைப்பட்டவர்களாக கருதி, துரியோதனன் துற்சாதனனை அழைத்து திரௌபதியைச் சபையில் துகிலுரியும்மாறு கட்டளையிடுவது காட்டப்படுகிறது. சபதசருக்கத்தில் திரௌபதி துகிலுரியபடலும் கண்ணன் அவளை காத்தலும், பீமன், அருச்சுனன்,திரௌபதி ஆகியோர் சபதம்

மேற்கொள்ளுதலும் காட்டப்படுகிறது. இவ்வாறு பாரதியார் கதையமைப்பினை வைத்து முடித்துள்ளார்.

**கதைச் சுருக்கம்**

பாரதத்தில் சூதுப்போர் சருக்கத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்தது. காப்பியப்பொருளைக் தேர்ந்தெடுக்க பின்னர் அதில் வரும் நிகழ்ச்சிகளை மனம் கவரும் வண்ணம் தன் கற்பனையினால் **புணர்ப்பதில்** இதன் பொருள் திறம் வெளிப்படுகின்றது. நிகழ்க்கிகளின், புணர்ப்பும் காவியத்தை சிறப்புற செய்கின்றது. உயிர்ப்பு ஒருமைப்பாட்டையும் உண்டாக்கி விடுகிண்றது. நிகழ்ச்சிகளின் புணர்ப்பை கதை கரு என்றும் வழங்குவர். பழைய கதையைப் புதிய காவியமாக சிறப்புற செய்வது எளிதென்று. **அ்.்.து உயரிஒலியுடன் ஒலிரும்** கவிதை புனையும் ஆற்றலைப் பெற்ற மேதையர்களே செய்யமுடியம். இந்தமுறையில் நோக்கினால் பாஞ்சாலி சபதம் பாரதியாரின் கவிதை திரன் தனி வெற்றியாக திகழ்வதை காணலாம்.‘ பாண்டவர்கள் **இராசசூயம்ப் பெருவேல்விசெய்து** பெற்ற பெரும் புகழ் துரியோதனனின் மனத்துப் பொறாமைத் தியை மூட்டுகின்றது. இந்தப் பொறாமைதீயே பாரத போருக்கும் வித்தாகின்றது. துரியோதனன் பொறாமையால் படும் மனவே தனையையும் உள்ளக்கு குமுறலையும் கவிஞர் இதிகாசத்திற்கேற்ப விரிவுடன் அழகுபெறச் சித்தரித்திருப்பது சிந்தித்துச் சிந்தித்துச் மகிழ்வதக்குறியது.

**“காண்தகு வில்லுடை யோன் - அந்தக்**
**காளை அருச்சுனன் கண்களிலும்**
**மாண்தகு திறல் வீமன்-தட**
**மார்பிலும் என திகழ் வரைந்துள்ளதே**. [1]

என்று துரியோதணிின் மனநிலையைப் புதிய அழகுடன் அவனே கூறுவதாக அமைந்துள்ள வரிகளுக்கு ‘அட்சரலட்சம்’கொடுக்கலாம் என்று பழையமரபு முறையில் சொன்னாலும் மனநிறைவு ஏற்படவில்லை. அவற்றில்

துரியோதனனின் பொறாமைத் தீ கொழுந்து விட்டுப் பொறிகளுடன் கிளம்புவதை மானசீகமாக காணமுடிகின்றது. இந்தக் கட்டத்தில் துரியோதனின் மனநிலையைக் கவிஞர் மக்கள் மனோத்தத்துவ உண்மைகள் பொலிந்து திகழுமாறு புனைந்து காட்டுவது நம்மை இலக்கியச் சுவைகளில் ஒரு முடிவுக்கு கொண்டு செலுத்துகின்றது. பொறாமைத் தீபடுத்தும்பாட்டை.

**“உன்றிறிறத்தொரு கல்லெனும் நெஞ்சன்.**
**வானம் வீழினும் அஞ்சுதல் இல்லான்,**
**குன்றமொன்று குழைவுற்று இளகிக்**
**குழம்புபட்டழி வெய்திடும் வண்ணம்**
**கன்று பூதலத்துள்ளுறை வெம்மை**
**காய்ந்தெழுந்து வெளிப்படல் போல**

**நெஞ்சத்துள்ளோர் பொறாமை எனுந்தீ**
**நீள்வதால் உள்ளம் நெக்குருகிப்போய்,**
**மஞ்சன் ஆண்மை மறத்திண்மை மானம்,**
**உன்மை யாவும் மறந்தனனாகிப்**
**பஞ்சையாமொரு பெண்மகள் போலும்**
**பாலர் போலும் பரிதவிப் பானாய்”** [2]

என்று எடுத்துக்காட்டுகின்றார் கவிஞர். துரியோதன் தன் நிலை குலைந்து நிற்கின்றனான்.

**“யாதுநேரினும் எவ்வகையானும்**
**யாது போயினும் பாண்டவர் வாழ்வைத்**
**தீது செய்து மடித்திட எண்ணிச்**
**செய்கையொன்ற திறியான் தகை செய்தி”** [3]

என நிற்கின்றான், ‘வத்தி வைப்பதில்’ வல்லவனாக சகுனி மாமனைச் சரண் எய்தி ஏது செய்வோம் என்றும் சொல்லி நகைக்கின்றார், நெஞ்சிற் குமுறிக் கொண்டிருந்த அனைத்தையும் அவன்’திருமுன்’ கொட்டி விடுகின்றான்.

மாமன் யோசனைப்படி பஞ்ச பாண்டவர்களை வஞ்சனையாகச் சூதாட்டத்திற்கு இழுக்கின்றான். சூதின் முடிவு ‘பாஞ்சாலியின் சபதத்திற்கு’ வித்திடு கின்றது. அதிலிருந்து தான் பரதப்போரும் முளைத்து வளரத் தொடங்குகின்றது.

**‘தேவி பராசக்தி ஆணை யுரைத்தேன்**
**பாவி துச்சாதனன் செந்நீர்- அந்தப்**
**பாழ்த்துரி யோதனன் ஆக்கை இரத்தம்,**
**மேவி இரண்டுங் கலந்து - குழல்**
**மீதினிற் பூசிநறுநெய் குளித்தே**
**சீவிக் குழல்முடிப் பேன்யான் - இது**
**செய்யுமுன் னேமுடியேன்’** [4]

என்பதை திரௌபதி உரைத்த விதம் கவிஞர் தாம் வழிபடும் தெய்வமான பராசக்திமீது ஆணை வைத்தே சபதமிடும்படி செய்யும் திறம் சிந்தித்தற்குரியது. இந்தச் சபதமே இச்சிறு காவியத்தின் மகுடமாகத்திகழ்கின்றது.

காவியத்தின் இறுதிப் பகுதிகளாகிய துகிலுரிதல் சருக்கமும் சபதச் சருக்கமும் அற்புதமான படைப்புகள் என்றே சொல்ல வேண்டும். இந்தக்கட்டங்களில் பாரதியையும் வில்லியையும் ஒப்பிட்டுநோக்கினால் பாரதப்போர் புலனாகும். பாண்டவர்கள் அனைத்தையும் தோற்ற பிறகு துரியோதனனின் அவையில் நடைபெறும் அக்கிரமங்கள் வில்லிபாரதத்தில் மிகச்சாதாரண முறையில் தான் சித்திரிக்கப் பெற்றுள்ளன. பாரதியாரின்

காப்பியத்தில் இக்கட்டங்கள் உயர்ந்த சோக நாடகத் தன்மையுடன் கையாளப் பெற்றுள்ளன.

தருமன் சகோரதர்களையும் தன்னையும் சூதில் தோற்ற பிறகு சகுனி துரியோதனனை நோக்கிப் பேசுகின்றான்.

**“இன்னும் பணயம் வைத் தாடுவோம் ,- வெற்றி**
**இன்னும் இவர்பெற லாகுங்காண்**
**பொன்னும் குடிகளும் தேசமும் - பெற்றுப்**
**பொற்பொடு போதற் கிடமுண்டாம்! - ஒளி**
**மின்னும் அமுதமும் போன்றவள் - இவர்**
**மேவிடு தேவியை வைத்திட்டால், அவள்**
**துன்னும் அதிட்ட முடையவள் - இவர்**
**தோற்ற தனைத்தையும் மீட்டலாம்.”** [5]

இவ்வாறு மாமன் உரைத்த பேச்சைக் கேட்டவுடன் துரியோதனன் ‘நன்று நன்று’ என்று தன் ஒப்புதலைத் தெரிவிக்கின்றான். அறக்கோமகனும் ‘பாஞ்சால நாட்டின் தவப்பயனை, சூதினில் பணயம் என்றே அந்தக் ‘கொடியவர் அவைக் களத்தில் வைத்திடக் குறித்து விடுகின்றான்’.

இந்தக்காட்சியை சித்திரிக்கும் கவிஞருக்கே துக்கம் தாங்கவில்லை சினம், அருவருப்பு கருணை இவையெல்லாம் கலந்த உணர்ச்சியுடன் கவிக் கூற்றாகத் தம் உள்ளக் குமுறலைக் கொட்டுகின்றார்.

**“வேள்விப் பொருளினை யே - புலைநாயின்முன்**
**மென்றிட வைப்பவர் போல,**
**நீள்விட்டப் பொன்மாளி கை – கட்டிட்பேயினை**
**நேர்த்து குடி யேற்றல் போல்.**
**ஆள்விற்றுப் பொன்வாங்கியே - செய்தபூணையோர்**
**ஆந்தைக்குப் பூட்டுதல் போல்,**

**கேள்விக்கொடுவரில் லை. உயிர்த்தேவியைக்**

**கீழ்மக்கட் காளாக்கி னான்.**

**என்ற பகுதியில் ஒலிக்கின்றதைக் கேட்கின்றோம்.'' [6]**

சென்னை மாநகரில் காய்கறிச்சந்தையில் விற்போரிடமும் வீட்டுக்கு வீடு வந்து பழையதாள்களை வாங்குவோரிடமும் அவர்கள். வைத்துள்ள தராசும் அவர்கள் எண்ணப்படி வணங்கிக் கொடுப்பதுபோல் சகுனியின் தாயக்காய்களும் அவன் ஏவள்படி செயற்படுகின்றன.

**இருபகடை போடென் றான் - பொய்ம்மைக் காய்களும்**

**இருபகடை போட்டவே. [7]**

இந்த அடிகளைப்படிக்கும் போதே நமது கண்கள் குளமாகின்றன.

துரியோதனனின் அவையிலுள்ள கௌரவர் கூட்டம் தாளம் போடுகின்றது. சிலர்தனித்தனியாக் குதித்தும்கொக்கரித்தும் ஆடுகின்றனர். இக்காட்சியைக்,

**''என்றுபல சொல்லுவான் - துரியோதனன்**

**எண்ணி எண்ணிக் குதிப்பான்:**

**குன்று குதிப்பது போல்- துரியோதனன்**

**கொட்டிக் குதித் தாடுவான்.'' [8]**

என்று காட்டுவார் கவிஞர். 'கரியோ ராயிரத்தின் வலி காட்டிடுவோன்' அல்லவா? யானையைப் போலில்லா விட்டாலும் பெரிய உடலையாவது கொண்டிருத்தல் வேண்டும். இதனைத் தெளிவுறுத்தவே 'குன்று குதிப்பது போல்' என்ற உவமையைக் கையாண்டுள்ளார். துரியோதனனின் மனது குழப்பமுற்றுக் கௌரவர் கூட்டம் வகைதொகை யொன்று மின்றி களித்துக் கூத்தாடியதைத் தம்மால் எடுத்துக் கூறமுடியாதென்பதை,

**“அன்று புரிந்ததெல்லாம் - என்றன் பாட்டினிலே**

**ஆக்கல் எளிதாகு மோர்?”** [9]

என்று சொல்லித் தலைக்கட்டுகின்றார்.

நெஞ்சு பொறுக்கமுடியாத பல அக்கிரமங்கள் அரசவையில் நடைபெறுகின்றன. அவையிலிருந்த.

**“கேள்விபல உடையோர், கேடிலா நல்லிசையோர்**

**வேள்வி தவங்கள் மிகப்புரிந்த, வேதியர்கள்**

**மேலோர்.”** [10]

முதலிய யாவரும் அவ்வித செயல்களைத் தடுக்க முடியாது மனஞ் சோர்ந்து மங்கையர்போல் வாளா இருக்கின்றனர். அறமே வடிவெடுததாற்போன்ற தருமன் அனைத்தையும் பொறுத்துக் கொண்டு ‘சும்மா’ ‘இருக்கின்றான். பாண்டவரை’ மின்செய் கதிர் விழியால் வெந்நோக்குகின்றாள் திரௌபதி.

**சூதாட்டமும் இழப்பும்!.**

திருதராட்டிரனோ பதில் சொல்ல முடியாமல் வீற்றிருக்கின்றான். துரியோதனன் பதில் பேசுகிறான். விதுரனைத்திட்டுகிறான். பழிக்கிறான். இதனால் விதுரனும் வாய்மூடித் தலைக்குனிந்து அமர்கிறான்.

தருமன் தன் நாட்டைப் பணையமாக வைத்து இழக்கிறான். மீண்டும் சகுனி, தருமனைப்பார்த்து தம்பியர் நால்வரையும் பணையமாக வைத்து சூதாடினால் இழந்த அனைத்தையும் பெற்று விடலாம் என்று சொல்ல தருமன் அவ்வாறே தம்பியரைப் பணையப் பொருளாக்கி விளையாட அதுவும் தோல்வியையே தருகிறது. தருமனுக்கு அவன் தன்னையும் இழந்தபின்னர், பாஞ்சாலியையும் பணையமாக வைத்து இழந்து விடுகிறான். தனது

ஆசையை நிறைவேற்றிய மாமன் சகுனியைக் கட்டிப்பிடித்து மகிழ்ச்சியால் துரியோதனன் கூத்தாடினான்.

**பாஞ்சாலியின் சபதம்:-**

பாண்டவர்கள் கடுந்துயரத்தில் மூழ்கினர். இந்நிலையில் துரியோதனன் பாஞ்சாலியை மன்றத்துக்கு அழைத்துவரச் சொல்லித் தேர்ப்பாகனை அனுப்புகிறான். அவள் வர மறுக்கிறாள். பின்பு, துச்சாதனை அனுப்பி இழுத்து வரும்படி சொன்னான் துரியோதனன் துச்சாதனன் சென்று பாஞ்சாலியை அழைத்தான். கடும் கோபத்துடன் பேசினாள். உடனே கூந்தலைப் பற்றி இழுத்து வந்தான். சபையில் நின்றிருந்த ஐவரையும் பார்த்துக் கடுமையாகப் பேசினாள் பாஞ்சாலி. அந்நேர்ததில் பாஞ்சாலியின் சேலையைப்பபற்றி இழுக்குமாறு கர்ணன் துச்சாதனனுக்குச் சொல்ல துச்சாதன் பாஞ்சாலியின் ஆடையைக் களைந்தான்.

பாஞ்சாலி, கண்ணனிடம் வேண்ட, கண்ணனின் அருளால் பாஞ்சாலியின் துகில் வளர்ந்துகொண்டே போகத் துச்சாதனன் தலை கவிழ்ந்தான் இதனையடுத்து. கடுங்கோபங்கொண்ட **வீமன்,** துரியோதனனையும்,துச்சாதனனையும் போர்களத்தில் கொல்வேன் என்று சபதம் மேற்கொண்டான். இறுதியில் பாஞ்சாலி துச்சாதனனின் இரத்தத்தையும் துரியோதனின் இரத்தத்தையும் கலந்து அவிழ்க்கப்பட்ட எண் கூந்தலில் எண்ணெயாகப் பூசிமுடிப்பேன். அது நிகழாத வரைக்கும் என் கூந்தலை முடியேன் என்று சபதம் செய்தாள். இந்நேரத்தில் ஐம்பெரும் பூதங்கள் இப்புவி தருமனுக்கே எனச் சாட்சியளிக்கும்படி பேரொலி எழுத்தது. இவ்வாறு பாஞ்சாலி சபதத்தின் கதைமுடிகிறது.

**“அன்னை ‘பாஞ்சாலி -சபதம்’**

**அறைதல் கேட்டேனடா!**

**முன்னெக்கதையெல்லாம் -கண்ணன்**

**முன் நடந்ததடா!”** [11]

என்ற பட்டிக் காட்டானின் அநுபவம் ஏற்பட்டால் தான் படிப்போர் இக்காவியத்தைச் சுவைத்தர்கள் ஆவார்கள் அப்படி இந்நனுபவம் ஏற்பட்டவர்கள் எத்துணை பேர் இருக்க முடியும்?

**பாஞ்சாலி சபதம்:-**

பாரதியார் இயற்றியுள்ள பாஞ்சாலிசபதம் இருபதாம் நூற்றாண்டில் ஒரு தமிழ் காப்பியம். தருமன் **இந்திரப்பிரத்ததில்** இராசசுரயப் பெரு கேள்வி முடித்த பிறகு துரியோதனன் முதலிய கௌரவர்கள் அத்தினாபுரத்தில் மண்டபம் ஒன்றில் சமைத்துப் பாண்டவர்களுக்கு அழைப்பு அனுப்பி அவர்களை வரவழைத்தனர், பின்பு வஞ்சகமாகச் சூதுக்கிழுத்து, அவர்களை அவமானப்படுத்திய கதைப் பகுதியைக் காப்பியப்பொருளாகக் கொண்டு ஆக்கப் பெற்றுள்ள. பழைய கதையைக் கையாண்டு அதற்குப் புதுஉருவமும் புத்துயிரும் தந்து காப்பிய படைப்பு செய்வது கவிஞனின் தனிச்சிறப்பாகும் பழைய கதையைப் புதிய காப்பியமாக வார்ப்பது நாம் நினைப்பது போல் அவ்வளவு எளிதல்ல, உயிரொளி வீசும் கவிதா சக்தியைப் பெற்ற பெரிய கவிஞர்களால்தான் அவ்வாறு செய்ய முடியும். விவிலியத்தில் காணப்பெறும் சாத்தானின் வீழ்ச்சியைக் குறித்து அழியாப் புகழுடன் விளங்கும் துறக்க இழப்பு போன்ற காப்பியப் படைப்பும், மேனாட்டுவரலாற்று நூல்களில் காணக் கிடக்கும் ஒரு சில செய்திகளைக் கொண்டு ஜீலியஸ் சீஸர், நாலாம் ஹென்றி, ஐந்தாம்ஹென்றி, இரண்டாம் ரிச்சார்டு போன்ற இறவாத புகழுடைய நாடக இலக்கியங்களின் படைப்பும் ஒப்புயர்வற்ற ஒருமிலிட்டன ஒரு ஷேக்ஸ்டியர் போன்ற பெருங் கவிஞர்களால் தான் ஆக்க முடியும். அதுபோலவே பாரதியின் படைப்பும் கவிதைச் சுவையுடனும், நாடகப் பண்புகளுடணும் புதிய கருத்துகளுடனும் இயங்குகின்றது. கிட்டத்தட்ட இரண்டாயிரத்து ஐந்நூற்றுக்கு மேற்பட்ட அடிகளையுடைய பாஞ்சாலி சபதம் காப்பியப் படைப்பில் பாரதியின் சிறந்த வெற்றியென்று சொல்வது மிகை ஆகாது.

பாரதியின் ‘பாஞ்சாலி சபதம்’ ஒரு காப்பிமாகுமா? காப்பியத்திற்குரிய இலக்கணம் இதற்குப் பொருந்துமா? ஏஎந்தெந்த முறையில் பாரதிதன் திறமையைக் காட்டுகின்றார்? என்பன போன்றவற்றை ஈண்டு ஆராய்வோம். நமது மொழிக்குரிய பெருங்காப்பிய இலக்கணத்தையும் மேனாட்டார் காப்பியங்களைப் பற்றிக்கூறும் கருத்துகளையும் முன்நிறுத்தி ஆராயத்தொடங்குவோம் பெருங்காப்பிய இலக்கணத்தைத் தண்டியலங்காரம்,

**பெருங்காப்பியநிலை பேசுங்காலை**
**வாழ்த்து வணக்கம்வருபொருள் இவற்றி னென்(று)**
**ஏற்புடைத் தாகி முன்வர இயன்று.**
**நாற்பொருள் பயக்கும் நடைநெறித்தாகித்**
**தன்நிகர் இல்லாத் தலைவனையுடைத்தாய்**
**மலைகடல் நாடு வளநகர் பருவம்** [12]

இருசபர் தோற்றம் என்(று)இனையன புனைந்து கூறிய உறுப்பில் சில குறைந்து இயளனும் வேறுபாடு இன்று என விளம்பினர் புலவர் கூறும்

**மாற்றம் ஒரு திறப் பாட்டினும் பலதிறப்பாட்டினம்**
**வரையும் பாடையும் விரவியும் வருமே.** [13]

என்று காப்பியங்களின் யாப்டைக்குறித்துப் பேசும். புறநடையும்˙.மேலும்

உரைநடையும் பாநடையும் விரவிவரும் காப்பியத்தை தொல்காப்பியம் தொன்மை என்று குறிப்பிடும். வடநூலார் இதனைச் சம்பு என்று. வழங்குவர்

மேனாட்டு இலக்கிய வரலாற்றைப்பார்த்ததில் அங்கம் இந்தப் பெருங்காப்பிய அமைப்பு காலத்திற் கேற்றவாறு மாற்றம் அடைந்துள்ளதைக் காணலாம். மேனாட்டு ஆசிரியர்கள் அனைவருமே வேராய் அமையும் வர்ஜிலையும் தமக்கு முன் மாதிரியாகக் கொண்டு காப்பியங்களை இயற்றியுள்ளனர். ஆங்கில மகா கவிஞரானமில்ட்டன் மேற்கூறிய இருவரைக் பின்பற்றியே தமது துறக்க இழப்பினைப்படைத்தா ரெனினும் அவருக்கு

முன்பிருந்த கவிஞர்களைவிடத் தமது காப்பியப் படைப்பால் அழியாப்புகழ் பெற்றார்  துறக்க இழப்பின் எதிர்த்தலைவனாகிய சாத்தானின் விடாப்பிடியான தீவிரமானமனமே துனைதற்காலமாந்தரின் அறநெறிக்கருத்தினை எடுத்துக் காட்டும் படியாக அமைந்துள்ளது.  இதுகாரு பெருங்காப்பியத் தலைவர்கள் மனிதரில் ஒருதேவன் போல் இருந்தனர் ஆனால் மில்ட்டனின் காப்பியத்தலைவன் ஒரு தேவனாகவே இருக்கின்றான். எல்லாக்காலத்திற்லும் பொருந்தும் படியான பல அரிய கருத்துகளைக் கொண்டு காப்பியத்தைப் படைத்துள்ளார். மில்ட்டன். மேனாட்டு அறிஞர்கள் பெருங்காப்பியங்கள் பற்றிக்கூறியுள்ள  கருத்துக்களை 1) தேர்ந்தெடுக்கும் கதைப்பொருள், 2)நிகழ்ச்சிகளின் புணர்ப்பு,3) காப்பியத்தின் ஒருமைப்பாடு, 4) கதைமாந்தர்கள்தன்படைப்பு ,5) தெய்வீக சம்பந்தமான கூறுகள் 6) காப்பிய நடை என்று ஆறு பகுதிகளில் அடக்கலாம். தண்டியாரின் கருத்துகளையும் இக்கருத்துகளையும் அடிப்படையாகக் கொண்டு பாஞ்சாலி சபதத்தை ஆராய்வோம்.

தண்டியாரின் கருத்துப்படி நூல்இறைவாழ்த்துடன் தொடங்கப்பெறுதல் வேண்டும். பாரதியார் வேதத்திதல் குறிப்பிடப்பெறும்பிரும்மத்தையே வணங்கி நூலை தொடங்குகின்றார் வேதத்தில் பிரும்மம் ஓம் என்றே வழங்கப்பெறுகினறது. இந்தப்பிரும்மம், அங்கு இங்கு எனாதபடி எங்கும் நிறைந்திருப்பதால். ‘ஆம் என்றும் குறகிகப்பெறுகின்றது வடமொழியல் ‘ஓம்’ என்னும் சொல்லுக்கு ‘ஆம்’ என்ற பொருளும் உண்டு. எவ்விடத்தும் ‘இல்லை’ யாதலின்றி ‘ஆம்’ என இருத்தல் பற்றியே வேத்தில் பிரும். திருப்பெயர் கொடுக்கப் பெற்றுனள்ளது. தமிழ்க்காப்பியகளில் பிரும்மதைக்காபீயாக அமைத்தது பாரதியார் மேற்கொண்ட புதுமையாகும். அடுத்து சொல்லின் செல்வியாகிய நாவின் கிழந்தியாம் கலைமகளை வழிபடுகின்றார் ‘அறம்’ பொருள், இன்பம் ‘வீடு’ என்ற நாற்பொருள்களில் காவியம் சில அறக்கருத்துகளை தன்னுளே கொண்டிலங்குகின்றது. சூதாட்டத்தால் வரும் தீமைகளை எண்ணி அச்செயலைத் தவிர்க்குமாறு

திருதராட்டிரன் தன் மகனை வேண்டுகின்றான் அண்ணன் வாயிலாக துரியோதனனின் தவறாடல் சதியைக் கேட்டதும் விதுரன்,

**போச்சுது! போச்சுதுபாரதநாடு!**
**போச்சுது நல்லதும்! போச்சுதுவேதம்!**
**ஆச்சரியக்கொடுங்கோலங்கள் காண்போம்.,**
**ஐய இதனைத் தடுத்தல் அரிதோ?** [14]

என்று கூறிபெருந்துயர் அடைகின்றான். தருமனும் இக்கவறாடல் 'இதனை் கெடுத்கும் இழி தொழில் என்கின்றான். மேலும்,

**என்றனை வஞ்சித்தென் செல்வத்தைக் கொள்வோர்**
**என்ற னைக் கிடர் செய்பவரல்லந்,**
**முன்னை நின்றதோர் நான்மறைகொல்வார்,**
**மூதுணர்விற கலைத்தொகைமாய்ப்பார்,**
**பின்னை என்னுயிர்ப்பாரத நாட்டில்**
**பீடை செய்யுங் கனியை அழைப்பார்** [15]

என்று சகுனியிடம் கூறுகின்றான் நாலைப் பயிலும்போது இன்பம்' இலக்கிய இன்பம் - பயப்பதை உணர்கின்றோம். இந்நூலின் தலைவி பாஞ்சாலி, இவள் தன்நிகர் இல்லாத் தலைவியாக விளங்குகின்றான் சிலப்பதிகாரக் கண்ணகிபோல

அத்தினப்புரத்தின் வருணனை நூலின் தொடக்கத்தில் காணப்பெறுகிறது.

**அத்தின புரமுண்டாம்1-இவ்**
**வவனியிலேயதற் கினணியலையாம்;**
**பத்தியில் வீதிகளம்- வெள்ளைப்**
**பனிவரை போற்பல மாளிகையாம்.;** [16]

என்று தொடங்கும் வருணனையில் சோலைகள், வாவிகள்,வேள்விச்சாலைக்குள் மந்திர கீதங்கள் முழுங்கும் இடங்கள் சாத்திர ஆராய்ச்சிக் கழகங்கள் முதலியவை காட்டப் பெறுகின்றன. தற்கால நிலையை அறிந்த.

**சிந்தையிலற முண்டாம் - எனிற**
**சேர்த்திருங் கலிசெயும் மறமுமுண்டாம்.**
**மெய்த்தவர் பலருண்டாம். - வெ'றும்**
**வேங்கள் பூண்டவர் பலருமுண்டாம்;** [17]

என்று அந்நிலை அத்தினபுரத்திலிருப்பதாகக் காட்டுவர் நகரத்தை வருணிக்கும் போது நல்லவற்றையே கூறுவது கவிஞர்கள் மேகொண்ட மரபு. ஆனால், தீயவற்றையும் மறைக்காது காட்டுகின்றனார். கவிஞர். இதுவும் பாரதியாரின் புதுமைகளில் ஒன்று. இங்ஙனம் வளநகர் காட்டப்பெறுகின்றது.

## சான்றெண் விளக்கம்

| வ.எண் | நூல் | பக்கம் |
|---|---|---|
| 1 | பாஞ்சாலி சபதம் ஒரு மதிப்பீடு ந.சுப்புரெட்டியா் | 7 |
| 2 | பாஞ்சாலி சபதம் ஒரு மதிப்பீடு ந.சுப்புரெட்டியா் | 43 |
| 3 | பாஞ்சாலி சபதம் மூல உரை | 38 |
| 4 | பாஞ்சாலி சபதம் மூல உரை | 67 |
| 5 | பாஞ்சாலி சபதம் ஒரு மதிப்பீடு ந.சுப்புரெட்டியா் | 68 |
| 6 | பாஞ்சாலி சபதம் ஒரு மதிப்பீடு ந.சுப்புரெட்டியா் | 46 |
| 7 | பாஞ்சாலி சபதம் ஒரு மதிப்பீடு ந.சுப்புரெட்டியா் | 96 |
| 8 | பாஞ்சாலி சபதம் மூல உரை | 101 |
| 9 | பாஞ்சாலி சபதம் மூல உரை | 111 |
| 10 | பாஞ்சாலி சபதம் ஒரு மதிப்பீடு ந.சுப்புரெட்டியா் | 18 |
| 11 | பாஞ்சாலி சபதம் ஒரு மதிப்பீடு ந.சுப்புரெட்டியா் | 17 |
| 12 | பாஞ்சாலி சபதம் ஒரு மதிப்பீடு ந.சுப்புரெட்டியா் | 27 |
| 13 | பாஞ்சாலி சபதம் ஒரு மதிப்பீடு ந.சுப்புரெட்டியா் | 51 |
| 14 | பாஞ்சாலி சபதம் மூல உரை | 14 |
| 15 | மகாபரதம் | 66 |
| 16 | பாஞ்சாலி சபதம் மூல உரை | 40 |
| 17 | பாஞ்சாலி சபதம் ஒரு மதிப்பீடு ந.சுப்புரெட்டியா் | 45 |

# இயல் 2

## கதைமாந்தர்கள்

பஞ்சபாண்டவர்கள், ஐவர் அவர்கள் **தர்மன், பீமன், அாச்சுனன், நகுலன், சகாதேவன்** ஆகியோா் மாந்தீரி மூலம் பிறந்தவர்கள் ஆவா்

**பாண்டவா்களில் பிறப்பு**

யமுனை நதிக்கரையில் மதுரை எனும் நகரை் அமைத்து யாதவகுழு ஆட்சிமுறையினை நடத்திவந்தது.

சூரசேனரின் மகள் பிரதை பிரதையை குந்தி நாட்டு மன்னா் குந்தி போஜன் தத்தெடுத்து வளா்த்து குந்தி என பெயரிட்டு வந்தாா். மண வயதையடைந்த குந்திக்கு சுயம்வரம் நடந்தது. சுயம் வரத்தில் கூடியிருந்தவா்களால் பாண்டுவை தோ்ந்தெடுத்தனா்

பீஷ்மா், இரண்டாவதாக மத்திரநாட்டின் மன்னன் சல்யனின் சகோதரி மாதுரியை பாண்டுவிற்கு மணம் முடித்து வைக்கவிரும்பினாா் சல்லியலுக்கு அவரது தங்கையின் நிச்சயத்திற்கு மணியும் முத்தும் பவளமும் சீராகத் தந்துள்ளாா் பீஷ்மா் அவற்றை ஏற்றுக்கொண்டு மாத்திரியை பாண்டு விற்குமணம் முடித்துக் தந்தாா். சல்யா் பல நாடுகளை வெற்றிக்கொண்டு கப்பல் தொகையைப் பெற்றுவந்தாா் பின்பு குந்தியாலும் மாந்ரியாலும் தூண்டப்பட்டு வனவாசத்தை நாடிச் சென்றாா் பாண்டு.

வேட்டையின் போது பாண்டுவின் அம்பு பெண்மானை நோக்கிசென்றுக் கொண்டிருந்த போது அது ஆண்மானை தாக்கிவிடுகிறது மானின் அருகில் சென்று பாா்த்தப்போது. பாண்டுவுக்கு உண்மை புரிகிறது கிண்டமா என்ற முனிவரும் அவரது மனைவியும் காட்டில் சுதந்திரமாக உலவிகாதல் செய்யும் நோக்கில் தங்களது தவ வளமையால் மான்களாக உருவம் மாறியிருந்தனா். இறக்கும் நேரத்தில் கிண்டமாமுனிவா் ஒரு ஆனும் பெண்ணும் காதல் புரிவதை ஆக்ரோசமாக தடுத்து விட்டாய் உனக்கு காதல் சுகம் என்ன

என்பது தெரியாமல் போய்விட்டது. எந்த பெண்ணையும் காதல் கொண்டு தொட்டால் உடனே ‘இறந்து’ போவாய்’’ என சாபம் இட்டார் ஒரு குழந்தைக்கு தகப்பன ஆக முடியாதவன் அரசன் ஆக முடியாது. என வருந்திபாண்டு அத்தினாபுரம் செல்ல மறுத்து ‘சதஸ்ருங்க’ என்னும் வனத்தில் முனிவர்களுடன் தங்கிவிடுகிறார். இச்செய்தி அத்தினாபுரம் எட்டுகிறது. பாண்டு இல்லாத நிலையில் அத்தினாபுரத்தின் ஆட்சியை ‘பீஷ்மர் திருதராட்டிரனுக்கு’ வழங்குகிறார். சில மாதங்களில் காந்தாரி கருத்தரித்தாள் என்ற செய்தி பாண்டுவுக்கு தெரியவே ஒரு குழந்தைக்கு தந்தையும் ஆகமுடியாத நிலையில் மனழுததமும், சோர்வும்,விரக்கியும் அடைந்த பாண்டு ஒரு முடிவெடுத்தான். சுவேதகேது முனிவரின் நியதிப்படிஒரு பெண்ணின் கணவர் ஆவர். விரும்பும் ஒரு ஆனுடன் சேர்ந்து குழந்தை பெற்றுக்கொள்ளலாம். அதன்படி தன்னுடன் இருந்தகுந்தியை அழைத்து யாராவது ஒரு முனிவரின் மூலமாக ஒரு குழந்தையை பெற்றுக்கொள் என வேண்டினான். தேவர்களையே அழைக்க முடியும். போது ஏன்? முனிவர்களை அழைக்க வேண்டும். ஏனக்கூறி, தர்மத்தின் தலைவன் யமன் மூலம் யுதிஷ்ரன்(தர்மன்) மிகுந்த சக்தியடைத்த வாயு பகவான் மூலம் பீமன் தேவர்களின் தலைவனான இந்திரன் மூலம் அருச்சுனன், எனமூன்று குழந்தைகளை குந்திபெற்றாள்.

**தருமன்**:

தருமன் அல்லது யுதிஷ்பிரன் (தர்மன்) மகாபாரத்திதல் பாண்டு (மாற்றம்) குந்தி ஆகியோரின் மகன் ஆவார் இவர் பஞ்ச பாண்டவர்களில் மூத்தவர். இவர் துர்வாச முனிவரின வர்த்தககாரணமாக குந்தி ஏமகர்மன் மூலம் பிற்ந்தவர். குரச்சேத்திரப் போரில் பாண்வர்களில் தலைவராய் இருந்தவர் இவர் அததினாபுரம் (ம) இந்திரரப்பிரஸ் ஆகியவற்றின் அரசர் இவர் அனைத்து தர்ம சாஸ்த்திரங்களையும் அறிந்தவர் தருமரின் தந்தை பாண்டு முனிவர் ஒருவரால் சபிக்கப்பட்டார் அந்த சாபத்தின் விளைவாக தருமத்தில் தருமரின் தந்தை அரசபதவியைத்துறந்து தம் மனைவி யரோடு

வாழ்ந்து வந்தார் அவ்வாறு எமதருமராசன் மூலம் பிறந்த பிள்ளைதான் தருமர்.

திரௌபதி எனும் மனைவியை தன் சகோதரர்களுடன் பகிர்ந்து குடும்ப வாழ்க்கை நடத்தினர் கௌரவர்களுடன் சகோதர்கள் (மற்றும்) மனைவி திரௌபதியையும் இழந்து 13-ஆண்டுகள் வனவாசம் சென்றுபின்பு குருசேத்திரப் போரில் கௌவர்களை சென்று சூதில் இழந்த இந்திரப்பிரஸ்தம் மீட்டதுடன் அத்தினாபுரத்திற்கு அரசன் ஆனான் தருமன் எமனுக்குத் தருமன் என்னும் பெயர் உண்டு.

**பீமன்**:-

பீமன் மகாபாரதத்தில் வரும் பாண்டு மற்றும் குந்தி ஆகியோரின் மகன் ஆவார். இவர் வாயு பகவானுக்கும் குந்திக்கும் பிறந்தவர் இவர் மிகுந்த வலிமையுடையவர் இவர் காட்டில் வசித்த பொழுது இடும்பி என்ற பெண்ணை மணம் செய்து கொண்டார். இவர்களின் மகன் கடோற்கஜன், மேற்கு இந்தியாவில் பாயும் பீமா ஆறானது இவரது பெயராலேயே அழைக்கப்படுகிறது. பர்பரிகள் இரவது பேரன்.

இந்து மதம் புராணங்களில் வீமன் பாண்டவர்களில் இரண்டாவதாக பிறந்தவர் பீமனின் வலிமையை சித்தரிக்கும் பல நிகழ்வுகளை மகாபாரம் விவரிக்கிறது.குருசேத்ரப் போரில் நூறு கௌரவ சகோதரர்களைக் கொன்றதற்கு பீமன் பொறுப்பாவார் ஏறக்குறைய 19000 யானைகளின் உடல் வலிமை அவருக்கு இருப்பதாக கருதப்பட்டது.

**அருச்சுனன்**:-

அருச்சுனன் (அல்லது அர்ஜீனன் மகாபாரதக் காப்பியத்தில் இடம் பெறும் முக்கிய கதாப்பாத்திதரங்களுள் ஒருவன் இவன் பஞ்சபாண்டவர்களில் மூன்றாமவன் கிருஷ்ணரின் நண்பன், சிறந்த வில் வித்தைக்காரணான இவர், பாண்டவர் (மற்றம்) கௌரவர் களுக்கு குருவான துரோணரின் முதன்மையான சீடன் பகவத் கீதையானது குருட்சேத்திரப் போரின்முன் இவனுக்கும்

கிருஞ்ணருக்கும் இடையே நடைபெற்ற உரையாடலாக மகாபாரதத்தில் இடம்பெறுகிறது.

**நகுலன்**''-

நகுலன் பஞ்சபாண்டவர்களில் ஒருவன். பாண்டுவின் இரண்டாவது மனைவியான மாத்துருவின் புதல்வன். அஸ்வினி தேவர்களின் மூலமாக பிறந்தவன். பாண்டவர்கள் ஓராண்டு தலைமறைவாக இருந்தபோது நகுலன் கிரந்திகா என்ற மாற்றுப் பெயருடன் விராடமன்னனின் போர்க் குதிரைகளை மேற்பார்வையிடும் பணிகளைச் செய்தான். குதிரைகளை பராமரிப்பதில் வல்லவன். குதிரைகளின் மொழித் தெரிந்தவன். மிகவும் அழகானவன்.

**சகாதேவன்**:-

சகாதேவன் மகாபாரதத்தில் வரும்பாண்டுவின் இரண்டாவது மனைவியான மாந்திரியின் புதழ்வர் ஆவார். இவர் அஸ்வினி தேவர்களில் மூலமாக பிறந்தவர் இவரும் நகுலனும் இரட்டையர்கள் ஆவார். பாண்டவர் ஐவரில் சகாதேவனே இளையவர் ஆவார். மேலும் அவர்களில் சகாதேவன் புத்திக் கூர்மை மிக்கவர். தன்னுடைய சகோதரன் நகுலனைப்போல் வாள்வீச்சில் சிறந்தவராக விளங்கினார். இவர் மகத நாட்டு மன்னனான ஜராசந்தனின் மகளை மணந்து கொண்டார். சகாதேவன், பாண்வர்களின் தலைமறைவு வாழ்க்கையின் போது சந்திரிபாலன் என்ற மாற்றுப் பெயருடன் விராடமன்னனின் நூறாயிரம் பசுக்களை மேற் பார்வையிடுபவராக மாறுவேடம் இட்டு தாங்கினார் போரின் போது சகுனியை வதம் செய்கிறார்.

**காவியத்தலைவி-திரௌபதி**:

சிலப்பதிகாரம் என்னும் நூலிற்கு கண்ணகி காவிய தலைவியாக அமைவது போல், திரௌபதி இச்சிறு காவியமாகிய பாஞ்சாலி சபதத்திற்குக் காவியத் தலைவியாக அமைகின்றாள்.

**“உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்”**

என்ற உண்மை சிலம்பில் அமைந்து கிடப்பதை நாம் அறிவோம் காவியத்திலேயே இளங்கோவடிகள் கண்ணகிக்குக்கு கோயில் எடுத்த செய்தியைக் காட்டுகின்றனர் இக்காவியத்திலோ அல்லது பாரதத்திலோ திரௌபதிக்குக் கோயில் எடுத்த செய்தியைக் கவிஞர்கள் குறிப்பிடாவில்லை என்றாலும் நாடெங்கும் பல இடங்களில் ‘திரௌபதி அம்மன் கோயில்’ என்றிருப்பதைக் காண்கின்றோம். சில இடங்களில் ‘தீ மிதித்தல்’ என்ற விழா இத்திருக் கோயில்களில் நடைபெற்றுவருவதையும் காண்கிறோம்.

பாரதியார் நமக்கு இப்பத்தினித்தெய்வத்தை இவ்வாறு அறிமுகம் செய்து வைப்பர், சூதில் இவள் பணயப் பொருளாக வைக்கப்பெறுவதைக் காட்டும்போது.

**பாவியர் சபைதனிலே - புகழ்ப்**
**பாஞ்சால நாட்டின் தவப்பயனை**
**ஆவியில் இனியவளை - உயிர்த்**
**தணி சுமந் துலவிடு செய்யமுதை.**
**ஓவியம் நிகர்த்தவளை – அருள்**
**ஒளியினைக் கற்பனைக் குயிரதனைத்**
**தேவியை, நிலத்திருவை – எங்குந்**
**தேடினும் கிடைபருந் திரவியத்தை.(1)**

என்று கூறுவார். ‘ஐவர் பூவை’ என்றும் குறிப்பிடுவர் இவளை கவிஞர் குறிப்பிடும் உருவகங்களை - சொல்லோவியங்களை – உருவக்காட்சிகளை – மரபுக்கவிதைகளில் அமைத்தால் ஒவ்வோர் உருவகத்திற்கும் ஒவ்வொரு வெண்பாவோ விருத்தமோ அமையும் இவற்றுள்,

**படிமிசை இசையுறவே – நடை**

**பயின்றிடும் தெய்விக மலர்க்கொடி (2)**

என்ற தொடர்நாடு முழுவதும் இப்பெருமாட்டிருக்கும் கோயில் அமைந்துள்ள செய்தியைக் குறிப்பிடுவதாகச் கொள்ளலாம் பல்லாண்டுகளாக ஆந்திரப் பல்கலைக் கழகத்தை நிறுவக்காரணமாக இருந்தவரும், அதன் துணைவேந்தர் பதவியைப் பல்லாண்டுகள் அணி செய்தவருமான டாக்டர் சி. ஆர் ரெட்டியவர்கட்குத் தெலுங்கு மகாபாரதத்தில் தனி ஈடுபாடு உண்டு. அங்ஙனமே திரௌபதி என்ற பாத்திரமும் இவருடைய தனிப்பற்றுக்குரியவளாக இருந்தாள். ‘பஞ்சமி’ என்ற தம்முடைய ஐந்து கட்டுரைகள் கொண்ட நூலில் சேர்க்கபெற்றுள்ளன. கட்டுரை ஒன்றில் ‘சீதையையும’ திரௌபதியையும் அறிவுகூர்மையுடன் ஒப்பிட்டு ஆய்ந்துள்ளார். இந்த நாட்டில் சீதை ஊழிக்காலம் தொட்டு பெண்ணினத்தின் மிகச் சிறந்த மூலமாதிரியாக இருந்து வருகின்றாள் என்பதை நாம் அறிவோம். ஆனாலும் டாக்டர் ரெட்டி அவர்கள் பற்றுறுதி, பொறுமை குடிப்பண்பு; துன்பத்தை அனுபவிக்கும் திறன் போன்ற சீதையின் நற்குணங்களில தனி ஈடுபாட்டைக் காட்டுகின்றார். ஆனால், திரௌபதிதான் தன்னுடைய துணிவாலும் விரைந்து மாறும் இயல்பாலும் டாக்டர் ரெட்டி அவர்களின் ஆண் இதயத்தை அதிகமாகக் கவர்கின்றாள்.என்று கூறுகின்றார்.

இவர் கூறுவார்; “திரௌபதியைப்போலவே சீதையும் உலகோரின் இதயத்தை கவர்ந்துள்ளாள் ஆனால் அவள் இல்லத்திலுள்ள ஒருவிளக்கேயாவாள். கொழுந்துவிட்டு எரியும் அனற்பிழம்பு அல்லள். பொது மக்களுக்குரிய மன்றத்திற்கும் பொருத்தமானவள் அல்லல். இவற்றின் சுவையும் மனப்பாங்கும் இல்லாத ஓர் இல்லக்கிழத்தி இவள். இவள் சொல் நயமுடைய வாதப்போருக்கும் பொதுமன்றப் போருக்கும், நேருக்குநேர் நேரிடும் மோதல்கட்கும் சிறிதும் பொறுத்தமானவள் அல்லள். இவள் வெல்லம் போல் இனிமையானவள். மிளகுபோன்ற காரசாரத்திற்க்கு இவள் பண்பில்

இடமே இல்லை... திரௌபதியைப் பொருத்தமட்டிலும் இக்கால அமொக்கப் பெண் தலைவர்களும் இவளுடன் ஒப்பியப் பெறும் பொழுது. அவர்கள் தம்மை அடிமைகளாகவே உணர்வர். இவளுடைய அறிவுத் திறனும் பாகுபடுத்திப் பார்க்கும் திறனும் பொதுஅறிவும் கூரிய அரசியல் அறிவும், துணிவும் உயர்பண்பும், தனிப்பட்ட சொந்தக் கவர்ச்சியும் இவளுடைய சுதந்திர உணர்ச்சிக்கு அடிப்படையாக இருந்தது தண்ணுடைய கணவன் மார்களை கடிந்தாள் அவர்கள் இவளைக் குறைக்கூறார்கள்; பிறரும் அந்நிலையில்தான் இருந்தனர். இவள் தனி முதன்மை உள்ளவள். குறைப்பாடே இல்லாதவன்.

இவளைப்போன்றவர்கள் இவளுடன் தொடர்புள்ளவர்களால் மட்டுமன்றி எல்லாராலும் அன்பு காட்டப் பெறுகின்றனர், இல்லை மதிப்புடன் போற்றபெறுகின்றனர். பூசனை செய்யப்பெறுகின்றனர்.... இவர்களிடம் இவ்வுலகம் தன்னுடைய நிறைவினையே காண்கின்றது.

சிலப்பதிகாரக் கண்ணகி திரௌபதியுடன் ஒப்பிடத்தக்க பாத்திரமாகின்றாள். டாக்கடர் சி.ஆர் ரெட்டி மேலே குறிப்பிட்ட படி இருவருமே தனி முதன்மையுடையவர்கள் குறைபாடே இல்லாதவர்கள். நம் எல்லாருடைய அன்புக்கும் பாத்திரர்களாகின்றனர். மதிப்புடன் போற்றப்படுன்ற வர்களாகின்றனர்; பூசனைக்கும் உரியவர்களாகின்றனர்.

புகார்க்காண்டத்தில் கண்ணகியை மிக அமைதியான பெண்ணாக் காண்கின்றோம்.

**போதில் ஆர் திருவினாள்**
**புகழ் உடை வடிவு என்றும்**
**தீதுஇலா வடமினின்**
**திறம் இவள் திறம் என்றும்**
**மாதரார்தொழுது ஏத்த**
**வயங்கிய பெருங்குணத்துக்**
**காதலாள். (3)**

என்று இளங்கோ அடிகள்காட்டுவார். மதுரைக் காண்டத்திலும் ஆவேசமுற்றசாலினி மூலம்.

**இவளோ கொங்கச் செல்வி,**

**குடமலை ஆட்டி**

**தென் தமிழ்ப் பாவை,**

**செய்த்தவக் கொழுந்து,**

**ஒருமா மணியாய்,**

**உலகிற்கு ஓங்கிய**

**திருமாமணி, (4)**

என்று இவளைக்காட்டுவர், காந்தி அடிகள் இவளை மாதரியிடம் அடைக்கலமாகத் தந்தபோது

**என்னோடு போந்த**

**இளங்கொடி நங்கை தன்**

**வண்ணச் சீறடி**

**மண்மகள் அறிந்திலள்,**

**கடுங்கதிர் வெம்மையின்**

**காதலன் தனக்கு**

**நடுங்குதுயர் எய்தி**

**நாட்புலர வாடி,**

**தன்துயர் காணாத்**

**தகைசால் பூங்கொடி**

**இன்துணை மகளிர்க்கு**

**இன்றியமையாக்**

**கற்புக்கடம் பூண்ட இத்**

**தெய்வம் அல்லது,**

**பொற்புடைத் தெய்வம்**

**யாம்கண்டிலமால் (5)**

என்று புகழ்ந்து உரைப்பர். அமைதியாக இருந்த கண்ணகி தன்கணவன் கொலைக்களப்பட்ட செய்தியைக் கேட்டதும் பலவாறு அலற்றி அழுகின்றான். ‘தீவேந்தன்தனைக் கண்டு இத்திறம் கேட்பல் பான்’ என்று பாண்டியன் அரண் மனையை நோக்கி வருகிறாள். பாண்டியன் அவையில் இவள் தன்னை அறிவித்துக்கொண்ட திறமும், தன் சிலம் பின் தன்மையை எடுத்துக்காட்டியதிறமும் நம்மை வியக்க வைக்கின்றன. தன் கணவன் கள்வன் அல்லன் என்று மெய்ப்பபித்த திறனைக் கண்டு இறும்பூது எய்துகின்றோம்.

இனி திரௌபதியைக் காண்போம். திருதராட்டினது அழைப்பைத் தெரிவிப்பதற்காக இந்திரப்பிரத்தம் வரும் விதுரனை வரவேற்கும் கட்டத்தில் இவளை முதன்முதலாகக் காண்கினறோம். குந்திதேவியை விதுரன் வணங்கிய பின்னர் துருபதன் செல்வம் விதுரனை வணங்குகின்றாள். இதனைக்கவிஞர்.

**குந்திஎனும் பெயர்த்தெய்வதந் தன்னைக்**
**கோமகன் கண்டு வணங்கிய பின்னர்**
**வெந்திறல் கொண்ட துருபதன் செல்வம்**
**வெள்கித் தலைகுணிந் தாங்குவந்தெய்தி,**
**அந்தி மயங்க விசும் பிடைத் தோன்றும்**
**ஆசைக் கதிர்மதியன்ன முகத்தை**
**மந்திரந் தேர்ந்த தோர் மாமன் அடிக்கண்**
**வைத்து வணங்கி வனப்புற நின்றாள். (6)**

என்ற பாடலில் காட்டுவர், இங்கு மிக அடக்கமான திரௌபதியைக் காண்கிறோம். அடுத்து பாஞ்சாலியை அருச்சுனன் தொடையின் மீது சாத்து கொண்டு பரிதியின் எழிலைக்கண்டு களிக்கும் நிலையினை காண்கின்றோம். இவன் தானே இவளைத் தனது வில்லாண்மையினால் வென்று பெற்றான்? எனவே, இவன் மீது இவளுக்கு ஒரு வகையான தனிபற்று இருந்திருக்க வேண்டும் என்று ஊகிக்கின்றோம். கானுறை வாழ்க்கையில் கூட இவளுக்கு

நேரிடும். இடர்களை யெல்லாம் அருச்சுனனும் வீமனும் தான் களைவதைக்காண்கிறோம்.

வாதம் புரிவதிலும் நீதிகளை எடுத்துக்காட்டுவதிலும் அவையில் துணிவாகப் பேசுவதிலும் இவளை யொத்தபாத்திரம் கண்ணகியைத் தவிர தமிழ்க்காவியங்களில் வேறொருவரைக் காண்டல் அரிது. துரியோதனன் ஆணையினால் முதலில் இவளை அழைத்துச் செல்ல வந்த தேர்ப்பாகன் சபையில் நிகழ்ந்ததைச் சொல்லி அழைக்கும் போது இவள் கூறுவாள்.

**....... "யார் சொன்ன வார்த்தையடா!**
**சூதர் சபைதனிலே தொல்சீர் மறக்குலத்து**
**மாதர் வருதல் மரபோடா? யார்பணாயால்**
**என்னை அழைக்கின்றாய்? (7)**

என்று கேட்க, தேர்ப்பாகன்' 'மன்னன் சுயோதனன் வார்த்தையினால்' என்று மறுமொழி தருகின்றான். உடனே அவள்,

**'நல்லது, நீசென்று நடந்தைகதைகேட்டுவா**
**வல்ல சகுனிக்கு மாண்பிழந்த நாயகர்தாம்**
**என்னை முன்னே கூறி இழந்தாரா? தம்மையே**
**மன்ன இழந்து முடித்தென்னைத் தோற்றாரா?**
**சென்று சபையில் இச்செய்தி தெரிந்துவா., (8)**

என்று கூறி அவனைத் திருப்பியனுப்புவதில் இவளது துணை வினையும் பிரச்சினையை அணுகும் நுட்ப மதியினையும் காணமுடிகிறது இரண்டாம் முறை திரௌபதியிடம் சென்று துரியோதனன் சினந்து சிறியதைச்செப்பி அழைக்கும்போது அவள் கூறிய மாறுமொழி;

**நாயகர் தாந்த ம்மைத் தோற்றபின்- என்னை**
**நல்கும் உரிமை அவர்க்கில்லை புலைத்**
**தாயத்தி லேவிலைப் பட்டபின்,- என்ன**
**சாத்திரத் தாலெனைத் தோற்றிட்டார்? (9)**

மேலும் கூறுவாள், கௌரவர் அவையில் அறங்கண்டவர் ஒருவரும் இல்லையா? மன்னர் நிலை மாறு முன்னர் சாத்திரம் கூடச்செத்து விட்டதா? புகழ் வாய்ந்த குரவர் களும்கல்வி கற்ற மன்னர்களும் செல்வத்தை வௌவு தலைத்தான் கண்டனரோ? என் மானம் அழிவதையும் காண்பார்களா? இன்பமும் துன்பமும் தனிப்பட்டோருக்கு மாறிமாறி வருவதைக் கண்டுள்ளோம். ஆனால் நேடியுருட்டிப் புவியாளும் வேந்தர்கள் அறத்தின் மாட்சியைக் கொன்று களிப்பார்களோ? இதனை அன்பும் தவமும் சிறந்த அந்தணர்களும் கண்டு களிப்பார்களோ? அவர்முன்பு என் வினாவினை மீட்டும் வைத்து தெளிவுறக் கேட்டுவா?''

தேர்ப்பாகனும் திரும்பி வந்து சபையை லிருஅடைந்து நிகழ்ந்ததைக் கூறினதுடன் அவள் மாதவிடாயிப்பதையும் குறிப்பிடுகின்றான். உடனே அரவக் கொடியோன் துச்சாதனை நோக்கி 'தம்பி' போகக்கடவை இப்போது அங்கே இங்கு அப் பொற்றோடியோடும் வருக நீ என்று கூறவும் அவன் திரௌபதி இருக்கும் மாளிகையை அடைகின்றான். மைத்துனனைக் கண்டதும் தீண்டலை எண்ணி ஒதுங்குகின்றாள் அப் பொற்கொடி 'அடி, எங்கே போகின்றாய்?' என்று அவன் உரப்ப, இவளும் அவனை ஆண்டகையற்ற புலையன் என்று கருதி துணிவை வருவித்துக் கொண்டு ''ந வந்த செய்தியை விரைவில் சொல்லி நீங்குக'' என்று கூற அவனும் ''**மன்னர் கூடியிருக்கும் அவையில் உன்னைக் கூட்டி வருமாறு அண்ணன் சுயோதனன் பணித்தனன்.**'' ஏதும் சொல்லாது என்னோடு ஏகுவாய். **''பேடி மகன் பாகனுக்கு உரைத்த பேச்சுகள் வேண்டா''** எனஉரைக்கின்றான்.

திரௌபதியின் நீண்ட கருங்கூந்தலை துச்சாதனன் பற்றி இழுத்துச்சென்ற காட்சியும், அவள் அவையோரை நீதி கேட்டு அமுத காட்சியும் வீடுமனின் பேச்சும், அதற்குப் பாண்டவரின்தேவி.,

**பேயரசு செய்தால் பிணந்தின்னும் சாத்திரங்கள்**
**மாய முணராத மன்னவனைச்சூதாட**
**வற்புறுத்திக் கேட்டதுதான் வஞ்சனையோ? நேர்மையோ?**
**முற்படவே சூழ்ந்து முடித்த தொருசெய்கையன்றோ?**
**முண்டபம் நீர் கட்டியது மாநிலத்தைக் கொள் வன்றோம்?**
**பெண்பாவ மன்றோ பெரியவிசைகொள்ளீரோ?**
**கண் பார்க்க வேண்டும்.' (10)**

என்று துணிவுடன் தந்த மறுமொழியும் கன்னைஞ்சத்தையும் உருக்கும் தன்மையுடயவை இந்தக் கட்டத்தில் பாண்டியன் அவையில் நீதி கேட்டுழுத கண்ணகியை ஒக்கின்றான். பாஞ்சாலி, கதை நடந்த காலத்தில் நாமும் இருந்ததைப் போன்ற மனநிலை நம்மிடம் ஏற்படுகின்றது. காவியத்தலைவியின் நிலை கண்டு பச்சாதாப்படுகின்றோம் நெஞ்சத்துணிவு கொண்ட ஒரு புதுமைப் பெண்ணை கண்டு வியக்கின்றோம். திரௌபதியை மனத்தில் கொண்டுதான் பாரதி ''புதுமைப்பெண்'' என்ற கூட நினைக்கத் தோன்றுகின்றது.

கண்ணனை அவன் வாழ்ந்த காலத்தில் தெய்வம் என்று நினைத்தவர்களுன் திரௌபதியும் ஒருத்தி. தன்னால் துச்சாதனின் கயமைச் செயலினின்றும் விடுவித்துக் கொள்ளமுடியாது என்றும் தெளிந்தும் இவள் கண்ணனைச் சரண் அடைகின்றாள்.

**''உட்சோதியிற கலந்தாள் - அன்னை**
**உலகத்தை மறந்தாள் ஒருமையுற்றாள்! (11)**

என்று சரணாகதி தத்துவம் இரத்தினச் சருக்கமாகக் காட்டப்படுகின்றது. பலனும் கையிலங்கு நெல்லிக்கனியாகக் கிடைத்து விடுகின்றது.

**“கண்ண பிரானருளால் - தம்பி**
**கழற்றிடக் கழற்றிடத் துணிவுதிதாய்**
**வண்ணப்பொற் சேலைகளாம் - அவை**
**வளர்ந்தன, வளர்ந்தன, வளர்ந்தனவே (12)**

கற்புக்கரசி மானங்காக்கட் பெற்றுகின்றாள்

வீமனும் அருச்சுனனும் செய்த சபதங்களைத் தொடர்ந்து இப்பத்தினித் தீ தெய்வம் செய்த சபதத்தை கவிஞர் அற்புத மாகக்காட்டுவார்.

**“தேவி திரௌபதி சொல்வாள் - ஓம்**
**தேவி பராசக்தி ஆணை யுரைத்தேன்**
**பாவி துச்சாதனன் செந்நீர் - அந்தப்**
**பாழத்துரி யோதனன் ஆக்கை இரத்தம்**
**மேவி இரண்டும் கலந்து – குழல்**
**மீதினிற் பூசி நறுநெய் குளத்தே**
**சீவிக் குழல் முடிப்பேன் யான் - இது**
**செய்யுமுன் னேமுடியேன் என்றுரைத்தாள்” (13)**

இங்குக் கவிஞர் திரௌபதியையே பராசக்தியாகக் காண்கின்றார் போல் தோன்றுகின்றது. அவர் மனம் சுதந்திர தேவியின் தரிசனத்தை எதிர் நோக்கி இருந்தல் போலவும் தோன்றுகின்றது. நம்நாடு சுதநதிரம் அடைந்ததற்கு முன்பு பாடிய காவியம் அல்லவா? இப்படிக் காவிய நாயகி சிறந்த முறையில் காட்சி அளிக்கின்றாள். கவிஞர் பழையஇதிகாசப் பாத்திரத்ததையே- புது மெருகூட்டி அற்புதப் படைப்பாக்கி விடுகின்றார் பாமரமக்கள் மனததில் ஊறிக்கிடந்த **‘திரௌபதி அம்மன்’** என்ற கருத்து நம் கவிஞருக்குக்கை கொடுத்து உதவியிருப்பதாக எண்ணுவதில் இருவேறு சிந்தனை இருக்க முடியாது.

## சான்றெண் விளக்கம்

| வ.எண் | நூல் | பக்கம் |
|---|---|---|
| 1 | பாஞ்சாலிசபதம் ஒரு மதிப்பீடு ந.சுப்புரெட்டியர் | 1 |
| 2 | பாஞ்சாலி சபதம் மூல உரை | 3 |
| 3 | பாஞ்சாலி சபதம் மூல உரை | 5 |
| 4 | பாஞ்சாலி சபதம் மூல உரை | 7 |
| 5 | பாஞ்சாலிசபதம் ஒரு மதிப்பீடு ந.சுப்புரெட்டியர் | 12 |
| 6 | பாஞ்சாலிசபதம் ஒரு மதிப்பீடு ந.சுப்புரெட்டியர் | 39 |
| 7 | பாஞ்சாலிசபதம் ஒரு மதிப்பீடு ந.சுப்புரெட்டியர் | 47 |
| 8 | பாஞ்சாலி சபதம் மூல உரை | 65 |
| 9 | பாஞ்சாலி சபதம் மூல உரை | 66 |
| 10 | பாஞ்சாலி சபதம் மூல உரை | 68 |
| 11 | பாஞ்சாலி சபதம் மூல உரை | 3 |
| 12 | பாஞ்சாலி சபதம் மூல உரை | 81 |
| 13 | பாஞ்சாலி சபதம் மூல உரை | 91 |

# இயல்-3

## சமுகசிந்தனை

வாழ்க்கையிலும் மனிதப் பண்பிலும் உள்ள பொதுத் தன்மையை எடுத்துக் கூறுவதே கவிதையின் நோக்கமாகும் "**யான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்**" என்ற உயர்ந்த குறிக்கோள் கவிதைத்துறையில எளிதாக நிறைவேறி விடுகினறது. கவிஞனின் மனத்தில் தோன்றிய அநுபவமே கவிதை யாகமுடிகின்றது; வடிவம் கொள்ளுகிறது. கவிதையைப் படிக்கும் நாமும் அக்கவிஞன் பெற்ற அநுபவத்தையே பெற்றுவிட்டால் கவிதையும் உணர்த்தவேண்டியவற்றை உணர்த்திவிடும் நிலையை அடைந்து விடுகின்றது. திருவாசகத்தேனை மாந்திய அறிஞர்களில் பலர் தம் அநுபவத்தை வெளியிட்டுள்ளனர். வேற்றுச் சமயத்தினைச் சார்ந்த வேற்று நாட்டினராகிய ஜி.யு.போப் இதன் பக்திச்சுவையில் ஈடுபட்டு இதனை மொத்த பக்தி நூல் யாண்டும் இல்லையென்று கூறினார். சிவப்பிரகாச அடிகள்,

**"திருவாசகம் இங்கொருகால் ஓதின்**
**கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள்**
**தொடுமணற் கேணியின் சுரந்து நீர் பாய**
**அன்பர் ஆகுநர் அன்றி**
**மன்பதை உலகில்மற்றையர் இவரே."**

என்று அவ்வநுபவத்தை எடுத்தோதுகின்றார், சமயத்துறையில் எங்கும் சமரசத்தைப் பரப்பிய வடலூராரும் திருவாசகத்தில் ஈடுபட்டுப் படித்ததால்,

**"நற்கருப்பஞ் சாற்றினிலே**
**தேன்கலந்து பால்கலந்து**
**செழுங்கனி தீஞ் சுவைகலந்து**
**ஊன்கலந்து உயிர்கலந்து**
**உவட்டாமல் இனிப்பதுவே"**

என்று பாடுகின்றார். உயர்கவிதைகள் யாவும் அவற்றில் ஈடுபட்டுப் படிப்போரிடம் கவிஞர்களின் அநுபவத்தையே பெறவைத்து விடுகின்றன. தமிழ் இலக்கியத்தைப் பொறுத்த மட்டிலும் தமிழ்க்கவிஞர்கள் வாழ்க்கையைச் செம்மைப் படுத்துவதே இலக்கியத்தின் நோக்கம் என்ற கொள்கையினை உடையவர்களாக இருந்தனர் என்று கருதலாம்.

**“உரத்தின் வளம்பெருக்கியுள்ளிய தீமைப்**
**புரத்தின் வளம் முருக்கிப் பெல்லா மரத்தின்**
**கனக்கூட்டம் தீர்க்குநூல.்.தேபோல் மாந்தர்**
**மனக் கோட்டந் தீர்க்கு நூல்மாண்பு.”**

என்ற பவணந்தியாரின் கூற்றினால் இதனை அறியலாம். இதனால் மக்களினத்தின் அறியாமையைப் போக்கி அறிவு கொளுத்துதல் கவிதையின் முதன்மையான வேலையாயிருத்தல் வேண்டும் என்பது பெறப்படுகின்றது.

**சமூக சிந்தனையின் பண்பு:-**

கவிதையின் தலைமைப்பண்பு அ.்.து உணர்த்தும் உண்மையில் தான் உள்ளது. மனித அநுபவத்திலும் இயற்கையிலும் நாம் சாதாரணமாகக் காணாத புலனுணர் ஆற்றலுடைய அழகுகளையும், ஆழ்ந்த உண்மைகளையும் அது காட்டுகின்றது. நம்மில் ஒரு சிலருக் குக்கவிதையுணர்வும் உட்காட்சியும் ஓரளவாக அமைந்துள்ளன. ஆனால், இவர்களுள் பெரும்பாலோரிடம் இத்தகைய கவிதைத் திறன் சாதாரண வாழ்க்கையின் இரும்பு நிலைகளால் நெருக்குண்டு, அன்றாட வாழ்க்கையின் கூறுகளாகவுள்ள உலோகாயதக் கவர்ச்சிகளால் குன்றச் செய்யப்பெற்று, சில சமயம் நனவு நிலையிலும் அல்லது நனவிலி நிலையிலும் நசுக்கட்பெறுகிறது. ஆனால், உண்மைக் கவிஞனிடம் உலகப் பொருள்களில் அழகினையும் ஆழ்ந்த உண்மைகளையும், காணுந்திறன் ஈடு எடுப்பற்ற அளவிலுள்ளது. அன்றியும், தாம் காண்பவற்றையும் கேட்பவற்றையும் தெளிவாக வெளியிட்டுக் கூறுந்திறனும் அமைந்து கிடக்கின்றது. இவ்விளக்கத்தைப் படிக்கும்

நம்முடைய கற்பனையும் ஒத்துணர்ச்சியும் துடிப்புப் பெற்று அவற்றை அக்கவிஞனுடன் சேர்ந்து காணவும் உணர்வும் செய்துவிடுகின்றது. எனவே, கவிதைநமக்குக் கவிஞனின் உள்நோக்குடன் நாமாகவே வாழ்க்கையைக் கூர்ந்து நோக்கிப் பொருளுணரவும் கற்பிக்கின்றது. என்றும், நம்முடைய பார்வையையும் ஒத்துணர்ச்சியையும் உரம் பெறச் செய்கின்றது என்றும் தெளிகின்றோம்.

**சமூக சிந்தணையின் காவியப்பண்பு:-**

தலைவன் ஏவலாளர்க்குக் கூறுதல் போன்றவை அறநூல்கள் என்றும், நண்பர் ஒருவர்க்கொருவர் கூறும் முறையில் அமைந்தவை புராணங்கள் என்றும் கணவனுக்கு மனைவி உரைப்பது போன்றவை காவியங்கள் என்றம் ஒருவகைப் பாகுபாடுசெய்து வரைப்பர் வடமொழி வாணர்கள். இல்வாழ்க்கையில் சொற்களைவிட உள்ளத்து உணர்ச்சிகளே ஆற்றல் மிக்கவை எனபதும், சொற்களால் உணர்த்துவதைவிடக் குறிப்பால் உணர்த்துவதே மிகுதியானது என்பது நாம் அறிந்தவை. இக்காரணத்தால் தான் ஒருசில வரிகளாளான அகரைத்துறைச்சங்கம் பாடல்கள் உணர்ச்சியைக் கொட்டி நம்உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றன இத்தகைய உணர்ச்சிதான் காவியங்களிலும் அமைந்து கிடக்கின்றது. ஒழுக்கம், அறம் முதலியவற்றை அதிகமாக நேரேகூறி வற்புறுத்தாமல் கற்பனையநுபவத்தின் வாயிலாகவும் கதைமாந்தர்களின் கூற்று வாயிவாகவும் அப்பாடல்கள் உள்ளத்தில் தாமே சென்று பதியும் முறையில் அமைந்து விடுகின்றன.

இக்கருத்துகளின் அடிப்படையில் ‘பாஞ்சாலி சபதம்’ உணர்த்தும் உண்மைகளைக் காண்போம்

**பொறாமையின் கேடு:-**

துரியோதனனை நடுவாகவைத்து இந்த உண்மை விளக்கப் பெறுகின்றது. இராச சூயப்பெரு வேள்வியினால். பாண்டவர்களுக்கு வந்த ஏற்றத்தைக் கண்டு துரியோதனன் மனம் புழுங்கி நைகின்றதைக் கவிஞர் பல பாடல்களில் எடுத்துக்காட்டுகின்றர். **'எண்ணிலாத பொருட்குவையும்.'** யாங்கணும் செலும் சக்கரமாண்பும் வார்கடல் பெருஞ்சேனையும் கொண்டு, இந்திர போசங்களைத் துய்க்கும் வாய்ப்பிருந்தும்,

**"பாண்டவர் முடியுயர்த்தே - இந்தப்**
**பார்மிசை யுலவிடு நாள்வரை, நான்**
**ஆண்டதோர் அரசாமோ?-எனது**
**ஆண்மையும் புகழுமோர் பொருளாமோ? (1)**

என்று எண்ணுகின்றான். வேள்வியினால் பாண்டவர்கட்குக் கிடைத்த பொருள்களையும், பெருமைகளையும் ,சிறப்பு களையும் எண்ணி எண்ணி ஏங்குகின்றான். செஞ்சிற் கருதி யவற்றையெல்லாம் சகுனியிடம் (1.6.42-51) சொல்லுகின்றான். ஏந்திழையாள்(திரௌபதி) தன்னை நோக்கிச் சிரித்ததையும் கோடிட்டுக் காட்டி காவியம் உணர்த்தும் உண்மை

**பேச்சை வளர்த்துப் பயனொன்று**
**மில்லை,என்மாமனே!-அவர்**
**பேற்றை அழிக்க உபாயஞ்சொல்லுவாய்**
**என்றன் மாமனே!**
**தீச்செயல் நற்செயல் ஏதெனினும்**
**ஒன்றுசெய்து, நாம்-அவர்**
**செல்வங் கவர்ந்தவரை விட**
**வேண்டும் தெருவிலே. (2)**

என்று தன் மானக்கருத்தை வெளியிடுகின்றான்.

**சமூக சிந்தனை கொடுமை:**

கவிஞர் தருமனைக் கொண்டு இதனைப் பேசச் செய்கின்றர். ஆயினும், அவனே சூதாட்டத்தில் இறங்கி பலியாவதையும்காட்டுகின்றார். ‘அறத்தோன்றலையே கவறாடலுக்த் திருப்புவதில் சகுனியைச் சிறந்த சமர்த்தனாக்குகின்றார். **“மன்னர் சூதாடவல்லுக் கழைத்தபோது மறுப்பதில்லை.”** என்று கூறிகின்றார்.

**மெய்ய றிந்தவர் தம்மு ளுயர்ந்தோன்**
**விதியினாலத் தருமனும் வீழ்ந்தான்**

என்கின்றார். மேலும் அவர்.

**“மதியி னும்விதி தான்பெரி தன்றோ?**
**வைய மீதுள வாகு மவற்றுள்**
**விதியி னும்பெரி தோர்பொரு ளுண்டோ?**
**மேலை நாம்செய்யுங் கர்மமல் லாதே,**
**நதியி லுள்ள சிறுகுழி தன்னில்**
**நான்கு திக்கி லிருந்தும் பல்மாசு**
**பதியு மாறு, பிறர்செய்யுங் கர்மப்**
**பயனும் நம்மை அடைவதுண்டன்றோம்**
**காவியம் உணர்த்தும் உண்மை”.** (3)

என்று வினைப் பயனையும் விதியின் செயலையும் வலியுறுத்து கின்றார். இப்பகுதியில் கவிஞரும் விதியின் வலிமையைத் தற் கூற்றாக வலியுறுத்துவதைக் காண்கின்றோம். செல்வத்தையெல்லாம் இழந்து நிற்கும் தருமனை நோக்கி, **“நாடிழக்க வில்லை – தருமா! நாட்டை வைத்திடு”**

என்று சகுனி சொல்லும் போது வெகுண்டெழுந்த விதுரன் பேச்சிலும் சூதின் கொடுமையைக் காட்டுகின்றார் கவிஞர். திருதராட்டிரனைநோக்கிப் பேசுகின்றான்.

**“சூதிற் பிள்ளை கெலித்திடல் கொண்டு**
**சொர்க்க போகம் பெறுபவன் போலப்**
**பேதை நீயு முகமலர் வெய்திப்**
**பெட்பு மிக்குற வீற்றிருக் கின்றாய்;**
**மீது சென்று மலையிடைத் தேனில்**
**மிக்க மோகத்தி னாலொரு வேடன்**
**பாத மாங்கு நழுவிட மாயும்**
**படும லையுச்சரி வுள்ளது காணான்.”**

**“மற்றுநீ ருமிச் சூதெனும் கள்ளால்**
**மதிம யங்கி வருஞ்செயல் காணீர்!**
**முற்றுஞ் சாதி சுயோதன னாமோர்**
**மூடற் காக முழுகிட லாமோ?**
**பற்று மிக்கஇப் பாண்டவர் தம்மைப்**
**பாத கத்தி லழித்திடு கின்றாய்:**
**கற்ற கல்வியும் கேள்வியும் அண்ணே**
**கடலிற் காயங்கரைத்ததொப் பாமே!”**

**“தம்பி மக்கள் பொருள் வெஃகு வாயோ**
**சாதற் காண வயதினில் அண்ணே!**
**நம்பி நின்னை அடைந்தவ ரன்றோ?**
**நாத னென்றுனைக் கொண்டவ ரன்றோ?**
**எம்பி ரானுளங் கொள்ளுதி யாயின்**
**யாவுந் தான மெனக்கொடுப் பாரே:**

**கும்மி மாநர கத்தினி லாழ்த்துங்**

**கொடிய செய்கை தொடர்வது என்னே?"**

**"நெறிஇ ழந்தபின் வாழ்வதி லின்பம்**

**நேரு மென்று நினைத்திடல வேண்டா**

**பொறிஇ ழந்த சகுனியின் சூதால்**

**புண்ணி யர்தமை மாற்றல ராக்கிச்**

**சிறியர் பாதகர் என்றுல கெல்லாம்**

**'சீ' என் றேச உகந்தர சாளும்**

**வறிய வாழ்வை விரும்பிட லாமோ?**

**வாழி சூதை நிறுத்துதி. (4)**

என்கின்றான்.

நாட்டைப் பணயமாக வைத்து இழந்ததும் கவிஞரின் சினம் கொடுமுடியை எட்டி விடுகின்றது. பதை கூறும் கவிஞர் தம்மை மறந்து கதை மாந்தருள் ஒருவராகி விடுகின்றார்; அவரது உணர்ச்சி கட்டறுத்துக் கொண்டுசெல்கின்றது. பேசுகின்றார்.

**காவியம் உணர்த்தும் உண்மை:**

**"கோயிற் பூசை செய்வோர் - சிலையைக்**

**கொண்டு விற்றல் போலும்**

**வாயில் காத்து நிற்போன் -வீட்டை வைத்தி ழத்தல் போலும்**

**ஆயி ரங்க ளான-நீதி**

**அவைஉ ணர்ந்த தருமன்**

**தேயம் வைத்திழந்தான் - சீச்சீ**

**சிறியர் செய்கை செய்தான்" (5)**

சமூகசிந்தனை ஊழின் பெருவலி.

சமூகசிந்தனை '**பால்வரைத் தெய்வம்**' எனக் கூறும் ஊழின் பங்கு காவியம் முழுவதுமே ஊடுருவி நிற்பதைக் காண்கின்றோம். இடதிற்கேற்றவாறும் சந்தர்ப்பத்திற்கேற்றவாறும் கதை மாந்தர்களின வாயிலாக ஊழின் வலி எடுத்தோதப் படுகின்றது.

பாண்டவர்களைச் சூதிற்கழைக்குமாறு தந்தையை வற்புறுத்துகின்றான் துரியோதனன் - அப்படிச் செய்யாவிடில் தன் தலையைக் கொய்து உயிர் விடுவதாக அச்சுறுத்துகின்றான். திருதராட்டிரனின் மனம் தளர்வுறுகின்றது. விதியை நினைக்கின்றான்.

**"விதி! விதி!விதி! மகனே! - இனி**
**வேறெது சொல்லுவன் அடமகனே!**
**கதியுறு காலன்னறோ - இந்தக்**
**கயமக னெனநினைச் சார்ந்துவிட்டான்?**
**கொதியுறு முளம் வேண்டா: - நின்றன்**
**கொள்கையின் படி அவர் தமைஅழைப்பேன்" (6)**

என்று பாண்டவர்க்கு அழைப்பு விடுக்க ஒருப்படுகின்றான்.

திருதராட்டிரன் இந்திரப் பிரஸ்தம் செல்ல விதுரனுக்கு விடை கொடுக்கும் போது பாண்டவர்க்கு அழைப்பு ஆகும்.

**"போச்சுது!போச்சுது! பாரத நாடு!**
**போச்சுது நல்லறம்! போச்சுது வேதம்!**
**ஆச்சரி யக்கொடுங் கோலங்கள் காண்போம்!**
**ஐய இதனைத்தடுத்தல் அரிதோ?" (7)**

எனறு ஏங்கிக் கூறும் போது,

**“இங்கிவை யாவும் தவறிலா – விதி**
**ஏற்று நடக்குஞ் செயல்களாம்: முடி**
**வெங்கணு மின்றி எவற்றினும் - என்றும்**
**ஏறி இடையின்றிச் செல்வதாம் - ஒரு**
**சங்கிலி யொக்கும் விதிகண்டீர் - வெறுஞ்**
**சாத்திர மன்றிது சத்தியம்’’ (8)**

என்ற தர்மன் பாக்கில் விதியின் செயல் விளக்கப் பெருவதை காணலாம்.

பாண்டவர் அத்தினபுரத்திகுப் பயணப்படுகின்றனர். இப்போது கவிப்பரிவு செயற்படுகின்றது. இது கவிஞரின தற் கூற்றாக, விதியைப் பற்றிய விளக்கமாக, வெளிப்படுகின்றது. இந்தப் பயணத்தை நெடுங்கரததுி விதி காட்டும் நெறி. என்றே குறிப்பிடுகின்றார் கவிஞர். மேலும், விதியின் திருவிளையாடல்களை,

**“நரிவகுத்த வலையினிலே தெரிந்து சிங்கம்**
**நழுவி விழும் சிற்றெறும்பால் யானை சாகும்:**
**வரிவகுத்த உடற்புலியைப் புழுவும் கொல்லும்:**
**வருங்கால முணர்வோரும் மயங்கி நிற்பார்:**
**கிரிவகுத்த ஓடையிலே மிதந்து செல்லும்:**
**கீழ்மேலாம், மேல்கீழாம்: கிழக்கு மேற்காம்:**
**புரிவகுத்த முந்நூலார் புலையர் தம்மைப்’’ (9)**

நாட்டினைப் பணயம் வைக்குமாறு தருமனிடம் சகுனி சொல்லும்போது, விதுரன் வெகுண்டெழுந்து அறிவுரை கூறுவதைக் கவறாடலின் கொடுமையை விளக்கும் போது குறிப்பிட்டோம். இதனைக் கேட்ட சுயோதனன் விதுரனைப் பலவாறு ஏசுகின்றான். அதற்கு மறுமாற்றம் உரைக்கும் போது தான் ‘‘**விதிவழியை**’’ நன்குணர்ந்ததாக் குறிப்பிடுகின்றான்.

"'விதிவழிநன் குணர்ந்திடினும்,பேதையேனயான்
வெள்ளைமன முடைமையினால் மகனேநின்றன்
சதிவழியைத்தடுத்துரைகள் சொல்லப் போந்தேன
சரி,சரி,இங் கேதுரைத்துப் பயனொன் றில்லை,
மதிவழியே செல்லுக'"

எனறு வாய்முடி மௌனியாகும்போது இதனை அறிகின்றோம்.

"தருமத்தின் வாழ்வ தனைச் சூது கவ்வும்:
தருமம் மறுபடி வெல்லும் எனுமியற்கை
மருமத்தை நம்மாலே உலகம் கற்கும்
வழிதேடி விதி இந்தச் செய்கை செய்தான்:
கருமத்தை மேன்மேலும் காண்போம்: இன்று
கட்டுண்டோம, பொறுத்திருப்போம்."காலம்மாறும்
....."விதியோ கணவரே!
அம்மி மிதித்தே அருந்ததியைக் காட்டியெனை
வேதச் சுடர்த்தீமுன் வேண்டி மணஞ்செய்து
பாதகர்முன் இந்நாள் பரிசழிதல் காண்பீரோ
காவியம் உணர்த்தும் உண்மை"

"பெண்டியர் தமையுடையீர் பெண்க ளுடன் பிறந்தீர்
பெண்பாவ மன்றோ பெரியவசை கொள்ளீரோ?
கண்பார்க் வேண்டும்."

"நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்
நிலத்தில் யார்க்கு மஞ்சாத நெறிகளும்
நிமிர்ந்த ஞானச் செருக்கு மிருப்பதால்
செம்மை மாதர் திறம்புவ தில்லையாம்". (10)

தமிழ் இலக்கியத்தைப் பொருத்தவரை கவிதையின் சிறப்புக்கு ஓசை, சொல்லடுக்கு முதலியவை இன்றியமையாதவையாக இருப்பினும் கவிதையின் பொருளமைப்பே முக்கியமாக் கொள்ளப்பெறுகின்றது. தமிழர்கள் இன்பம் என்றசொல்லுக்குக் கண்டபொருள் சற்று ஆழமுடையது. நிலையான இன்பத்தைத் தருவதுஎதுவாயினும் அவை உண்மையும் ஆழமும் உடையதாயிருத்தல் வேண்டும் என்பது அவர்கள் கொள்கை. மேனாட்டுத் திறனாய்வாளர்களிலும் சிலர் இக் கொள்கையையுடையவர்கள் ஆவர். குவிதையை ஆராயுங்கால், நம்முடையமுதற் கவனம் கவிஞன்பால் செல்லவேண்டும்: அவனுடைய. ஆளுமையிலும் அவன :உலகைப் பற்றிக் கொண்டுள்ளமனப்பான்மையிலும் வாழ்க்கையை எவ்வாறு நோக்கிச்செல்ல வேண்டும் என்றுவிளக்கம் தருகின்றான் என்பதைக் கவனித்தல் முலம். இதனைப் பெறவைக்கலாம். குலை, வடிவம், வரலாறு போன்ற செய்திகளில் நாம் எவ்வளவு ஆழ்நிருந்தபோதிலும், மேற் கூறியகவிதையின் முதனிலைக் கூறுகள் எவ்விதத்திலும் நம் பார்பையினின்று நழுவாமல் காக்கவேண்டும்' என்றுஆட்சன் கூறுவதை கருதியே கவிதை பற்றி கூறவந்த தொல்காப்பிர் இழுமென் மொழியால் விழுமியதுநுவலல் என்று கூறினார் தமிழ்க் கவிதைகள் பெரும்பாலும் அறங் கூறும் இயல்பும் கவிதை இயல்பும் கொண்டேதிகழ்கின்றன.

**சான்றெண் விளக்கம்**

| வ.எண் | நூல் | பக்கம் |
|---|---|---|
| 1 | மகாபரதம் | 18 |
| 2 | மகாபரதம் | 23 |
| 3 | பாஞ்சலி சபதம் மூல உரை | 3 |
| 4 | பாஞ்சலி சபதம் மூல உரை | 11 |
| 5 | பாஞ்சலி சபதம் மூல உரை | 43 |
| 6 | பாஞ்சலி சபதம் மூல உரை | 63 |
| 7 | பாஞ்சலி சபதம் மூல உரை | 4 |
| 8 | பாஞ்சலி சபதம் மூல உரை | 8 |
| 9 | பாஞ்சலி சபதம் மூல உரை | 15 |
| 10 | பாஞ்சலி சபதம் மூல உரை | 36 |

# முடிவுரை

"ந.சுப்புரெட்டியாரின் நோக்கில் பாஞ்சாலிசபதம்'' என்ற இத்திட்டகட்டுரையில் முன்னுரை. நூலின் அமைப்பு கதைசுருக்கம் சூதாட்டம் இழப்பும் பாஞ்சாலியின் சபதம் கதை மாந்தார்கள். அவர்களது பண்பு சமூகச் சிந்தனைகள் இடம் பெற்றுள்ளன நிமிர்ந்த நன்னடை நேர் கொண்ட பார்வை நிலத்தில் யாருக்கும் அஞ்சாத நெறிகள். ஞானச் செருக்கு இவையவும் செம்மை மாந்தரின் இயல்பு என்ற பாரதியின் கூற்றுக்கு இணங்க, பெண்ணிணத்திற்கு வேண்டிய ஆண்மைக் கூறுகளையெல்லம் கொண்டவளாக திரெளபதி நிலையை எடுத்துக்காட்டுகின்றார் கவிஞர்

# துணைநூற்பட்டியல்

**முதன்மை ஆதாரம்**


1. சுப்பிரமணிய பாரதியார் : பாரதியார் கவிதைகள் (எஸ்.ஆர். சுப்பிரமணிய பிள்ளை, 6, பிலிப்ஸ் தெரு, சென்னை - 6000 001) முதற்பதிப்பு 1962.


**துணைமை ஆதாரம்**


1. சுப்பிரமணிய பாரதியார் : பாரதியார் கவிதைகள் (வானவில் பிரசுரம், 16, இரண்டாவது குறுக்குத் தெரு, மேற்கு சி ஐ டி நகர் சென்னை - 600 086)

2. சுப்புரமணிய அய்யர் ஏ வி தற்கால தமிழ் இலக்கியம்

3. சுப்பு ரெட்யார்.ந.காலமும் கவிஞர்களும ̇(பாரதியின் பாஞ்சாலி சபதம் என்ற கட்டுரை): (எஸ்.ஆர் சுப்புரமணிய பிள்ளை,6,பிலிப்ஸ் தெரு, சென்னை 600 001)

4. தண்டியார்:தண்டியலங்காரம் உரை (சைவ சித்தாந்த நூற்ப்பதிப்புகழகம்,பிரகாசம் சாலை, சென்னை-600 001)

5. திருவள்ளுவர்: திருக்குறள்-பரிமேலழகர் உரை(சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,சென்னை-600 001)

6. தேசிக விநாகம் பிள்ளை,சி. மலரும் மாலையும்(புதுமைப் பதிப்பகம்,காரைக்குடி-

# NSR100
# KAMATCHI AMMAL FELLOWSHIP

## MA STUDENTS IN TAMIL



AWARDED TO :

**ச ஜெனிபர் ரோஸி**

**(பதிவு எண்: 20201002)**

**காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**
**திருச்சிராப்பள்ளி ~ 620 018**

உதவித்தொகையும், நூலைத் தேர்ந்தெடுக்க ஆலோசனையும், தேர்ந்தெடுக்கப்பெற்ற நூலும் வழங்கப்பெற்றன.

**ஆய்வேட்டின் தலைப்பு:** ந கப்புரெட்டியாரின் கண்ணோட்டத்தில் பாரதியார்

**பேராசிரியரின் நூல்:** *புதுமை(வை)க்கவிஞர் சுப்பிரமணிய பாரதியார் – ஒரு கண்ணோட்டம்*

**பல்கலைக்கழகம்:** பாரதிதாசன்

**நெறியாளர்:** முனைவர் அ யசோதா

**பட்டம்:** முதுகலை (தமிழ்)

**வருடம்:** 2020—2022



www.nasubbureddiar100.in

# ந.சுப்புரெட்டியாரின் கண்ணோட்டத்தில் பாரதியார்

திருச்சிராப்பள்ளி காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
முதுகலைத் தமிழ் இலக்கியப் பட்டத்திற்காக அளிக்கப்பெறும் திட்டக்கட்டுரை


ஆய்வாளர்

**ச.ஜெனிபர் ரோஸி**

பதிவு எண் : 20201002

நெறியாளர்

**முனைவர் அ.யசோதா ,எம்.ஏ.,பி.எட்.,எம்.ஃ.பில்.,பி.எச்.டி.,செட்**

இணைப்பேராசிரியர்

தமிழாய்வுத் துறை

காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)





**தமிழாய்வுத் துறை**
**காவேரி மகளிர் கல்லூரி (தன்னா்டசி)**
A தகுதி பெற்றது
திருச்சிராப்பள்ளி - 620 018
மார்ச் - 2022

# நன்றியுரை

“ந. சுப்புரெட்டியார் கண்ணோட்டத்தில் பாரதியார்“ என்ற தலைப்பில் இத்திட்ட கட்டுரை எழுத வாய்ப்பளித்த காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி) முதற்கண் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேனன்.முதுகலைத் தமிழிலக்கியம் பயில எனக்கு வாய்பளித்த ரெட்டி அறக்கட்டளை நிருவனத்திற்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எங்களை வழிநடத்திச் செல்லும் என் கல்லூரி முதல்வர் முனைவர் வெ. சுஜாதா அம்மா அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் எம் தமிழாய்வுத் துறை தலைவரும் துணை முதல்வருமான முனைவர் ச.இராமலட்சுமி அவர்களுக்கும் இவ்வாய்வுக் கட்டுரை சிறப்பாக அமைய வேண்டும் என்ற நோக்கத்தோடு ஆய்வுத் தொடர்பான அறிவுரைகளை வழங்கி என்னை வழிநடத்திச் சென்று கட்டுரையை செம்மைப்படுத்திய முனைவர் அ. யசோதா அவர்களுக்கும் எனது நன்றியினை உரித்தாக்குகிறேன்.

ந. சுப்புரெட்டியார் அவர்களின் படைப்பில் ஆய்வு செய்ய வாய்ப்பளித்த காமாட்சி அம்மாள் உதவித்தொகை நல்கிய ந.சுப்புரெட்டியார் நூற்றாண்டு நினைவு அறக்கட்டளை கட்டளையினருக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

என் ஆய்வுக்கு உதவிய என் தந்தையார் ம.சவரிமுத்து, எனது தாய் ச.மரிய ஜெயந்தி ,எனது சகோதரர்கள் ச.ஆரோக்கியதாஸ் ,ச.கிரிஸ்டோபர். மாமா ச.ஆரோக்கிய தாஸ் அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனக்குத் துணை நின்று பல உதவிகளை செய்த தோழிகளுக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வேட்டினைச் செம்மையாக கணினி தட்டச்சு செய்து கொடுத்த செல்வி க.அபிநயா அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வாளர் கையொப்பம்
(ச.ஜெனிபர் ரோஸி)

# பொருளடக்கம்

## சுருக்கக் குறியீடு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ. ஆ | - | உரையாசிரியர் |
| கு.எண் | - | குறள் எண் |
| ப.எண் | - | பக்க எண் |
| பக் | - | பக்கங்கள் |
| பா.எண் | - | பாடல் எண் |
| பா.அடி | - | பாடல் அடி |
| நூற் எண் | - | நூற்பா எண் |
| மேலது | - | மேலே கூறப்பட்டுள்ள நூல் |

## முன்னுரை

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் திருச்சி மாவட்டம் பெரகம்பி என்ற ஊரில் எளிய வேளாண்மை குடும்பத்தில் பிறந்தவர்.திருச்சி சூசையப்பர் கல்லூரியில் வேதியியலில் இளங்கலை பட்டமும் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டமும் பெற்றார்.

இவர் ஏராளமான நூல்களை எழுதியுள்ளார். திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் 1960 தமிழ்த் துறையை நிறுவி 17 ஆண்டுகள் பணியாற்றினார். சுப்புரெட்டியார் தமிழறிஞரும் சிறந்த எழுத்தாளரும் பேராசிரியரும் ஆவார். இவர் எழுதியுள்ள 135 நூல்களையும் தமிழக அரசு நாட்டுடைமையாக்கியுள்ளது.

சுப்புரெட்டியார் திருவிக விருது ,திருக்குறள் விருது, டாக்டர் ராதாகிருஷ்ணன் விருது, கலைமாமணி விருது போன்ற பல விருதுகளைப் பெற்றுள்ளார் . இவர் எழுதிய நூல்களில் 12 நூல்கள் வைணவ சமய தத்துவங்களைப் பற்றியவை ஆகும். மேலும் இவரது கவி புலமையையும் ஆய்வு திறனையும் வைணவத் தொண்டினையும் பாராட்டும் விதமாக மார்ச் 1987 ஆம் ஆண்டு பண்ருட்டி ஸ்ரீமத் ராமானுஜர் நாவலர் சபை தமது 62-வது ஸ்ரீவைஷ்ணவ மாநாட்டில் இவருக்கு “ஸ்ரீ சடகோபன் பொன்னடி“ எனும் விருதைச் வழங்கி சிறப்பித்துள்ளது.

சுப்பு ரெட்டியார் அவர்கள் புதுமைக் கவிஞர் பாரதியார் பற்றிய செய்திகளை ஆய்ந்துள்ளார். சுப்புரெட்டியார் பாரதியார் பற்றி ஆய்ந்துக் கூறியதும் பாரதியின் தமிழ் பற்றையும், தேசப்பற்றையும், கல்வியின் முக்கியத்துவத்தையும் ,ஆன்மீக பார்வையும் ஆராய்ந்து கூறுவதாக இவ்வாய்வு அமைந்துள்ளது..

**ஆய்வுத் தலைப்பு**

"ந. சுப்புரெட்டியாரின் கண்ணோட்டத்தில் பாரதியார்" என்பது இவ்வாய்வின் தலைப்பாக அமைகிறது.

**ஆய்வு நோக்கம்**

சுப்புரெட்டியாரின் "புதுவை (மை) கவிஞர் சுப்ரமணிய பாரதியார் ஒரு கண்ணோட்டம் "என்ற நூலின் வாயிலாக பாரதியாரின் தேசப்பற்று, மொழி, கல்வி, பக்தி, கவிதை பற்றியும் ஆய்வதே இவ்வாய்வேட்டின் நோக்கமாக அமைகிறது.

**ஆய்வுக் கருதுகோள்**

பாரதியின் தேசப்பற்று ,மொழிப் பற்று ,ஆன்மீகச் சிந்தனை ,கல்வித் தொடர்பான கருத்துக்கள் கவிதைகள் ஆகியவற்றை ஆராய்ந்து விளக்கியுள்ளார்.

**ஆய்வு எல்லை**

புதுவை(மை)க் கவிஞர் சுப்ரமணிய பாரதியார் ஒரு கண்ணோட்டம் என்பதை ஆய்வு எல்லையாக உள்ளது

**ஆய்வின் முறை**

பாரதியார் ஒரு கண்ணோட்டத்தில் காணப்படும் செய்திகளைப் பகுப்பாய்வுச் செய்து காணும் பகுப்பாய்வு முறையும் அதனை விளக்கிக் காட்டப்பெறும் விளக்க முறை ஆய்வு ஈண்டு பயன்படுத்தப்படுகிறது.

**ஆய்வேட்டின் அமைப்பு**

இந்த ஆய்வானது முன்னுரை ,முடிவுரை நீங்களாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

இயல் -1 - பாரதியின் தேசப்பற்றும் மொழிப்பற்றும்

இயல் -2 - பாரதியின் கல்விச் சிந்தனைகள்

இயல்- 3 - பாரதியின் பக்திச் சுவை

இயல் -4 - பாரதி வளர்த்த புதுக்கவிதை

**இயல் ஒன்று**

பாரதியின் தேசப்பற்று, தேசிய கொடி வணக்கப் பாடல், பாரதத்தின் எல்லைகள், நாட்டுப்பற்றை ஊக்குவிக்கும் விதம் ,பாரத மாதாவை நோக்கி பாரதி பேசுவது ,விடுதலையின் சிறப்பு ,மொழி பற்றிய சிறப்புகள் ,தமிழர்களின் வெற்றி சிறப்பு, மேலை நாடுகளில் தமிழ்மொழி பரவுவது ,பாரதியின் தமிழ் பற்று, மொழிபெயர்ப்பின் சிறப்பு போன்றவை இவ்வியலில் ஆராயப்படுகின்றது.

**இயல் இரண்டு**

கல்வியின் அவசியம், ஆங்கில கல்வியின் அவலம், அறிவியல் கல்வி, தொழில் கல்விச்சிறப்புகள், பெண் கல்வியின் முக்கியத்துவம், புதுமுறைக் கல்வி போன்றவை இவ்வியலில் ஆராயப்படுகின்றது.

**இயல் மூன்று**

தோத்திரப் பாடல்கள், வேதாந்த பாடல்கள் ,கண்ணன் பாட்டு, பாரதியை சக்திதாசன் என அழைப்பதன் காரணம்,பாரதியார் சமரச நோக்கர் என்பதை சுப்புரெட்டியார் கூறுவது போன்றவை இவ்வியலில் ஆராயப்படுகின்றது.

**இயல் நான்கு**

பாரதியின் கவிச்சுவை, விட்மனின் கவிதை ,புதுக் கவிதையின் மூலம், பாரதியின் வசனகவிதை போன்றவை இவ்வியலில் ஆராயப்படுகின்றது.

**முதன்மை ஆதாரம்**

இவ்வாய்விற்கு புதுவை(மை)க் கவிஞர் சுப்ரமணிய பாரதியார் ஒரு கண்ணோட்டம் முதன்மை ஆதாரமாக அமைகிறது.

**துணைமை ஆதாரம் :**

பாரதியார் பற்றிய நூல்களும், ஆய்விற்கு தேவைப்பட்ட பிற நூல்களும் துணை ஆதாரமாக பயன்படுத்தப்படுகின்றன.

**முடிவுரை**

ஆய்வேட்டின் இறுதியில் முக்கியமான முடிவுகள் முடிவுரை என்ற தலைப்பின் கீழ் தரப் பெற்றுள்ளது. ஆய்வுக்குத் துணை செய்த நூல்கள் துணை நூற்பட்டியலாகத் தொகுத்து ஆய்வேட்டின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது.

# இயல்-1

## பாரதியின் மொழிப்பற்றும் தேசப்பற்றும்:

பாரதியார் வாழ்ந்த காலத்தில் நம் நாடு ஆங்கிலேயர்களுக்கு அடிமையாக இருந்தது. அடிமையாக இருந்தக் காலத்தில் தான் பாரதியாரின் பாடல்கள் தோன்றியதாக சுப்புரெட்டியார் கூறுகிறார். பாரதியாரின் பாடல்கள் நாட்டுபற்று, விடுதலை வேட்கை, தாய் மொழிப்பற்று, சமுதாய முன்னேற்றம், பெண் விடுதலை, பழமையில் புதுமை போன்றவற்றின் அடிப்படையில் அமைந்ததாக கூறுகிறார். இவை **'பாரதீயங்கள்'** என்று மாறின.

### பாரதியின் தேசப்பற்று:

பாரதியார் தன்னுடைய நாட்டை **'பாரத நாடு'** என்று கூறுவார். பாரதி தமிழகத்தையும் பிற பகுதிகளையும் பாரதப் பெருநாட்டின் அகப் பகுதிகளாகவே நோக்கினார். **"யாதும் ஊரே யாவரும் கேளிர்"** என்று வாழ்கின்ற தமிழ் மக்களிடம் குறுகிய நோக்கு இல்லை. பாரதி விடுதலைப் பாடல்கள் மட்டுமின்றி பாரத்தை பற்றியும் எழுதினார். பாரத்தை பாரத மாதாவாகவே இந்தியத் தாயாகவே காண்கிறார் பாரதியார் என்று சுப்புரெட்டியார் தம்முடைய ஆய்வில் கூறுகிறார். பாரதியார் நாட்டை வணங்கிப் பாடும் பாடலாக,

**"எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி**
**இருந்ததும் இந்நாடெ - அதன்**
**முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து**
**முடிந்ததும் இந்நாடே - அவர்**

**சிந்தையில் ஆயிரம் எண்ணம் வளர்ந்து**

**சிறந்ததும் இந்நாடே''[1]**

என்று நாட்டை வணங்கிப் பாடியுள்ளனர்.

**தேசியக் கொடி வணக்கப் பாடல்:**

சுதந்திர இந்தியாவிலே தேசியக் கொடிக்கு வணக்கஞ் செலுத்துவதைக் காட்டுகிறார் பாரதி வணங்குவது சாதாரணக் குடி மக்களல்ல. தேசத்தின் இராணுவத்தார் என்று கூறுகிறார். இதனை **''ம.பொ.சிவஞானம்''** தன்னுடைய நூலில் கூறியுள்ளார்.

**''தாயின் மணிக்கொடி பாரீர் - அதைத்**

**தாழ்ந்து பணிந்து புகழ்ந்திட வாரீர்''[2]**

என்று பாரதி கொடி வணக்கப் பாடலில், பல்வேறு காரணங்களால் சிதறுண்டு கிடக்கும் மக்களை ஒன்று கூடும்படி அறைகூவி அழைக்கின்றார். அனைவரும் ஒரு கொடியின் கீழ் வந்து திரளுமாறு பணிக்கின்றார். பாரதியார் பாரத மாதாவை **'கன்னிகை'** யாகவே காண்கிறார்.

பாரத மாதாவை,

**''முப்பது கோடி முகமுடையாள் உயிர்**
**மொய்ம்புற ஒன்றுடையாள் - இவள்**
**செப்பு மொழிபதி னெட்டுடையாள் எனிற்**
**சிந்தனை ஒன்றுடையாள்''[3]**

என்று பாரதி முப்பது கோடி மக்களையும் தாய் வடிவில் காண்பதாக கூறுகிறார். இப்பாடலின் மூலம் பாரதி வேற்றுமையில் ஒற்றுமை காண்கிறார் என்று சுப்புரெட்டியார் கூறுகிறார்.

**பாரதத்தின் எல்லைகள்:**

பாரதத்தின் எல்லையை தொல்காப்பிய மரபையொட்டி,

> **“நீலத் திரைக்கட லோரத்திலே — நின்று**
> **நித்தடம் தவம்செய் குமரிஎல்லை — வட**
> **மாலவன் குன்றம் இவற்றிடையே — புகழ்**
> **மண்ழக் கிடக்கும் தமிழ்நாடு”[4]**

என்று தமிழ்நாட்டிற்கு **“வடவேங்கடம் தென்குமரி”** என எல்லை வகுத்தது.

அடிமைத் தளையை அகற்ற வேண்டும் என்று கூறும் கவிஞர் இந்திய ஒருமைப்பாட்டையே நாடுகின்றார். சுதந்திர பாரதத்தின் எல்லைகள் இவையெனப் பிஞ்சு மனங்களுக்கு,

> **“வடக்கில் இமயமலை பாப்பா — தெற்கில்**
> **வாழும் குமரிமுனை பாப்பா**
> **கிடக்கும் பெரியகடல் கண்டாய் - இதன்**
> **கிழக்கிலும் மேற்கிலும் பாப்பா”[5]**

என்று இந்திய நாட்டின் எல்லையை வரைந்துக் காட்டியுள்ளார். வேறொரு இடத்தில் பாரத எல்லையினை கூறுகிறார். அவை

> **“பேரிமய வெற்பு முதல் பெண்குமரி ஈறாகும்**
> **ஆரியநா டென்றே அறி”[6]**

என்று எல்லையைக் குறிப்பிடுகிறார்.

**நாட்டுப்பற்றை ஊக்குவிக்கும் விதம்:**

பாரதியார் மக்களிடையே நாட்டுப்பற்றை ஊக்குவிக்கும் விதமாக பலப் பாடல்களை எழுதியுள்ளார். விடுதலை உணர்வை மக்கள் மனதில் எழுப்பும் விதமாக முதலில் நாட்டின் பழம் பெருமையைப் பேசி இந்த உணர்ச்சியை எழுப்ப முனைகிறார் கவிஞர் என்று சுப்புரெட்டியார் கூறுகிறார்.

**"பாருக்குள்ளே நல்ல நாடு – எங்கள்**

**பாரத நாடு"[7]**

என்று பல்லவியாகத் தொடங்கித் தோடிப் பண்ணில் இசையை எழுப்புகின்றார். தன்னுடை நாட்டை மக்களிடையே ஞானத்திலும், பரமோனத்திலும், கானத்திலும், வீரத்திலும், நெஞ்சில் ஈரத்திலும், நன்மையிலும், உடல் வன்மையிலும், ஆக்கத்திலும், தொழில் ஊக்கத்திலும், உயர் நோக்கத்திலும், உளத் திண்மையிலும், நுண்மையிலும், உண்மையிலும் உயர்ந்த நாடல்லவா? என்று புகழ்ந்துக் கூறுகிறார்.

**"பாரத வீரர் மலிந்தநன் னாடு**

**மாமுனி வோர்பலர் வாழ்ந்த பொன்னாடு**

**நாரத கான நலந்திகழ் நாடு**

**நல்லன யாவையும் நாடுறு நாடு**

**பூரண ஞானம் பொலிந்தநன் னாடு**

**புத்தர் பிரானருள் பொங்கிய நாடு**

**பாரத நாடு பழம்பெரு நாடு**

**பாடுவம் இ∴தை எமக்கில்லை ஈடே" [8]**

என்று பாடிப் பரவி நம்மிடம் நாட்டுப் பற்றை ஊட்டுகின்றார்.

**"முன்னர் நாடு நிகழ்ந்த பெருமையும்**

**மூண்டி ருக்குமிந் நாளின் இகழ்ச்சியும்"[9]**

பாரதியின் சிந்தனையில் நாடு விடுதலைப் பெற வேண்டும் என்ற எண்ணம் தோன்றுகிறது. ஆங்கில ஆட்சியால் நமக்கு அடிமைதான் புதிதேயன்றி விடுதலை என்பது புதிதன்று என்று பாரதியின் மனம் எண்ணுவதாக சுப்புரெட்டியார் ஆராய்ந்துக் கூறியுள்ளார்.

**பாரதி பாரத மாதாவை நோக்கிப் பேசுவது:**

பாரதியார் பாரத மாதாவை நோக்கு தம் நாட்டினருக்கு இடைக்காலத்தில் வந்த இழிநிலையை எடுத்துக் கூறுகிறார், அதனை

**“நின்பொருட்டு நின்னருளாய்**
**நின்னுரிமை யாம்கேட்டல்**
**என்பொருட்டு நீதான்**
**இரங்கா திருப்பதுவோ?**
**இன்று புதிதாய்**
**இரக்கின்றோ மோ? முன்னோர்**
**அன்றுகொடு வாழ்ந்த**
**அருமையெலாம் ஓராயோ?”[10]**

என்று பாரதி பாடுவதை தம் ஆய்வில் சுப்புரெட்டியார் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

**“அன்னையே அந்நாளில் அவனிக்கெல்லாம்**
**ஆணிமுத்துப் போன்றமணி மொழிக ளாலே**
**பன்னநீ வேதங்கள் உபநிட தங்கள்**
**பரவுபுகழ்ப் புராணங்கள் இதிகாசங்கள்**
**இன்னும்பல நூல்களில் இசைத்த ஞானம்**
**என்என்று புகழ்துரைப்போம் அதனை இந்நாள்”[11]**

என்று பாரதி அன்னை படைத்த ஞானச் செல்வங்களை எண்ணி எண்ணிக் களிப்படைகிறார்.

**விடுதலையின் சிறப்பு:**

நாட்டின் விடுதலையே பாரதியாரின் தாரக மந்திரமாக இருந்தது. நாட்டுப்பற்றைப் போலவே இதுவும் ஒரு பாரதீயம் என்று சுப்புரெட்டியார் கூறுகிறார். பாரதியாரின் தேசப்பற்றை உணர்த்தும் வகையில்

கிளைத்தெழுந்த ஒரு கொள்கை **“வந்தே மாதரம் ஒன்றே தாரகம்”** என்பது இதன் உயிராய பண்பு ஆகும். எனவே,

**“வீர சுதந்திரம் வேண்டிநின் றார்பின்னர்**

**வேறொன்று கொள்வா ரோ? என்னும்**

**ஆரமு துண்ணுதற் காசைகொண் பார்கள்ளில்**

**அறிவைச் செலுத்துவா ரோ?”[12]**

என்று பாரதியார் கேட்பதாக சுப்புரெட்டியார் கூறுகிறார்.

**தேசப்பற்றை சமயப்பற்றுடன் ஒப்பிட்டு கூறுகிறார்:**

நாயன்மார்கட்கும் ஆழ்வார்கட்கும் பக்தியே மூச்சாக இருந்தது. அது போல, பாரதியாருக்கு விடுதலையே மூச்சாக இருந்தது என்று பாரதியின் விடுதலை உணர்வை சுப்புரெட்டியார் ஆராய்ந்து கூறுகிறார். சமயப்பற்று நாட்டு மக்களிடையே குருதியுடன் ஊறிக் கிடைப்பதை நன்கு அறிந்தவர் பாரதியார். எனவே, பாரதி இந்திய நாட்டையே பாரத மாதாவாகவும், சுதந்திரத்தையே சுதந்திர தேவியாகவும் பாடிப் பரவி இம்மரபினைத் தழுவிக் கொள்கின்றான். சமயச் சார்ந்த பாங்கில் நாட்டு மக்களுக்கு விடுதலை உணர்வை ஊட்டும் வகையில் **“பாரத மாதா திருத்த சாங்கம்” “பாரத மாதா நவரத்தின மாலை”** போன்ற பாடல்களைப் பாடுகின்றார்.

**“திண்ணம் காணீப் பச்சை**

**வண்ணன் பாதத் தானை**

**எண்ணம் கெடுதல் வேண்டா**

**திண்ணம் விடுதலை திண்ணம்”[13]**

என்றப் பாடலானது

**“கண்ணன் கழலினை**

**நண்ணும் மனம் உடையீர்**

**எண்ணும் திருநாமம்**

**திண்ணம் நாரணமே''[14]**

என்று நம்மாழ்வாரின் பாசுரத்தை அடியொற்றி அமைத்து எழுதியுள்ளார்.

**''இதந்தரு மனையின் நீங்கி**

**இடர்மிகு சிறைப்பட்டாலும்**

**பதந்திரு இரண்டும் மாறிப்**

**பழிமிகுந் திழிவுற் றாலும்**

**விதந்தரு கோடி இன்னல்**

**விளைந்தெனை அழிந்திட்டாலும்**

**சுதந்திர தேவி! நின்னைத்**

**தொழிதிடல் பிறக்கிலேனே''[15]**

என்று பாரதி சுதந்திர தேவிக்குத் துதி பாடியுள்ளார். சுந்தரமூர்த்தி அடிகளின் திருத்தொண்டத் தொகையை பாடி அடியார் வழிபாட்டை தொடங்கி வைத்தார். இதேபோன்று பாரதியார் சுந்தரமூர்த்தி அடிகளின் வழியைப் பின்பற்றி காந்தியடிகள், தாதாபாய் நௌரோஜி திலகர், லாலாலஜபதிராய், வ.உ.சிதம்பரம்பிள்ளை போன்ற விடுதலை தொண்டர்களைப் பாடிப் போற்றினார் என்று சுப்புரெட்டியார் பாரதியைப் புகழ்ந்துக் கூறுகிறார்.

**மொழிப்பற்றின் சிறப்புகள்:**

தம் தாய்மொழி தமிழின் மீது அளவற்ற அன்புக் கொண்டவர் பாரதியார் பன்மொழிப் புலமைப்பெற்ற பாவலராவார்.

**''பொருப்பிலே பிறந்து தென்னன்**

**புகழிலே கிடந்து, சங்கத்து**

**இருப்பிலே இருந்து, வையை**

**ஏட்டிலே தவழ்ந்த பேதை**

**நெருப்பிலே நின்று, கற்றோர்**

**நினைவிலே நடந்துலர் ஏன**

**மருப்பிலே பயின்ற பாவை**

**மருங்கிலே வளரு கின்றாள்"[16]**

என்று **"வில்லி பாரதம்"** சிறப்புப் பாயிரத்தில் கூறுகிறது. பாரதியார் ஒரு பச்சைத் தமழ் மகன் தமிழகத்தில் பிறந்துள்ளார். பாரதியின் இணையற்ற கொள்கை மொழியையும் இனத்தையும் நாட்டையும் இணைத்துப் பாடியது **"பாரதீயம்"** ஆகும்.

**"வாழிய செந்தமிழ் வாழ்கநற் றமிழர்**

**வாழிய பாரத மணித்திரு நாடு"[17]**

என்ற பாரதியின் கொள்கை நம்மை அனைவரையும் ஈர்க்கின்றது. தன்னுடைய மக்களுக்கு பாரதி விடுதலை உணர்வையும், மொழிப் பற்றையும் குழைத்து ஊட்டியவர். தமிழகத்தின் பண்டைய பெருமைகளையும் கூறுகிறார் பாரதியார் தமிழகமானது தனிச்சிறப்பைக் கொண்டு விளங்குகிறது. தமிழ் மொழியானது நல் வரவேற்பினைப் பெற்று விளங்குகிறது.

**தமிழர்களின் வெற்றிச் சிறப்பு:**

தமிழகத்தின் பெருமையினையும், தமிழர்களின் வெற்றிகளையும் கூறுகிறார் பாரதி.

**"சிங்களம் புட்பகம் சாவக – மாதிய**

**தீவு பலவினும் சென்றேறி – அங்கு**

**தங்கள் புலிக்கொடி மீன்கொடியும் - நின்று**

**சால்புறக் கண்டவர் தாய்நாடு"[18]**

என்று கீழ்த்திரை வெற்றிகளையும் சிறப்பித்துக் கூறியுள்ளார் சுப்புரெட்டியார்.

**“விண்ணை யிடிக்கும் தலையிமயம் - எனும்**

**வெற்பை யடிக்கும் திறனுடையார் - சமர்**

**பண்ணிக் கலிங்கத் திருள்கெடுத்தார் - தமிழ்**

**பார்த்திவர் நின்ற தமிழ்நாடு”**[19]

என்று வடதிசை வெற்றிகளையும் பாரதி சுட்டிக் காட்டியுள்ளார். பாரத நாட்டுணர்வையுடைய கவிஞர் பாரதி இமய வெற்றியையும் கலிங்க வெற்றியையும் பற்றிக் கூறியுள்ளார் என்று சுப்புரெட்டியார் ஆராய்ந்துக் கூறியுள்ளார்.

**மேலை நாடுகளிலும் தமிழ்மொழி பரவல்:**

மேலை நாடுகளிலும் நம் தமிழ்மொழியானது சிறந்தப் பண்பினைப் பெற்று விளங்கி வருகிறது.

**“சீனம் மிசிரம் யவனம் இன்னும்**

**தேசம் பலவும் புகழ்வீசிக் - கலை**

**ஞானம் படைத்தொழில் வாணிகமும் - மிக**

**நன்று வளர்த்த தமிழ்நாடு”**[20]

என்று சீனம், மிசிரம், யவனம் முதலிய மேற்றிசை நாடுகளில் புகழ் பரப்பிய தமிழ்நாடு என்று பெருமிதத்துடன் பேசுகின்றார் பாரதி. இங்ஙனம் பழம்பெருமைகளையெல்லாம் பேசி **“எங்கள் தந்தையர் நாடென்ற பேச்சினிலே”**என்று நாட்டின் பெருமையைக் கூறியுள்ளார். மற்றைய நாடுகளில் நமது தாய்மொழியான தமிழைப் பற்றிய சிறப்பினை தமது சொற்பொழிவுகளால் சிறப்பித்துக் கூறி பெருமைச் சேர்த்துள்ளார் பாரதி.

**வள்ளுவரை போற்றும் பாரதி:**

பாரதியார் வள்ளுவர் பற்றிக் கூறும் புகழ்மாலையானது ஒப்புயர்வற்றது. திருவள்ளுவர் தன்னுடைய குறளடிகளால் மக்களை ஆட்கொண்டுள்ளார். பாரதி வள்ளுவரை,

**"வள்ளுவன் தன்னை உலகினுக் கேதந்து**

**வான்புகழ் கொண்ட தமிழ்நாடு"[21]**

என்று பாடியுள்ளார். வள்ளுவன் தமிழ்நாட்டின் கொடைப் பொருள் என்று மொழியோடும் நட்போடும் வைத்துப் புகழ்ந்துக் கூறிய ஒரே கவிஞர் நம் பாரதியே ஆவார். இந்த மாபெரும் தெய்வப் புலவரை உலகிற்கு தந்து தமிழ்நாடு பெற்றது வான்புகழாகும். வள்ளுவனின திருக்குறளானது மக்களிடையே நல்வரவேற்பினைப் பெற்று விளங்குகிறது. வள்ளுவர் தம்முடைய குறளால் சிறந்து விளங்குகிறார்.

**பாரதியின் தமிழ் பற்று:**

பாரதி ஒரு பன்மொழிப் புலவர், தமிழ் தவிர ஆங்கிலம், பிரெஞ்ச், சமஸ்கிருதம், தெலுங்கு, இந்தி முதலிய மொழிகளை கற்று தேர்ந்தவர். எனவே தமக்கு தெரிந்த பிற மொழிகளுடன் தமிழ் மொழியினை ஒப்பிட்டுப் பார்த்து தமிழ்மொழி இனிய மொழியாகவும் சிறந்த மொழியாகவும் இருப்பதை எண்ணி,

**"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல்**

**இனிதாவது எங்கும் காணோம்"[22]**

என்று புகழ்ந்து பாடியுள்ளனர்.

அடுத்த நிலையில் தாம் அறிந்த புலவர்களிலேயே தமழ்ப்புலவர்கள் ஆகிய **"கம்பனையும் வள்ளுவனையும் இளங்கோவையும் போல சிறந்த புலவர்கள் வேறு எங்கும் பார்க்கவில்லை"** என்றார் பாரதியார்.

பாரதியார் குழந்தைகளுக்காக பாடிய பாப்பா பாட்டில் குழந்தைகளுக்கு பலவிதமான அறிவுரைகளையும் கூறுகின்றார். தாய் நாட்டின் பெருமை, தாய் மொழியின் பெருமை ஆகியவற்றையும் குழந்தைகளுக்கு உரைக்கின்றார். அவ்வாறு கூறும்போது தமிழ் சொற்களின் பெருமையினை,

**“சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே – அதைத்**

**தொழுது படித்திடடி பாப்பா”[23]**

என்று பாடியுள்ளார்.

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் ஆங்கில மொழி செல்வாக்குப் பெற்று தமிழர்களாலும் கூட தமிழ்மொழி ஒதுக்கப்பட்டது. இதனைப் பார்த்து வேதனை அடைந்த பாரதியார் தமிழுக்கு உரிய இடம் கிடைக்க வேண்டும் அப்பொழுதுதான் தமிழ்மொழி வாழும் வளரும் என அறிந்து அதற்காக சில விடயங்களை முன்னிறுத்தி ஆக்கங்களை வெளியிட்டார். அவையாவன தமிழ்நாட்டில் பிள்ளைகள் தமிழ் வழியிலேயே கல்வி கற்க வேண்டும் என வலியுறுத்தினார் மேலும் எங்கும் எதிலும் தமிழ் இருக்க வேண்டும். எல்லாத் துறைகளிலும் தமிழைப் புகுத்த வேண்டும்.

அப்பொழுதுதான் தமிழ் செழிக்கும் உலகங்களும் பிறமொழியில் உள்ள நல்ல நூல்கள் ஆக்கங்கள் என்பன தமிழ் மொழி வளம் பெறும் எனவும் கூறியுள்ளார். இலக்கணத்தின் பழமையையும் கூறுகிறார். இதனை,

**“என்றுமுள தென்தமிழ்**

**இயம்பி இசை கொண்டான்”[24]**

என்ற அகத்திய முனிவரைப் பற்றிய கம்பன் வாக்கை கூறுகிறோம். தமிழ்ப் புலவர்கள் தீஞ்சுவைக் காவியங்களைச் செய்து தந்ததையும் நம்மிடம் கூறுகிறார் பாரதியார்.

**“கன்னிப் பருவத்தில் அந்நாள் - என்றன்**

**காதில் விழுந்த திசைமொழி எல்லாம்**

**என்னென்ன வோபெயர் உண்டு – பின்னர்**

**யாவும் அழிவுற் றிருந்தன கண்டீர்!”**[25]

என்று தம் காதில் விழுந்த திசைமொழிகளெல்லாம் பெயர் கூடத் தெரியாமல் அழிவுற்றன என்று கூறி மகிழ்வார். இந்த உலகில் அமர வாழ்வு பெற வேண்டுமானால் **“தெள்ளுதமிழ் நாடென்று செய்யுங்கள்”** என்று மேலும் நாட்டின்மேல் வைத்து நல்லுரை பகர்வார். **“சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்”** என்று பாரதி கூறுவதையும் சுப்புரெட்டியார் ஆராய்ந்து கூறியுள்ளார்.

**மொழிபெயர்ப்பின் சிறப்பு:**

பாரதியின் பாரதப் பாடல்கள் தமிழ்மொழிக்கு புதியவை ஆகும். அவருடைய பாடல் தமிழர்களிடையே அகன்ற நோக்கை உண்டாக்கக்கூடியவை எந்த மொழியிலிருப்பினும் உயர்ந்த சிந்தனையுடைய பாடல்கள் மற்றைய மொழிகளில் பெயர்க்கப்பற்று உலகப் பொதுச் சொத்தாகி விடவில்லையா? அதுபோலவே, பாரதியாரின் பாடல்களும் மொழி பெயர்க்கப்பட்டு நாட்டின் பொதுப் சொத்தாக பெறுதல் வேண்டும். குறிப்பாக **‘தாயின் மணிக்கொடி பாரீர்’** என்ற பாடல் இந்திய நாட்டில் உள்ள மொழிகளனைத்திலும் மொழி பெயர்க்கப் பெற்று சிறப்பு பெறுதல் வேண்டும்.

இவ்வாறு தேசப்பற்றையும் மொழி பற்றையும் சுப்புரெட்டியார் ஆராய்ந்து நமக்கு அளித்துள்ளார்.

## சான்றென் விளக்கம்


1. பாரதியார், நாட்டு வணக்கம் பா.எண்-1

2. மேலது ,தாயின் மணிக்கொடி - பல்லவி

3. மேலது, எங்கள் தாய்பா.எண் - 3

4. பாரதியார் கவிதை ,செந்தமிழ் நாடு பா.எண் -5

5. பாரதியார், பாப்பா பாட்டு பா.எண் -13

6 . மேலது ,பாரத தேவியின் திருத்தசாங்கம் பா.எண் - 2

7. மேலது ,பா.எண் -1

8. மேலது,எங்கள் நாடு பா.எண் -2

9. மேலது,சுயசரிதை - 26

10. மேலது,சுதந்திரப் பயிர் பா.எண் -13,14

11. மேலது,பாரத நவரத்தின மாலை பா.எண் -3

12. மேலது,சுதந்திரப் பெருமை பா.எண் -1

13. மேலது,பாரத நவரத்தின மாலை பா.எண்-6

14. நம்மாழ்வார், திருவாய்மொழி பா.எண் - 10.5:1

15. பாரதியார், சுதந்திரதேவியின் துதி பா.எண் -1

16. வில்லிப்புத்தூரார் ,வில்லிபாரதம் சிறப்புப் பாயிரம் பா.எண் -1

17. பாரதியார், தேசியகீதம் வாழிய செந்தமிழ்

18. மேலது,செந்தமிழ் நாடு பா.எண் -8

19. மேலது- 9

20. மேலது-10

21. மேலது- 7

22. பாரதியார், பாரதியார் கவிதை-2

23. மேலது,பாப்பா பாட்டு பா.எண் -12

24. கம்பராமாயணம் ஆரண்ய காண்டம் அகத்தியம் பா.எண் -47

25. பாரதியும் தமிழகமும் பா.எண் - 6

,ay;-2

## இயல்-2

## பாரதியின் கல்வி சிந்தனைகள்:

பாரதியின் கல்விச் சிந்தனையை சுப்புரெட்டியார் ஆராய்ந்து நமக்கு கூறியுள்ளார். பாரதி கல்வியின் மேன்மை பற்றியும் முக்கியத்துவம் பற்றியும் கூறுகிறார். இதனை ஆராய்ந்தும் சுப்புரெட்டியார் கூறுகிறார்.

### கல்வியின் அவசியம்:

மக்கள் அனைவரும் வழிபடுவதற்கு கோயில்கள் இன்றியமையாதவை. வுழிபட கோயில்களில் நல்ல சூழ்நிலையையும் போற்றிக் காக்க வேண்டும். இதேபோன்று பொது மக்கள் தம் குழந்தைகள், தம் சிறுவர்கள், வளர்ந்தவர்கள் கல்வி பெற எல்லா நிலைகளிலும் பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள் இன்றியமையாதவை என்பதை,

**"வீடுதோறும் கலையின் விளக்கம்**
**வீதிதோறும் இரண்டொரு பள்ளி**
**நாடு முற்றிலும் உள்ளன ஊர்கள்**
**நகர்க ளெங்கும் பலபல பள்ளி"[1]**

என்ற கவிதையில் கூறுகிறார்.

மகாகவி சுப்பிரமணிய பாரதியார் 19-ஆம் நூற்றாண்டிலேயே அதிக கல்வித் தகுதியைப் பெற்றிருந்ததுடன் பல மொழிகளிலும் தேர்ச்சி பெற்றிருந்தார். கல்வி குறித்தும் கல்வியில் மொழியின் பங்கு குறித்தும் இன்றைக்கும் பொருந்தக்கூடிய பல தீர்க்கமான பார்வைகளையும் தொலை நோக்கச் சிந்தனைகளையும் தனது கவிதைகளிலும் கட்டுரைகளிலும் அவர் வெளிப்படுத்தியிருக்கிறார்.

பாரதியார் வாழ்ந்த காலகட்டத்தில் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ஆட்சியில் இந்திய மக்களில் பெரும் பகுதியினருக்கு கல்வி கிடைத்திருக்கவில்லை. அதனால் அவர்கள் வறுமையிலும் அறியாமை இருளிலும் ஆழ்ந்திருந்தனர். இது குறித்து அவர் எழுதிய பல கவிதைகளும் கட்டுரைகளும் இந்தியாவில் கல்வியின் முக்கியத்துவத்தைத் தொடர்ந்து வலியுறுத்திய முன்னோடி சிந்தனையாளர்களில் ஒருவராக அவரை அடையாளம் காட்டுகின்றன.

மனித வாழ்வின் அடிப்படைத் தேவை உணவு, உடை, உறைவிடம். ஆனால், **"வயிற்றுக்குச் சோறிட வேண்டும் இங்கு வாழும் மனிதருக்கு எல்லாம் பயிற்றிப் பல கல்வி தந்து இந்தப் பாரை உயர்த்திட வேண்டும்**" என்னும் கவிதை வரிகளின் மூலம் உணவுக்கு இணையான முக்கியத்துவத்தை கல்விக்கும் அளித்திருக்கிறார் பாரதியார்.

> **"அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்**
> **ஆலயம் பதினாயிரம் நாட்டல்**
> **அன்ன யாவினும் புண்ணியம் கோடி**
> **ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்"2**

என்னும் கவிதையின் மூலம் பல்லாயிரம் பேருக்கு உணவளிக்கும் அன்ன சத்திரங்களையும் பதினாயிரம் கோவில்களையும் கட்டுவதையும் விட ஓர் ஏழைக்கு கல்வி கற்பிப்பதே மேன்மையான செயல் என்று வரையறுக்கிறார் இறை நம்பிக்கையாளரான பாரதி இறைப்பணியை விட கல்விக்குக் கூடுதல் முக்கியத்துவம் அளித்திருக்கிறார். கல்வி அளிப்பதன் மூலம் இறைவனை மகிழ்வித்து கூடுதல் புண்ணியம் பெற முடியும் என்று மத நம்பிக்கைக்கு மறுவிளக்கம் கொடுக்கிறார் நம் பாரதி.

கல்வி பற்றி இவர்தம் சிந்தனை பல கிளைகளில் சென்றுள்ளது என்பதையும் காண்கிறோம். நாற்றங் கால்களை நன்கு கவனித்தால்தான்

உழவுத் தொழில் சிறப்பாக அமையும். அது போலவே குழந்தைகளைத் தொடக்கத்திலிருந்தே சிறந்த முறையில் கல்வி கற்றலில் ஈடுபடுத்த நினைக்கும் கவிஞர்,

**“காலை எழுந்தவுடன் படிப்பு – பின்பு**
**கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு**
**மாலை முழுதும் விளையாட்டு – என்று**
**வழக்கப் படுத்திக் கொள்ளு பாப்பா”3**

என்று பாரதியார் குழந்தைகளுக்கு அன்பான முறையில் அறிவுரைகளைக் கூறுகின்றார். பாரதியின் தொடக்க நிலைக் கல்வியாக சுப்புரெட்டியார் கூறுவது எழுத்து, படிப்பு, கணக்கு, இலேசான சரித்திரப் பாடங்கள், பூமி சாஸ்திரம், மதப்படிப்பு, ராஜ்ய சாஸ்திரம், பொருள் நூல் சயனஸ் அல்லது பௌதிக சாஸ்திரம், கைத்தொழில் விவசாயம், தோட்டப் பயிற்சி, வியாபாரம், சரீரப் பயிற்சி, யாத்திரை போன்றவற்றில் அடிப்படையில் கல்வியைக் கூறுகிறார்.

**ஆங்கிலக் கல்வியின் அவலம்:**

இந்தியர்களுக்கு எத்தகைய கல்வி கற்பிக்கப்பட வேண்டும் கல்வியில் எவற்றுக்கெல்லாம் முன்னுரிமை அளிக்கப்பட வேண்டும் என்பது தீர்க்கமான, தெளிவான கருத்துகள் இருந்தன. இன்று கல்வித் துறையில் நிலவும் தம் சிக்கல்களுக்கு மாற்றாக கல்வித் துறை செயற்பாட்டர்களால் முன் வைக்கப்படும் சிந்தனைகள் பலவும் நூற்றாண்டுகளுக்கு முன்பே பாரதியிடம் வெளிப்பட்டிருக்கின்றன. தாய்மொழி குறித்த பாரதியின் கருத்துகள் அவற்றில் முதன்மையானவை. ஆங்கிலம், சமஸ்கிருதம், இந்தி உட்பட பல மொழிகளில் தேர்ச்சி பெற்றிருந்த பாரதி இந்தியர்கள் பல மொழிகள் கற்பதை ஊக்குவித்தார். அதே நேரம் பிற மொழிகளைக் கற்பதற்கு முன் தாய் மொழியில் தேர்ச்சி பெற்றிருப்பதை அடிப்படைத் தகுதியாக வரையறுத்தார்.

ஆங்கிலவழிக் கல்வியை அவர் ஏற்கவில்லை. **‘சுயசரிதை’** என்னும் நெடுங்கவிதையில் ஆங்கிலக் கல்வியின் அவலநிலை குறித்து ஆழ்மன வேதனையை வெளிப்படுத்துகிறார். தந்தை சின்னசாமி திருநெல்வேலிக்கு அனுப்பி ஆங்கிலக் கல்வி படிக்க வைத்தது குறித்து மனம் நொந்து பதிவு செய்துள்ளார். சிங்குக்குட்டியிடம் புல்லைக் கொடுத்துச் சாப்பிடச் சொல்வது அது என்று அவர் வர்ணித்துள்ளார். வெள்ளையர்களிடம் கைகட்டி சேவகம் செய்ய விரும்புவொரும் ஒற்றர்களும் பயிலும் கல்வி என்று ஆங்கிலக் கல்வியை இடித்துறைக்கின்றார்.

ஆங்கிலக் கல்வி பற்றி பாரதி கூறும் கண்டனக் கருத்துகள் மிகைபடக் கூறுவனவாகவேத் தோன்றுகின்றன. காந்தியடிகள், பண்டித ஜவகர்லால்நேரு, இராஜாஜி போன்ற பெருந்தலைவர்கள் இம்முறைக் கல்வியைப் பெற்றவர்களே. இவர்கள் யாவரும் கெட்டா போனார்கள் என்று சுப்புரெட்டியார் கூறுகிறார். இதனை,

> **“செலவு தந்தைக்கோ ராயிரம் சென்றது**
> **தீங்கே னக்குப்பல் லாயிரம் சேர்ந்தன**
> **நலமோ ரெள்துணை யும்கண்டி லேனிதை**
> **நாற்ப தாயிரம் கோயிலிற் சொல்லுவேன்”4**

என்று பாரதி கூறும் கருத்து ஒப்புக்கொள்ளத் தக்கதாக இல்லை என்று சுப்புரெட்டியார் கூறுகிறார்.

ஆங்கிலக் கல்விக்கூடங்களில் கற்பிக்கப்பெறும் கல்வி இந்திய நாட்டின் இயல்புக்கு ஒத்தாக இல்லை என்பது பாரதியார் கருத்து.

> **“கணிதம் பன்னிரண்டாண்டு பயில்வர், பின்**
> **கார்கொள் வானிலோர் மீனிலை தேர்ந்திலார்**

**அணிசெய் காவியம் ஆயிரம் கற்கினும்**

**ஆழ்ந்திருக்கும் கவியுளம் காண்கிலார்''5**

எனக் கற்கும் கல்வியின் பொருள் இன்னது எனத் தெரியாது அயல் மொழி என்ற மோகத்தினால் சிக்கி நாட்டினர் உழல்வதை அவர் இந்தப் பகுதியில் எடுத்துக் காட்டியுள்ளார். பாரதி ஆங்கிலக் கல்விக்கு எதிரானவர் என்று பொருள் கொள்ள வேண்டாம். கல்வியைத் தாய் மொழியில் பயிலும் போது சிந்தனைத் தெளிவு உண்டாகும். புதியன படைக்கத் தோன்றும். புரியாத, அதிலும் நம்மை அடிமைப்படுத்திய ஆங்கிலேயரின் மொழியை இந்த மண்ணுக்குப் பயன்தராத வகையில் கற்பதால் பயனேதுமில்லை என்பதாலேயே பாரதி தவிப்பும் எரிச்சலும் அடைகிறார்.

**அறிவியல் கல்வி:**

மக்களிடையே நிலவும் தேவையற்ற அச்சத்தையும் பொருளற்ற மூடநம்பிக்கைகளையும் தகர்க்க, அறிவியல் நோக்கும் அறிவியல் நுட்ப அறிவும் தேவை என்பதை உணர்த்துகிறார் பாரதியார். எனவே, வெளிநாட்டினரின் அறிவியல் நுட்பங்களைப் பற்றிக் கூறும் நூல்களைத் தமிழில் மொழி பெயர்க்க வேண்டும் என்றும், புதிய அறிவியல் நுட்பங்களைக் கூறும் நூல்களை நாமே படைக்க வேண்டும் என்றும் அவர் வேண்டுகிறார். பாரதியாரின் அறிவியல் பார்வை சிறப்பான வகையில் அமைகிறது. கல்வியின் சிறப்பினை உணர்ந்தவர் பாரதி. கல்வியினால் மக்களுக்கு ஏற்படும் அறிவு வளர்ச்சியை எடுத்துரைத்தவர். மேலும் சமுதாய முன்னேற்றத்திற்கு அறிவியல் நோக்கு மிகவும் தேவை என்பதையும் அறிந்தவர்.

அணுவாற்றல் ஆய்விலும், விண்வெளி ஆய்விலும் நாடு நல்ல முன்னேற்றம் கண்டுள்ளது. நாடு விடுதலைப் பெற்ற பிறகும் அறிவியல் துறையில் செயல்பட பல அறிஞர்களுக்கு வாய்ப்புக் கிட்டியது.

**“பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்**
**தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்**
**இறவாத புகழுடைய புதுநூல்கள்**
**தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்”6**

என்று பாரதிக் கூறுகிறார். தமிழில் எல்லாக் கலைகளையும் எழுத முடியும் என்பதை சிலர் ஒப்புக் கொள்ளவில்லை. தமிழிலும் அறிவியல் பற்றியக் கருத்துகள் விளக்கவும் எழுதவும் முடியும்.

சூரியக் குடும்பத்தையும், பால்வெளிவீதியையும் ஆராயும் அறிவை வானியல் அறிவு என்பர். இந்தியர்கள் பழங்காலம் தொட்டே வானியல் அறிவுடையவர்களாக விளங்கியதை வேதங்களும், உபநிடதங்களும் எடுத்துரைத்த வானியல் அறிவு பெற்றவராகவும் விளங்கியுள்ளார் என்பதை அண்டவெளியின் தன்மை, சூரியக் குடும்பம், சக்தி அழிவில்லாதது, பூமியின் சுழற்சி போன்ற அவர்தம் படைப்புகளில் எடுத்துரைத்துள்ளார்.

**“பயிற்றில் பலகல்வி தந்து - இந்தப்**
**பாரை உயர்த்திடல் வேண்டும்”7**

என்று கவிஞர் அறிவியல் கல்விக்கு ஆற்றுப்படுத்துகின்றார்.

**“மந்திரம்கள் போம்வினைத்**
**தந்திரம் கற்போம்**
**வானையளப் போம்கடல்**
**மீனையளப் போம்**
**சந்திர மண்டல த்தியல்**

**கண்டு தெளிவோம்**

**சந்தி தெருப் பெருக்கும்**

**சாத்தரம் கற்போம்"8**

என்ற கவிதையில் கவிஞரின் அறிவியல் கல்வியில் பேரவா நிழலிடுவதைக் கண்டு மகிழலாம்.

அறிவியல் கல்வியினைத் தமிழில் பெறவேண்டும் என்பதே பாரதியின் அதிராக் கொள்கை ஆகும். அதற்கு முன்னர் அறிவியல் துறையில் உள்ள கலைச்சொற்களை அறுதியிடல் வேண்டும் என்பதற்கும் பல யோசனைகள் சொல்கிறார்.

**தொழிற்க் கல்விச் சிறப்புகள்:**

தொழில் வளம் பெருகினால் தான் நாட்டுவளம் பெருகும் என்பது இக்காலத்தில் பொருளியல் காட்டும் உண்மை ஆகும். ஜப்பான் போன்ற சிறு நாடுகளில் செல்வம் கொழித்து வருவதை காண்கிறோம். பின் தங்கிய நாடுகளுக்கு இத்தகைய சிறு நாடுகள் உதவி வருவது நமக்கு வியப்பான செய்தியை உண்டாக்குகிறது. ஏட்டுக்கல்வியை மட்டும் கற்றுவிட்டு, வேலை வாய்ப்பு அலுவலகத்தில் பதிவு செய்து விட்டு, வேலைக்காக காத்திருக்கும் இளைஞர்கள் நம் நாட்டில் பல லட்சம் பேர் உண்டு. அவர்கள் ஜப்பான் நாட்டு இளைஞர்களை போல் ஏதேனும் ஒரு தொழிலையும் கற்றிருந்தால் வேலைக்காக காத்திருக்க வேண்டிய அவசியம் இல்லை. எனவே தொழிற்கல்வி அவசியமானது என்பது அறியப்படுகிறது.

அறிவியலைக் கைகொள்ளுதல் என்பதோடு, தொழிற் கல்வியின் தேவையையும் பாரதி வலியுறுத்துகிறார். **"இயன்ற வரை மாணாக்கர்கள் எல்லாருக்கும், விசேஷமாகத் தொழிலாளர்களின் பிள்ளைகளுக்கு நெசவு முதலிய முக்கியமான கைத்தொழில்களிலும் நன்செய், புன்செய்**

**பயிர்த்தொழில்களிலும் பூ, கனி, காய், கிழங்குகள் விளைவிக்கும் தோட்டத் தொழில்களிலும் சிறு வியாபாரங்களிலும் தகுந்த ஞானமும் அனுபவமும் ஏற்படும் செய்தல் நன்று''9** என்கிறார். **''தொழிற்கல்விக்கு ஆசிரியர்களைத் தவிர, தொழிலாளிகள், வியாபாரிகள், விவசாயிகளிலே சற்றுப் படிப்பும், தொழில் அனுபவமும் உடையவர்களைக் கொண்டு ஆரம்பப் பயிற்சி ஏற்படுத்திக் கொடுத்தல் மிகவும் நன்மை தரக்கூடியதாக அமையும் என்பது பாரதியின் எண்ணம்''.10**

பல்வேறு பண்டங்களை உற்பத்தி செய்தலையும் தொழிற் சாலைகளை அமைத்தலையும் தொழிற்கல்வி நிலையங்களை நிறுவுதலையும் பற்றி திட்டங்களை,

**''ஆயதம்செய் வோம்நல்ல காகிதம் செய்வோம்**
**ஆலைகள் வைப்போம் கல்விச்சாலைகள் வைப்போம்**
**ஓயுதல்செய் வோம்தலை சாயுதல் செய்யோம்**
**உண்மை செல்வோம்பல வண்மைகள் செய்வோம்''11**

என்ற கவிதைப் பகுதிகளில் கண்டு மகிழலாம்.

வேளாண்மைத் தொழிலுக்கும் கைத்தொழில் போன்றவற்றிற்கும் மதிப்பு தரும் கல்வியைப் பாரதி போற்றுவதை சுப்புரெட்டியார் கூறுகிறார். **''உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்''12** என்ற கூற்றினால் இதனைத் தெரிந்துக் கொள்ளலாம். **''தொழில்''** என்ற கவிதையில் பல்வேறு தொழில்களைப் பாராட்டி,

**''அரும்பும் வேர்வை உதிர்த்துப் புவிமேல்**
**ஆயிரந் தொழில் செய்திடு வீரே''13**

என்றுக் கூறுகிறார். இதன் மூலம் பாரதி தொழிற் கல்விக்கும் முக்கியத்துவம் அளிக்கிறார்.

**பெண் கல்வியின் முக்கியத்துவம்:**

பெண்களைத் தெய்வமாக கருதும் நம் நாட்டில் பாரதியார் இக்காலச் சமூகத்தில் பெண் இனத்திற்கு மதிப்பு தராத இழிவான நிலையை நினைத்து பார்க்கின்றது. பெண்மையும் காதலையும் இணைத்துப் போற்றியுள்ளார். காதலின் ஊற்று பெண்ணன்றோ? என்றுக் கூறியுள்ளார்.

> **"செவ்விது செவ்விது பெண்மை – ஆ!**
>
> **செவ்விது செவ்விது காதல்!**
>
> **காதலி னாலுயிர் தோன்றும் - இங்கு**
>
> **காதலி னாலுயிர் தோன்றும் லேறும்!**
>
> **காதலி னாலறி வெய்தும் - இங்கு**
>
> **காதல் கவிதைப் பயிரை வளர்க்கும்"14**

பெண்கல்வியே சமுதாய முன்னேற்றத்திற்குச் சிறந்தவழி என வழிகாட்டுகிறார். பெண்கள் முன்னேற்றம் குறித்துத் தமது கருத்துகளைச் **'சக்கரவர்த்தினி'** என்ற இதழில் கட்டுரைகளாகவும் மற்றும் எழுச்சிமிக்க கவிதைகளாகவும் எழுதியுள்ளார். தாம் எழுதிய சிறுகதைகளிலும் குறிப்பிட்டிருக்கிறார்.

பெண்களை எண்ணத்தால், சொல்லால், செயலால் இழிவுபடுத்துவது அறிவற்ற செயல் என்றும் அதனை அறவே நீக்க வேண்டும் என்றும் பாரதியார் குறிப்பிடுகின்றார்.

> **"மாதர் தம்மை இழிவு செய்யும்**
>
> **மடமை யைக்கொ ளுத்துவோம்"15**

மேலும் நாட்டுக்கு நன்மை செய்ய எண்ணமுள்ளவர்கள் பெண்களை அடிமை நிலையிலிருந்து மீட்டு முன்னேற்றப் பாடுபட வேண்டும் என்கிறார்.

இயல்பாகவே பெண்கள் அறிவுக் கூர்மையுடையவர்கள் ஆண்களைவிட இளமையிலேயே பொறுப்பை உணர்ந்தவர்கள், கடமையைப் போற்றுவர்கள் என்று பெண்களைப் புகழ்ந்துள்ளார்.

**“பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான் - புவி**

**பேணி வளர்த்திடும் ஈசன்**

**மண்ணுக் குள்ளே சிலமூடர் - நல்ல**

**மாத ரறிவைக் கொடுத்தார்”16**

என்று சில அறிவிலிகளை அம்பலப் படுத்திக் கூறுகின்றார். இன்று பள்ளிகள், கல்லூரிகளில் பெண்களே ஆண்களை விட அதிக அளவில் கல்வியினைப் பெற்று வருகின்றனர். சமூகத்தில் ஆணும் பெண்ணும் இரு கண்களை யொத்தவர்கள் என்றும் சமமானவர்கள் என்றும் கூறுகிறார் பாரதியார்.

**“ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்**

**அறிவி லோங்கிஇவ் வையம் தழைக்குபால்”17**

பெண்ணின் வாழ்வியலை வகுத்தால், அது கல்வியில் தொடங்க வேண்டும். வேறு பிறவழிகளில் பெறமுடியாத முன்னேற்றத்தைக் கல்வியால் பெறமுடியும் என்பது பாரதியாரின் அழுத்தமான நம்பிக்கை. பெண்களின் முன்னேற்றத்திற்கு மூன்று வழிகளைக் கூறுகின்றார்.

**“அதற்கு மூன்றுவிதமான உபாயங்கள் இருக்கின்றன. முதலாவது உபாயம் கல்வி, இரண்டாவது உபாயம் கல்வி, மூன்றாவது உபாயம் கல்வியே! அதாவது கல்வியைத் தவிர வேறு எல்லா விதமான உபாயமும் சிறுதேனும் பயன்படாது என்பது கருத்து”.** 18

இதில் கல்வி ஒன்றே பெண்களுக்கு அடிமை நிலையிலிருந்து முன்னேற்றத்தை நல்கும் கருவி எனப் பாரதியார் நம்புவது புலப்படுகிறது.

படித்த பெண்கள் சமுதாயத்தில் தலைநிமிர்ந்து நிற்பதோடு ஆட்சியிலும் பங்கேற்கிறார்கள். இதை,

> **“பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்**
> **பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்**
> **எட்டும் அறிவினில் ஆணுக்கு இங்கே பெண்**
> **இளைப்பில்லை காண்”19**

எனப் படித்த விடுதலைப் பெண்கள் கூறுவதாகப் பாரதியார் குறிப்பிடுகின்றார்.

**புதுமுறைக் கல்வி:**

பாரதியாரின் கவிதைகளையும் பிறவற்றையும் ஊன்றிப் பயிலுங்கால் அவர் ஏதோ புதுமுறைக் கல்வியைப் பற்றிச் சிந்தித்தாக ஊகம் செய்யத் தூண்டுகின்றது. இந்த முறைக் கல்வியினால் பண்பாடு, புதுமுறையான சமய நம்பிக்கை, பக்தி வளர்ச்சி, மூடப் பழக்க வழக்கங்களை ஒழித்தல் போன்ற வகையில் சீர்திருத்த முறையில் மக்களிடம் அமைய வேண்டும் எனக் கருதினாரோ என்று எண்ணத் தோன்றுகிறது.

பாரதியார் மக்களிடம் மூடப்பழக்கங்கள் நிறைந்ததை எண்ணி கவலையுறுகிறார். பேய்கள், மந்திரவாதியின் செயல்கள், யந்திர சூனியங்கள் ஆகியவற்றைக் கண்டு **“நெஞ்சு பொறுக்குதில்லையே”** என்று நொந்து கொள்கிறார்.

> **“சாத்திரம் கோடி வைத்தான் - அவை**
> **தம்பினும் உயர்ந்தோர் ஞானம் வைத்தாள்”20**

எங்கும் சகோதரத் தன்மை நிலவ விழைகின்றார் பாரதியார் என்று சுப்புரெட்டியார் கூறுகிறார்.

## சான்றென் விளக்கம்

1. பாரதியாரின் தெய்வப்பாடல்கள்,வெள்ளைத்தாமரை பா.எண் -61
2. மேலது,9
3. பாரதியார் ,பாப்பா பாட்டு பா.எண் -
4. மேலது,சுயசரிதை -29
5. மேலது,-23
6. பாரதியார்,தமிழ்த்தாய் -2
7. மேலது,பாப்பா பாட்டு, முரசு -30
8. மேலது,பாரத தேசம் - 11
9. பாரதியார் கட்டுரைகள் ப.எண் -258
10. மேலது- 258
11. பாரதியார், பாரத தேசம் பா.எண் -9
12. மேலது,சுதந்திரப் பள்ளு பா.எண்-4
13. மேலது,தொழில் கவிதை பா.எண் -1
14. மேலது,அந்திப்பொழுது பா.எண் -3,4
15. மேலது,விடுதலை பா.எண் -3
16. பாரதியாரின் முரசுப்பாட்டு பா.எண் -9
17. பாரதியார் ,புதுமைப் பெண் பா.எண் -1
18. மேலது,சக்கரவர்த்தினி கட்டுரை ப.எண் - 83
19. மேலது,பெண்கள் விடுதலைக் கும்மி பா.எண் -6
20. மேலது,பாரத ஜனங்களின் தற்கால நிலை

## இயல்-3

## பாரதியின் பக்திச்சுவை:

பாரதியின் பாடல்களில் காணப்பெறும் பூமகள், இராமன், கோவிந்தன் இவர்கள் பற்றியப் பாடல்களும், இறைவா! இறைவா என்ற தனிப்பாடலும் **'கண்ணன் பாட்டு'** என்ற தலைப்பில் காணப்பெறும் 23 பாடல்களும், தோத்திரப் பாடல்கள், வேதாந்தப் பாடல்கள் என்ற பிரிவுகளில் பல்வேறு தலைப்புகளில் காணப்பெறும் 14 பாடல்களும் பாரதியாரை ஒரு வைணவச் செல்வராகக் காட்டுகின்றன என்று சுப்புரெட்டியார் கூறுகிறார்.

**தோத்திரப் பாடல்கள்:**

இதில் 78 பாடல்களாக உள்ளன. தேசிய கீதங்களை விட அதிக ஆர்வத்தையும் கருத்துச் செல்வத்தையும், கவிதைச் சுவையையும் மட்டில்லாத பக்திப் பான்மையையும் பெற்றவையாக பாரதியின் தோத்திரப் பாடல்களாக உள்ளன. கண்ணன், முருகன் போன்ற தெய்வங்களைப் பற்றிப்பாடியிருக்கும் கீதங்கள் மனதை உருக்கும் தன்மையுடையவைகளாக உள்ளது. அதில் எடுத்துக்காட்டாக சுப்புரெட்டியார் கோவிந்தனைப் பற்றியதைக் கூறுவதைக் காண்போம்.

**"எளியனேன் யானெனலை எப்போது**
**போக்கிடுவாய் இறைவனே! இவ்**
**வளியிலே பறவையிலே மரத்தினிலே**
**முகிலினிலே வரம்பில் வான**
**களியிலே கோவிந்தா! நினைக்கண்டு**
**நின்னொடுநான் கலப்ப தென்றோ?"1**

இப்பாடல்களைப் படிக்கும்போது நம்மைப் பக்தியின் கொடுமுடிக்கு இட்டுச் சென்று விடுகின்றது. ஆழ்வார் பாசுரங்களை நினைக்கச் செய்து ஆரா அமுதமாக இனிக்கச் செய்கின்றது.

**வேதாந்தப் பாடல்கள்:**

வேதாந்தப் பாடல்கள் 25 பாடல்களாக உள்ளன. பாடல்கள் அனைத்தும் இலகுத் தமிழில் இருப்பினும் இவையாவும் அநுபூதி நிலையில் உள்ளவை **'நான்'** என்ற தலைப்பிலுள்ள ஏழு பாடல்களும் கீதையின் விபூதி யோகத்தையும் (இயல்-10) நம்மாழ்வாரின் திருவாய்மொழியையும் நினைக்கச் செய்கின்றன.

**"வானில் பறக்கின்ற புள்ளெல்லாம் நான்**
**மண்ணில் திரியும் விலங்கெலாம் நான்**
**கானில் வளரும் மரமெலாம் நான்**
**காற்றும் புனலும் கடலுமே நான்"2**

என்பது பாரதியாரின் பாடல் ஆகும்.

**"அர்ச்சனா, எல்லா உயிர்கட்கும் வித்து எதுவோ; அது நான் என்னையன்றி ஜங்கம் ஸ்தாவரங்களில் வாழ்வது ஒன்றுமில்லை".** 3 என்பது கீதை ஆகும்.

**"கடல்ஞாலம் செய்தேனும் யானே என்னும்**
**கடல்ஞாலம் ஆவேனும் யானே என்னும்**
**கடல்ஞாலம் கொண்டேனும் யானே என்னும்**
**கடல்ஞாலம் கீண்டேனும் யானே என்னும்"4**

என்பது நம்மாழ்வாரின் திருவாய்மொழி ஆகும். பாரதியின் வேதாந்தப் பாடல்களை சுப்புரெட்டியார் ஆராய்ந்து நமக்களித்துள்ளார்.

**கண்ணன் பாட்டு:**

கண்ணன் பாட்டில் 23 பாடல்கள் உள்ளன. பெரியாழ்வாரைப் பின்பற்றி இப்பாடல்களை இயற்றினாரோ பாரதி என்று சுப்புரெட்டியார் நினைக்கிறார். ஏனெனில் பெரியாழ்வார் பாசுரங்கள் சமய வேட்கையினின்றும் ஆழ்ந்த பக்தியினின்றும் முகிழ்த்தவை என்கிறார். பாரதியின் பாடல்கள் அவருடைய கவிதை பக்தியினின்றும் கனிந்தவை. இவற்றை நன்கு அனுபவித்த புதுக்கவிஞர் ஒருவர்.

**"பல**

**கோணங்களில்**

**கண்ணனைப்**

**படம்**

**பிடித்த**

**கேமரா"5**

என்றுப் பேசி மகிழ்கின்றார் கண்ணனின் பாட்டின் மாற்று இப்புதுக்கவிதையில் பளிச்சிடுகின்றது; கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையும்,

**'கண்ணன் காதலன்! – எனக்கொடு**

**களிய முதமடா!**

**விண்ண முதமுமே – அதனை**

**வெல்ல மாட்டா தடா!'6**

என்ற பாடலில் கண்ணன் பாட்டை மதிப்பிட்டுக் கூறுகின்றார்.

"கண்ணன் பாட்டின் ஆசிரியர் ஸ்ரீமான் சி.சுப்பிரமணிய பாரதியாரைத் தமிழ் நாட்டார் அறிவாரிகள், ஆனால் அவர் பெருமையை உள்ளபழ அறிந்தவர்கள் மிகமிகச் சிலரேயாவர். ஸ்ரீமான் பாரதியார் ஒரு பெரிய

மேதாவி. மகா பண்டிதர் தெய்வீகப் புலவர், ஜீவன் முத்தர். இவர் தமிழ்நாட்டின் ரவீந்திரர்; இவர் எனது தமிழ்நாட்டின் தவப்பயணி. இந்த ஆசிரியரின் காலத்திற்குப் பின், எத்தனையோ நூற்றாண்டுகட்குப் பின், இவர் பாடல்களைத் தமிழ் நாட்டு மாதர்களும் புருஷர்களும் மிகுந்த இன்பத்துடன் படித்துக் களிப்படையும் காட்சியை யான் இப்பொழுதே காண்கின்றேன். இந்நூல் வாழ்க! எந்தாய் வாழ்க!"

இது 'கண்ணன் பாட்டுக்கு' நெல்லையப்ப பிள்ளை எழுதிய முகவுரையின் பகுதி ஆகும். உபநிடதக்கூற்று போன்று பிள்ளையவர்களின் கூற்றின உண்மையை இன்று நாம் காண்கின்றோம்.

கண்ணன் பாட்டு அமைவதில் பாரதியாருக்கு **'சம்பந்த ஞானம்'** வழிகாட்டியிருக்க வேண்டும் என்று சுப்புரெட்டியார் கூறுகிறார். ஏனென்றால் என் பெருமானுக்கும் நமக்கும் உள்ள உறவினை திருமந்திரம் மூலம் பிள்ளை அவர்கள் அருளிய **"நவவித சம்பந்தம்"** என்னும் நூலில் அறியப்படுகிறது இந்த உறவுமுறைகள் ஆழ்வார் பாசுரங்களால் அறிய முடிகிறது. ஆழ்வார் பாசுரங்களில் எம்பெருமானை தாய், தந்தை, குரு என்று பேசப்படுவதையும் காணலாம். இவற்றையெல்லாம் மனதில் கொண்டுதான் பாரதியார் கண்ணனைத் தந்தையாகவும், தாயாகவும், தோழனாகவும், சீடனாகவும், அரசனாகவும், காதலனாகவும், காதலியாகவும், சற்குருவாகவும், தெய்வமாகவும் பாடியுள்ளார் என்பதை அறியலாம். பாரதியாரின் கண்ணன் பாட்டிலிருந்து ஒரு சில உறவுமுறைகளைப் பற்றிக் காண்போம்.

**கண்ணன் - என் தாய்:**

இறைவனைத்தாய் நிலையிலும் தந்தை நிலையிலும் வைத்து பாரதிக் கூறுகிறார். அன்பு காட்டி வேண்டியவற்றை பெறுவதால் தாயும், கல்வி

முதலியவற்றை நடத்துவதில் தந்தையும் பொறுப்பாக இருப்பதால் அவர்கள் உவமையாகக் கொள்ளப் பெற்றனர்.

முதலில் உடலுக்கு உரம் ஊட்டுவதைப் பற்றிப் பேசுகின்றார் பாரதியார்,

**"உண்ண உண்ணத் தெவிட்டாதே – அம்மை**
**உயிரெனும் முலையினில் உணர்வெனும்பால்**
**வண்ணமுற வைத்தெனக்கே – என்றன்**
**வாயினிற்கொண் டூட்டுவோர் வண்மையுடையாள்"7**

என்ற பகுதியில் அன்னை பாலூட்டிச் சீராட்டுவதைக் காட்டுகிறார். மணிவாசகப் பெருமானும் **"பால் நினைந்தூட்டும் தாய்"** என்று அன்னையின் பெருமையை அருமையை எடுத்துக் காட்டுவர். தாய்ப்பால் உண்ண உண்ணத் தெவிட்டாதது. இந்தப்பால் உயிரெனும் முலையில் உணர்வாக ஊறுவது குழந்தை பிறந்தவுடன் அதற்கு வேண்டும் பால் எங்கிருந்து கிடைக்கும் என்பதை அது அறியாது. தாய்தான் தன் முலைக்காம்பை அதன் வாயில் வைத்து ஊட்டுகின்றாள். சக்தி தேவிதான் கண்ணம்மா வடிவில் தனக்கு இவ்வாறு ஊட்டுவதாகக் கருதுகின்றார் கவிஞர்.

தாயைப் போன்று கருதி வருகின்றார். கண்ணம்மாகவும் கதைகளைக் கூறுவதைக் காட்டுகின்றார். இங்கு அன்னையைக் கவிஞர் அகில உருவமாகக் காண்பதையும் சுப்பரெட்டியார் கூறுகிறார்.

**கண்ணன் என் தந்தை:**

சமயச் சான்றோர்கள் எம் பெருமானைத் தந்தை நிலையில் வைத்தெண்ணக் கூடிய இடங்கள் எண்ணற்றவையாக உள்ளன. எடுத்துக் காட்டாக நம்மாழ்வார் திரு.வேங்கடமுடையானை,

**"------ திருவேங் கடத்து**

**என் ஆனை என் அப்பன்"8**

என்றும், திருக்குறுங்குடி எம்பெருமானை,

**"குறுங்குடி மெய்ம்மையே**

**உளனாய எந்தையை"9**

என்றும் குறிப்பிடுவதைக் காணலாம். இந்த ஆழ்வாரே திருவிண்ணகர் சேர்ந்த பிரானை,

**"என்சரண் என்கண்ணன் என்னை**

**ஆளுடை என் அப்பனே"10**

பாரதியார் தாம் காணும் கண்ணன் என்னும் தந்தையின் திருநாமம் பற்றிக் கூறுகின்றார்.

**"நாவு துணிகுவ தில்லை – உண்மை**

**நாமத்தை வெளிப்பட உரைப்பதற்கே**

**யாவருந் தெரிந்திடவே – எங்கள்**

**ஈசனென்றும் கண்ணனென்றும் சொல்லுவதுண்டு**

**மூவகைப் பெயர்புனைந்தே – அவன்**

**முகமறி யாதவர் சண்டைகள் செய்வார்**

**தேவர் குலத்தவ னென்றே – அவன்**

**செய்திதெரி யாதவர் சிலருரைப் பார்"11**

இந்தச் செய்யுளிலே **"மூவகைப் பெயர்"** என்று பாரதியார் கூறுவது **'அரி-அரன்-அயன்'** என்னும் பெயர்களையே இப்படிப் பேதப்படுத்திப் பெயரிட்டவர்கள் இறைவனை அறியாதவர்கள் என்கிறார். இந்த

மும்மூர்த்திகளிலே ஒவ்வொரு மூர்த்தியையும் தனித்தனித் தெய்வமாகக் கருதி வழிபடுகின்றார்.

**கண்ணன் என் சேவகன்:**

பாரதியாரின் இத்தலைப்புள்ள பாடல் கண்ணனின் எளிமைக் குணத்தைக் காட்டுவதாக அமைந்துள்ளது என்று கூறுகிறார். அதுமட்டுமன்றி இப்பாடலில் சேவர்களின் சேவைகளையும் எள்ளி நகையாடுவதையும் கூறுகின்றார். பொதுவாகச் சேவர்கள்-பணியாளர்கள் பற்றி பாரதி கூறுவது,

**“கூலிமிகக் கேட்பார் கொடுத்ததெல்லாம் தாம்மறப்பார்**

**வேலைமிக வைத்திருந்தால் வீட்டிலே தங்கிடுவார்”12**

சில சேவகர்கள் ஊதியம் மிகுதியாகக் கேட்பார்தாம் கொடுக்கும் ஊதியத்தை மறந்துவிடுவார். வீட்டில் வேலை அதிகம் இருந்தால் வேலைக்கு வராமல் வீட்டில் தங்கிவிடுவார். இக்கருத்தானது பொதுவாக அரசு ஊழியர்கள் உட்பட வேலையாட்களின் பண்பு பொருத்தமாகும் என்று சுப்புரெட்டியார் கூறுகிறார்.

நல்ல சேவகர்களும் இல்லாமல் இல்லை. சரியான கையாட்களாகச் சிலர் செயற்படுவதையும் காண்கிறோம் என்கிறார். பாரதியார் காட்டும் **‘கண்ணன் என் சேவகன்’** நல்ல உடல் கட்டுள்ளவன், கண்ணிலே களங்க மற்ற பார்வை, வாயில் இனிமையான பேச்சு, யார் கண்டாலும் **‘நல்ல வேலைக்காரன்’** என்ற கருத்து ஏற்பட்டுவிடும் என்று பாரதி கூறுவதை சுப்புரெட்டியார் தம் ஆய்வில் எடுத்தாண்டுள்ளார். கண்ணன் மிகவும் எளிமைக்குணம் படைத்தவன் என்றும் பாரதி கூறுவதை சுப்புரெட்டியார் கூறுகிறார்.

**கண்ணன் - என் காந்தன்:**

கண்ணன் என் காந்தன் என்ற பாடலும் தனி விளக்கத்திற்கு உரியது. தமிழ் இலக்கியத்தில் சிறந்த பகுதி அகத்துறை இலக்கியம் ஆகும். இது களவு, கற்பு என்று இருவகையாகப் பகுத்துப் பேசப்படும். களவுக் காலத்தில் தலைவனும் தலைவியும் ஒருவர் மேல் மற்றொருவர் கொண்டிருக்கும் அன்பு-ஆராக் காதல் இவ்வளவு அவ்வளவு என்று எடுத்துக் கூறல் இயலாது. இக்காலத்தில் தலைவன் **'கையுறை'** கொண்டு தலைவியைச் சந்திக்கும் வாய்ப்புகள் உண்டு. பெரும்பாலும் இக் **'கையுறை'** பற்றிய செய்தியை **'இறையனார் களவியல்' திருக்கோவையார்'**, **'தஞ்சைவாணன் கோவை'** போன்ற நூல்களில் காணலாம்.

இங்கு **'காந்தன்'** என்ற பெயர் களவுக் காலத்தில் உள்ள தலைவனுக்குப் பாரதியார் சூட்டிய பெயராகும். இங்ஙனமே இக்கவிஞர் பெருமான் அத்தினபுரத்துப் பெண்களை **'மலர்விழிக் காந்தங்கள்'** என்று காட்டுவதையும் ஈண்டு நினைவு கூறலாம். களவு வாழ்க்கையில் காதலர்கள் ஒருவரை ஒருவர் சந்திக்கும் வாய்ப்புகள் அருகியிருக்கும்போது இருவர் மட்டும் காதல் உணர்ச்சி காந்த சக்திபோல் உறைப்பது இருக்கு மாதலால் ஆண் **'மகனைக் காந்தன்'** என்றும், பெண்களைக் **'காந்தம்'** என்றுக் கூறுவது பொருத்தமாக உள்ளது என சுப்புரெட்டியார் கூறுகிறார். காதலிக்குக் காதலன் **'காந்தன்'** ஈர்ப்பவன், ஈர்க்கப்படுபவன் என்ற நிலையில் இருப்பான். அதேபோன்று கண்ணன் பாரதியை காந்தம் போன்று இழுப்பது போன்ற உணர்வினைக் கூறியுள்ளார் சுப்புரெட்டியாா.

**பாரதியை சக்தி தாசர் என அழைப்பதன் காரணம்:**

வாரணாசி வாழ்வும், கல்கத்தா வாழ்வும் புதுச்சேரியில் வாழ்ந்தபோது கொண்ட அரவிந்தரின் தொடர்பும் கவிஞரைச் சக்தி வழிபாட்டில் ஈடுபடுத்தியனவாகக் கருதலாம். **'சர்வம் விஷ்ணு மகம் ஜகத்'** என்ற சமய மரபு ஒன்று உண்டு. பாரதியாருக்கும் **'சர்வம் சக்தி மயம் ஜகத்'** என்ற தத்துவம்தான் அவரது மூச்சாக அமைகின்றது. இதுவே பேச்சாகவும் கவிதையில் வழிந்தோடுகின்றது. பாரதியாரைச் **'சக்தி வழிபாட்டாளர் சக்திதாசர்'** என்று சிறப்பித்துக் கூறுகிறார் சுப்புரெட்டியார்.

மூன்று காதல் என்ற பாடலில் மூன்றாவதாக அன்னை பராசக்தியின் மீது இவர் காதல் கொண்டதாகக் கூறுவர். இவள் ஒரு நாள் இரவில் கவிஞரிடம் வருகின்றாள். இவளைக் கண்ட களிப்பில்ஈ

**"அன்னை வடிவமடா! - இவள்**

**ஆதிபராசக்தி தேவியடா! - இவள்**

**இன்னருள் வேண்டுமடா! – பின்னர்**

**யாவும் உலகில் வசப்பட்டுப் போமடா!"13**

என்று எக்களிப்புடன் தம் மகிழ்ச்சிப் பெருக்கை வெளியிடுகின்றார். வாணி, சீதேவி, பார்வதி இடம் மூன்று தேவியரும் ஒன்றாக இலங்குபவளே மாதா பராசக்தி என்புத கவிஞரின் அதிராக் கொள்ளையாகும்.

எல்லாத் தொழில்களும் செயல்களும் சக்தி தேவியின் அருளால்தான் நடைபெறுகின்றன என்று நம்புவர் பாரதியார் என்று சுப்புரெட்டியார் கூறுகிறார்.

**"செய்யும் கவிதை பராசக்தி**

**யாலே செயப்படுங்காண்"14**

என்று தாம் படைக்கும் கவிதைகளும் அன்னை பராசக்தியின் அருளால்தான் வெளிவருகின்றன என்று கூறுவதையும் காணலாம்.

சக்தியைப் பற்றி மேலும் சில செய்திகளை அறிந்து கொண்டால் பாரதியாரின் சக்தி பற்றிய பாடல்களில் மேலும் தெளிவு பெறலாம். இறைவனது மேலான சக்தி (பராசக்தி) உலகத்தை நோக்கும்போது அதன் ஒரு சிறு கூறு உலகத்தைத் தொழிற்பட முற்படும். ஆதனை ஆதிசக்தி என்று வழங்குவர். உலகத்தை இயக்கும் எல்லா சக்திகட்கும் இதுவே முதல் மூலமாக இருப்பதால் இப்பெயரைப் பெறுகின்றது. இச்சக்தி உயிர்கட்கு இறைவனைக் காட்டாமல் உலகத்தையே காட்டி அவற்றைப் பிறப்பு இறப்புச் சுழலில் உழலச் செய்வதால் **"திரோதாயி"** என்றும் வழங்குவது உண்டு. திரோதானம் மறைப்பது திரோதாயி மறைத்தலைச் செய்வது இந்தச் சக்தியையே பாரதியார்,

> **"பரிதி யென்னும் பொருளிடை யேந்தனை**
> **பரவும் வெய்ய கதிரெனக் காய்ந்தனை**
> **கரிய மேகத் திரளெனச் செல்லுவை**
> **காலு மின்னென வந்துயிர் கொல்லுவை**
> **சொரியும் நீரெனப் பல்லுயிர் போற்றுவை**
> **சூழும் வெள்ள மெனவுயிர் மாற்றுவை**
> **விரியும்நீள் கடலென்ன நிறைந்தனை**
> **வெல்க காளிமென தம்மை வெல்கவே"15**

என்ற பாடலை அடுத்துவரும் பாடல்களெல்லாம் இந்தச் சக்தியையே குறித்தனவாகும் என்று கருதலாம்.

**பாரதியார் சமரச நோக்கர்:**

பாரதியார் ஒரு சமரச நோக்கர் என்பதை அவர்தம் பாடல்களால் தெளியலாம். சமயச் சான்றோர்களுள் தாயமான அடிகள், இராமலிங்க அடிகள் இவர்களே சமயங்களுள் ஒரு சமரச நிலையை நிலை நாட்ட முற்பட்டவர்கள் சமயச்சான்றோர் வரிசையில் வைத்து எண்ணப் படாவிட்டாலும் மேற்கூறிய இரு பெரியார்களை அடுத்து, சமயங்களுள் ஒரு சமரச நிலையை ஏற்படுத்த முயன்றவர் பாரதியார் என்று மதிப்பிடுவதில் தவறில்லை. பண்டையோர் வழிபடும் தெய்வங்களான விநாயகர், முருகன், நாமகள், பூமகள், கண்ணன், இராமன், கோவிந்தன், சக்தி என்பவற்றையெல்லாம் வழிபட்டு வந்தனர் என்று பாரதியார் கூறுவதாக சுப்பரெட்டியார் கூறுகிறார். எல்லாக் கடவுள்களும் ஒரே பரம்பொருள் என்ற உணர்ச்சியை அடிநாதமாகக் கொண்டவர் நம் கவிஞர் பெருமான் என்பதற்கு சான்றுகளும் உள்ளதாகவும் சுப்புரெட்டியார் கூறுகிறார்.

**"புதிய ஆத்திசூடி"** என்ற பகுதியின் **'காப்பும்'** பரம்பொருள் வாழ்த்தாக அமைந்துள்ளதையும் கூறுகிறார்.

> **"ஆத்திசூடி, இளம்பிறை யணிந்து**
> **மோனத் திருக்கும் முழுவெண் மேனியான்**
> **கருநிறங் கொண்டு பாற் கடல்மிசைக் கிடப்போன்**
> **முகமது நபிக்கு மறையருள் புரிந்தோன்**
> **ஏசுவின் தந்தை எனப்பல மதத்தினர்**
> **உருவகத் தாலே உணர்ந்துண ராது**
> **பலவகை யாகப் பரவிடும் பரம்பொருள்"16**

இதில் திருமால், சிவன், முகமது நபி, இயேசு இவர்கள் யாவரும் ஒரே பரம்பொருள் என்று குறிப்பிடுவதைக் காணலாம். **‘அறிவே தெய்வம்’ ‘பரமசிவ வணக்கம்’ ‘நான்’** என்ற பாடல்களிலும் பரம்பொருள் ஒன்றே என்ற கருத்தினைக் கண்டு மகிழலாம்.

எல்லாச் சமயங்கள் கூறும் மந்திர மொழிகள் யாவும் ஒரே பொருளினையே குறிக்கும் என்பது பாரதியாரின் தெளிந்த ஞானமாகும். இதனைக் கோவிந்தசாமியின் வாக்காக வெளியிடுகின்றார்.

> **“ஒரு மொழியே பலமொழிக்கும் இடங் கொடுக்கும்**
> **ஒருமொழியே பலமொழிக்கும் ஒழிக்கும் என்ற**
> **ஒருமொழியைத் கருத்தினிலே நிறுத்தும் வண்ணம்**
> **ஒருமொழி ‘ஓம நமச் சிவாய’ என்பர்”17**

இப்படி வற்புறுத்திக் கூறுவதற்காக கோவிந்தசாமியின் கருத்தைக் கூறுவதாக கூறுகிறார் சுப்புரெட்டியார் எல்லா சமயங்களும் கொண்டுள்ள கருத்து ஒன்றேயாகும் என்பதை,

> **“பூமியிலே கண்டம் ஐந்து மதங்கள் கோடி**
> **புத்தமதம் சமணமதம் பார்ஸி மார்க்கம்**
> **சாமியென ஏசுபதம் போற்றும் மார்க்கம்**
> **சனாதனமாம் இந்துமதம், இஸ்லாம் யூதம்”18**

என்று வேற்றுமையில் ஒற்றுமையை உணர்த்துகின்றார்.

உலகிலுள்ள சமயங்கள் போற்றும் உயர்ந்த நூல்களெல்லாம் பொது இயல்பு ஒன்றைப் படைத்திருக்கின்றன. நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ அவையாவும் மகாவாக்கியத்துக்கு விளக்கமாக வந்து அமைந்திருக்கின்றன. மகாவாக்கியம் என்பது பரமான் மாவுக்கும் சீவான்

மாவுக்கும் உள்ள சம்பந்தத்தைச் சொல்வது வேதங்களில் நான்கு மகாவாக்கியங்கள் அமைந்திருக்கின்றன. அவற்றுள் மிகச் சிறப்புடையது தத், துவம், அஸி என்னும் மூன்று சொற்களைக் கொண்டது. துவம்-நீ, தத்-அதுவாக, அஸி-இருக்கிறாய் என்பது பொருள். சீவானமாகிள நீ பரமான்வாகிய அதற்கு அந்நியமானவன் அல்லன் என்பது பொருள். இக்கோட்பாட்டை எல்லாச் சாத்திரங்களும் ஏதேனும் ஒரு விதத்தில் இயம்புகின்றன.

பாரதியார் அனைத்து மதத்தினையும் சமமாக கருதி வந்ததை சுப்புரெட்டியார் நமக்கு ஆராய்ந்துக் கூறியுள்ளார்.

**சான்றென் விளக்கம்**

1. பாரதியார், தோத்திரப் பாடல்கள் பா.எண் -2
2. மேலது,வேதாந்தப் பாடல்கள் பா.எண் -1
3. பகவத் கீதை 10:39
4. நம்மாழ்வார்,திருவாய் மொழி பா.எண் -5( 6:1 )
5. வாலி,பொய்க்கால் குதிரைகள்-பாரதியார் ஒரு பிள்ளையார் சுழி
6. பாரதியார், கண்ணன் பாட்டு பா.எண் -17
7. நம்மாழ்வார், திருவாய்மொழி, பிடித்த பத்து ப.எண்- 9
8. மேலது,பா.எண் - 3 (9:1)
9. மேலது- 3(9:1)
10. மேலது -6(3:8)
11. பாரதியார்,கண்ணன் பாட்டு பா.எண் -17
12. மேலது - 1
13. பாரதியார் ,தோத்திரப் பாடல்-64
14. மேலது,பராசக்தி பா.எண் -26
15. மேலது,மகா சக்தி வாழ்த்து பா.எண் -3
16. மேலது,புதிய ஆத்திச்சூடி -காப்பு
17. மேலது,அறுபத்தாறு -63
18. மேலது- 66

## இயல்-4

# பாரதி வளர்த்த புதுக் கவிதை:

சென்ற நூற்றாண்டு வரையில் தமிழ் இலக்கியம் செய்யுள் வடிவத்தில் தான் இருந்தது வானியல், மருத்துவம், தத்துவம், தருக்கம் போன்ற எந்த நூலாக இருந்தாலும் அவையனைத்தும் செய்யுள் நடையில் அமைந்ததாகக் கூறுகிறார் அச்சுப்பொறி அமைக்கப்பெறாத காலத்தில் ஏடும் எழுத்தாணியும் கொண்டு விரைவில் எழுதி முடிக்கவும், எழுதியவற்றை எளிதில் நினைவில் நிறுத்தவும், அடுத்த தலைமுறையினருக்கு அவற்றை அவற்றைச் செவிவழியாகக் கடத்துவதற்கும் செய்யுளின் ஓசையும் யாப்பு முறையும் உறுதுணை புரிந்தன. இலக்கியமும் **"செவிநுகர் கனி"** யாகத் திகழ்ந்தற்கு இதுவே காரணமாகும் என்று சுப்புரெட்டியார் கூறுகிறார்.

மேனாட்டார் வருகைக்குப் பிறகு உரைநடை இலக்கியங்களில் புதினம், சிறுகதை, கட்டுரை வகைகள் ஆகியவை தோன்றி வளர்ந்து நிலைத்து நின்றுவிட்டன. இந்த நிலையில் கவிதையும் உரைநடையில் ஏன் இயங்கக் கூடாது என்ற வினாவும் எழத் தொடங்கிவிட்டது மேனாட்டு இலக்கியப் புரட்சிகளின் தாக்கமும் ஆங்கிலக் கல்வியின் வாயிலாக நமக்குக் கிடைத்துள்ளது.

**விட்மெனின் கவிதை:**

விட்மெனின் வசன கவிதை முயற்சிகள் எஸ்ராபவுண்டு, டி.எஸ்.எலியட்டு போன்றவர்களால் ஆங்கில மொழியில் கையாளப் பெற்றன. கடந்த அரை நூற்றாண்டு காலத்தில் இத்தாலி ஸ்பானிஷ் செர்மென், இரஷிய மொழிகளின் இலக்கண மரபில் கணிரமான நெகிழ்ச்சியும் மாற்றமும் ஏற்படலாயின நந்தமிழ் மொழியினும் பாரதியாரின் காலம் முதல் புதிய

பாணியல் கவிதைகள் முகிழ்த்தத் தொடங்கின. தொடக்கக் காலத்தில் யாப்பு முறைகட்குக் கட்டுப்படாமல் கவிதை உணர்வுகட்குச் சுதந்திரமான எழுத்துவடிவம் கொடுக்கும் படைப்பு முயற்சி **"வசன கவிதை"** என்றே வழங்கப் பெற்றுள்ளது. மேலை நாடுகளில் நடைபெற்ற கவிதைச் சோதனைகள் பாரதியார் காலம் முதல் தமிழகத்திலும் நடைபெற்றன. வால்விட்மெனின் கவிதைப் பொருளிலும் ஜனநாயக் குரலிலும் கவரப் பெற்றவர் பாரதியார், விட்மெனைப் பற்றி அவர் கூறுவார்.

**"இவருடைய பாட்டில் புதுமை என்னவென்றால் இது வசன நடைபோலத்தான் இருக்கும், எதுகை, மோனை, தளை ஒன்றுமே கிடையாது. எதுகை மோனை இல்லாத கவிதைதான் உலகத்திலே பெரிய பாஷைகளில் பெரும்பகுதியாகும். வால்ட்விட்மென் கவிதையைப் பொருளில் காட்டவேண்டுமேயல்லாது சொல்லடுக்கில் காட்டுவது பிரயோசனமில்லை என்று கருதி ஆழ்ந்த ஓசை மாத்திரம் உடையதாக மற்றப்படி வசனமாகவே எழுதி விட்டார்"1**

பாரதியார் காலம்வரை கவிதை புலவர்களிடமும் பண்டிதர்களிடமும் சிக்கித் தவித்தது. கவிதை செய்யுள் வடிவில்தான் இருக்க வேண்டும் என்ற இலக்கண விதிதான் இதற்கு முதற்காரணமாகும். இதனால் கவிதைப் பண்பு மறைந்து யாப்பே முந்திரிக் கொட்டைபோல் முன்னின்று **'தரிசனம்'** தந்தது. பாரதியார் புலவர்களின் கடுமையான நடையை தேர்வடம் போன்ற விறைப்பானத் தமிழ் நடையை இவ்வாறு கண்டணம் செய்வார்.

**"அருமையான உள்ளக் காட்சிகளை எளிய நடையில் எழுதுவது நல்ல கவிதை. ஆனால், சென்ற சில நூற்றாண்டுகளாக புலவர்களும் சாமியார்களும் சேர்ந்து வெகு சாதாரணமான விஷயங்களை அசாதாரண**

**அலௌகுத அந்தகார நடையில் எழுதுவதுதான் உயர்ந்த கல்வித்திறமை என்று தீர்மானம் செய்து கொண்டார்கள்".2**

பாரதியார் மரபுக் கவிதைகளை எளிமையாக்கின தோடன்றி வசன கவிதைகளையும் எழுதித் தமிழில் புதிய கவிதைச் சோதனைகளை மேற்கொண்டார் செய்யுள் வடிவ உடைப்பை மேற்கொண்டு முட்டையை உடைத்துக் கொண்டு குஞ்சு வெளிவருவதுபோல் வசனகவிதைகளை வெளியிட்டார் பாரதி என்று சுப்புரெட்டியார் கூறுகிறார்.

இதனைத் தெளிவுறுத்தும் போக்கில் பாரதியின் கவிதை ஒன்று,

**"பண்டிதர்கள்**
**கடத்திச் சென்ற**
**பைந்தமிழ்க் குழந்தையைக்**
**கண்டு பிடித்துக்**
**கொண்டு வந்த**
**காவல் நிலையம்"3**

என்று புதுக் கவிஞர் ஒரு கண்டல் செய்கின்றார். இன்னொரு புதுக் கவிஞர் முத்தொள்ளாயிரப் பாணியில்,

**"அன்று மணிக்கதவை**
**தாயர் அடைக்கவும்**
**மகளிர் திறக்கவும்**
**செய்தார் மாறி மாறி**
**என்றும்**
**புலவர் அடைப்ப**
**கவிஞர் திறப்பார்"4**

என்று இந்நிலையைக் காட்டுவர் புலவர் அடைத்த கவிதைத் திருக்கதவைக் கவிஞர் வந்து திறக்கும் புது முயற்சியாகத் தமிழ் வசன கவிதை முயற்சிகள் அமைந்தன என்பது இக்கவிஞர் பெற வைக்கும் குறிப்பாகும்.

**புதுக்கவிதையின் மூலம்:**

ரிஷிமூலம், நதிமூலம் இவற்றைக் காண்பது எளிதல்ல என்று கூறுவதில் உண்மை உண்டு. ஆனால், புதுக்கவிதையின் மூலத்தை ஒருவாறு அறுதியிட்டு விடலாம். கவிஞர் சுப்பிரமணிய பாரதியார் தமது எல்லாக் கவிதைகளும் பண்டிருந்து வரும் கவிதைகளின்றும் சிறிதோ முற்றிலுமோ மாறுபட்ட படைப்புகளாக அமைந்த காரணத்தால் அவற்றை புதுக்கவிதை நவகவிதை என்றே குறிப்பிடுகின்றார்.

> **"சுவை புதிது, பொருள் புதிது, வளம் புதிது**
> **சொற் புதிது சோதி மிக்க**
> **நவ கவிதை"5**

என்று அவர் தமது கவிதைகளைப் பற்றிப் பேசுவதைக் காணலாம். "எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்துக்கொள்ளக்கூடிய சந்தம், பொது ஜனங்கள் விரும்பும் மெட்டு இவற்றினையுடைய காவியமொன்று தற்காலத்தில் செய்து தருவோன் நமது தாய்மொழிக்குப் புதிய உயிர் தருவோனாகின்றான். ஓரிரண்டு வருஷத்து நூற்பழக்கமுள்ள தமிழ் மக்கள் எல்லோர்க்கும் நன்கு பொருள் விளங்கும்படி எழுதுவதுடன், காவியத்துக்குள்ள நயங்கள் குறைவுப்படாமலும் நடத்துதல் வேண்டும்" என்று பாஞ்சாலி சபதத்திற்கு எழுதியுள்ள முகவுரைப் பகுதியாலும் அவருக்குப் புதுக்கவிதையில் இருந்த பேரவா புலனாகும். இத்தகையோர் அவாவைக் கொண்ட கவிஞரே **'புதுக்கவிதை'யைத்** தோற்றுவித்த தந்தையுமாகின்றார். முன்னோடியாகவும் திகழ்கின்றார் பாரதியார் என்று சுப்புரெட்டியார் கூறுகிறார்.

தமது கவிதையுணர்வையும் அகத்தெழுச்சிகளையும் கனவுகள், கற்பனைகள், முற்போக்கு எண்ணங்கள், சமுதாயப் பார்வைகள், நாட்டு நிலைகள் ஆகிய அனைத்தையும் மரபு நிலை கெடாத, எளிய, இனிய புதிய புதிய யாப்புகளில், சந்த நயங்கட்கு உட்படும் பல்வேறு புதிய வடிவங்களில் வெளிப்படுத்திய கவிஞர் பெருமான் இலக்கண விதிகட்குக் கட்டுப்படாத வடிவத்திலும் கவிதைகளே **"வசன கவிதைகள்"** ஆகும். இத்தொகுப்பிலுள்ள கவிதைகள் வசனத்தை மீறியவை யாயினும் கவிதையின் முழுத்தன்மையை எய்தாத ஒரு முயற்சியாகவேப் படைத்துள்ளார் என்று கருதலாம் எனச் சுப்புரெட்டியார் கூறுகிறார். இதிலுள்ள முதல் கவிதை,

> **"இவ்வுலகம் இனியது; இதிலுள்ள வான் இனிமையுடைத்து;**
> **காற்றும் இனிது. தீ இனிது, நீர் இனிது, நிலம் இனிது".**
> **"ஞாயிறு நன்று; திங்களும் நன்று; வானத்துச் சுடர் களெல்லாம்**
> **மிக இனியன, மழை இனிது, மின்னல் இனிது, இடி இனிது".6**

என்று தொடங்குகிறது. இது வசனமா? கவிதையா? என்பதையும் ஆராய்வதற்கு முன்பு ரசிகமணி டி.கே.சியின் கவிதை பற்றிய கருத்தினைக் காண்போம் என சுப்பரெட்டியார் ஆராயும் விதமானது.

**"கவிதை என்றால் இன்னதென்று சொல்வதற்கு இலக்கணம கிடையாது. உலகத்தில் எங்கும் கிடையாது. யாப்பில்ல இந்த விஷயத்தை எந்த உதவியும் புரியவில்லை. வெண்பா இது, விருத்தம் இது என்று ஏதோ சொல்லலாம். ஆனால் கவிதை இன்னதென்று சொல்லவே முடியாது. ஒரு பாஷையோடும் அதிலுள்ள சிறந்த கவிதைகளோடும் உண்மையான ஆர்வத்தோடு படா பத்தையெல்லாம் தூரத்தே விட்டுவிட்டு நெடுநாள் பழகி வருமோமானால் அது தெரிய வரலாம்". 7**

இதிலிருந்து யாப்பமைதி வேறு, கவிதையின் வடிவ அமைதி வேறு என்பதை டி.கே.சி அவர்களின் கருத்து தெளிவுறுத்துகின்றது. எனவேதான் வசன கவிதையைப் படைப்போர் இலக்கணம் வேறு, கவிதை வேறு என்பதை உணர்ந்து யாப்பைப் புறக்கணித்துள்ளனர் என்று சுப்புரெட்டியார் ஆராய்ந்துள்ளார்.

கவிதைக்கும் வசனத்திற்கும் சொற்கள் பொது என்பது உண்மை. ஆயினும், கவிதையின் சுருதி வேறு வசனத்தின் சுருதி வேறு **'தீ இனிது'** என்பதில் **'சுடும்'** என்ற சொல் ஊற்றுணர்வைத் தெரிவிக்கின்றது. **'தீ சுடும்'** என்ற தொடர் அறிவோடு பேசுகின்றது. எனவே, முன்னது வசனம், பின்னது கவிதை என்று கூறுகின்றார். ஒரு சொற்றொடர் வெறும் செய்தியை மட்டும் கூறாமல் உவமையைப் போல் உணர்விட பேசுமானால் கவிதை பிறந்துவிடுகின்றது. தீ இல்லை என்றால் ஏது? உலகு என்பது நிலைபெற முடியுமா? அதனால்தான் **'தீ இனிது'** என்பதை உணர்ச்சி ஒப்புக் கொள்ளுகின்றது என்று சுப்புரெட்டியார் கூறுகிறார்.

**"செந்தமிழ் நாடெனும் போதினிலே - இன்பத்**
**தேன்வந்து பாயுது காதினிலே"8**

என்று பாரதி பாடுகிறார். நாம் அனைவரும் இயற்கையாகவே சுவையை நாவின் மூலம் மட்டுமே உணர்கிறோம். காதின் மூலம் இந்தச் சுவையை உணரலாம் என்பது இயற்கைக்கு முரண்பட்டது ஆகும். ஆனால், நாக்கின தொழிலைக் காதின் மேலேற்றிக் கூறும் திடுக்கிடும் அனுபவம் நுண்ணுணர்வின் பாற்பட்டது. பொறிகளுக்குள்ள வேறுபாடு உடலியலைப் பற்றிய வரையில் உண்மையாகும். உளவியல் அல்லது மனநிலையைப் பற்றிய வரையில் வேறுபாடு காண இயலாது. இரண்டின் விளைவும் ஒன்று தான் என்ற நுண்ணுணர்வைக் காணும் பொழுது தான் வசன கவிதை பிறக்கின்றது.

கவிதை அடிப்படையாகக் கொண்ட எதுமை மோனைகட்கு இப்பொழுது இன்றியமையாமை இல்லாமல் போய்விடுகின்றது என்பது உண்மை கசப்பான உண்மையும் கூட என்று சுப்புரெட்டியார் ஆராய்ந்துக் கூறுகிறார். மேற்காட்டிய இரண்டு இடங்களிலும் பொறிகள் தங்கள் தொழில்களைப் பரிவர்த்தனைச் செய்துக் கொள்ள இயலும் என்ற கவிதை உண்மை தட்டுப் படுகின்றது. இந்த இடங்களில் பொறிகளின் நேரிடையான அநுபவத்தால் இயற்கையான நுண்ணுணர்வு செயற்படுவதைக் கண்டு வியப்படைகின்றோம். இக்கவிதையை மேலோட்டமாகப் படிக்கும்போது ‘வசனம்’ போல் நடக்கின்றது சற்றுச் சிந்தித்துப் படிக்கும்போது **‘கவிதை’**யாகி விடுகின்றது. சிறகுடன் பறப்பது போன்ற உணர்ச்சி மேலிடுகின்றது. இதனால்தான் இது **‘வசன கவிதை’** என்ற திருநாமமும் பெற்றது போலும்! என்று சுப்புரெட்டியார் ஆராய்ந்துள்ளார்.

இதனை மேலும் தெளிவுறுத்தும் வகையில்,

> **“தெளிவுறவே அறிந்திடுதல் தெளிவுதர**
> **மொழிந்திடுதல் சிந்திப் பார்க்கே**
> **களிவளர உள்ளத்தில் ஆனந்தக்**
> **கனவுபல காட்டல் கண்ணீர்த்**
> **துளிவர உள்ளுருக்குதல்”9**

என்ற கவிஞனின் குறிக்கோளையும் நிலைபெறச் செய்து விடுகின்றது. கவிதையைப் படிப்போரிடமும் மந்திர ஆற்றல் போன்ற ஒருவித ஆற்றலால் இந்த உணர்வுகளை எழுப்பி விடுகின்றது.

மேற்கூறியவற்றை அறிந்த பிறகும் வசனமும் கவிதையும் ஒன்றாகுமா என்ற வினா நம்மிடையே எழத்தான் செய்கின்றது என்று சுப்புரெட்டியார் கூறுகிறார். இதற்கு ஓர் அமைதி கூற வேண்டியது இன்றியமைமயாதது ஆகின்றது என்றும் கூறுகின்றார். உண்மையில் கவிதையும் வசனமும்

ஒன்றாகாது. கவிதையானது வசனம் ஆகாது என்பது மட்டும் உறுதி என்று கூறுகிறார். வசனம், செய்யுள் ஆகிய இரண்டிற்கும் அப்பாற்பட்டது கவிதை, வசனம் அல்லது உரைநடை, செய்யுள் ஆகியவை கவிதை இயங்கும் தளங்களாகும். இவை இரண்டும் கவிதையின் புறவடிவங்களாகும். பாரதி கையாளும் இருவிதச் சாதனங்களாகும். இந்த இரண்டு சாதனங்களில் மட்டும் கவிதையைக் காண இயலாது என்றும் இவற்றை பாரதி கையாளும் முறையில்தான் கவிதை தென்படும் என்றும் கூறுகிறார் சுப்புரெட்டியார்.

செய்யுள் உரைநடை என்ற இரண்டிலும் கவிதை தென்படும் என்பது உண்மையையாயினும், கவிதையின் கருப்பொருளுக்கிணங்க தான் மேற்கொள்ள வேண்டும் என்று கவிஞன் பாரதிக் கூறுகிறார். இன்றையக் காலக்கட்டத்தில் புதுக்கவிஞர்களில் சிலர் செய்யுள் வடிவத்திலும், சிலர் செய்யுள் உரைநடை ஆகிய இரண்டிலும், சிலர் வசனத்தில் மட்டிலும் தம் கவிதைகளை அமைக்கின்றனர். ஆனால், புதுக்கவிஞர்கள் அனைவருமே கவிதை வசனத்தில் இயங்கும் என்பதையும் ஒருமுகமாக ஒப்புக் கொள்ளு கின்றனர். இதன் மூலம் நாம் அறிந்துக்கொள்வது என்னவென்றால் இன்றைய கவிஞர்கள் யாப்புணர்வு இல்லாமல் தம் கவிதைகளைப் படைத்து அருளுகின்றனர்.

தாம் மேற்கொள்ளும் சாதனம் செய்யுளா வசனமா என்று அலட்டிக் கொள்வதில்லை. இவை இரண்டுமே கவிதையின் உண்மையான வடிவம் ஆகும்.

**“புராணத்தில் வரும் மன்மதனை ஓவியத்தில் எழுதிக் காட்டுவதற்கு ஒப்பாகும். சிவனது நெற்றிக் கண்ணால் எரிக்கப்பட்ட மன்மதன் ரதிதேவியின் கண்களுக்கு மட்டிலுமே தென்படுவானாம். அதுபோல இலக்கண**

**தெய்வத்தின் நெற்றிக்கண் நெருப்புக்கு இரையான புதுக்கவிதையின் உருவமும் உண்மையான இலக்கிய ரதிகளுக்கு தென்படக் கூடும்''.10**

கவிதையின் கருத்தானது **''வெளிப்படும் அழகே கவிதையின் வடிவம்''** என்று சுப்புரெட்டியார் கூறுகிறார். ஒரே பாவினத்தில் எழுதப் பெறும் இரண்டு கவிதைகள் வடிவத்தில் ஒன்று போலக் காணப்பட்டாலும் அவை வெவ்வேறு வெளியீட்டுத் தன்மையைக் கொண்டிருக்க முடியும் என்றும் எடுத்துக்காட்டாக இரண்டு சான்றுகளைக் காட்டுகிறார் சுப்புரெட்டியார்.

அதில் ஒன்று,

"பாரதிதாசனும் சுரதாவும் எண்சீர் விருத்தத்தில் கவிதைகள் படைத்தாலும் அவற்றின் வெளியீட்டுத் தன்மை வேறுபட்டிருப்பதைக் காணலாம்".

மற்றொன்று,

"திருமங்கையாழ்வாரின் திருத்தாண்டகப் பாசுரங்களும் அப்பர் பெருமானின் திருத்தாண்டகப் பாடல்களும் பாணியல் ஒன்று போலத் தோன்றினாலும் அவற்றின் வெளியீட்டுத் தன்மை வேறுபட்டிருப்பது புலனாகும்".

இவ்வாறு உணாத்தும் முறை பாரதியின் மனதிற்கும் புலப்படும் தன்மை கொண்டது போலும் அதனால் தான் புதுக்கவிதையின் உருவம் திருமலை நாயக்கர் மகால் தூணைப்போலத் தூலமாகத் தெரிவதில்லை என்று எழுதினார் மீரா என்பதை சுப்புரெட்டியார் ஆராய்ந்துக் கூறியுள்ளார்.

**பாரதியின் வசன கவிதை:**

பாரதியின் வசன கவிதைகள் யோக நிலையில் கண்ட பேரின்பம் கனவுகள் இப்பகுதியிலுள்ள ஒவ்வொரு கவிதையும் இவ்வுண்மையைப் பறை

சாற்றுகின்றது. வேதகாலத்து ரிஷிகளைப் போலவே அழகு பொருந்திய அருட் சொற்களில் **"காட்சிகள்"** என்ற பகுதி வருணிக்கப்படுகின்றது.

**"பாட்டினிலே சொல்லுவதும்**
**அவள் சொல் லாகும்?**
**பயனின்றி உரைப்பாளே?**
**பாராய் நெஞ்சே!"11**

என்று கூறியவரல்லவா? பாடல்கள் வசனத்திலிருந்தாலும் திருமூலர் சொற்களின் வேகத்தைப் பெற்றும், பொருள் கனத்தையும் தாங்கிச் செல்லுகின்றன. இதன் காரணமாக சுப்புரெட்டியார் பாரதியை சித்தர்கள் நிலைக்கு உயர்த்திக் கூறுகின்றார். **"யானும் வந்தேன் ஒரு சித்தன் இந்த நாட்டில்"12** தன்னம்பிக்கையுடன் சொல்லிக் கொள்ளுகின்றார். பாரதியார் முதன் முதலில் வசன கவிதைகளை எழுதியவர் ஆனதால் வசன கவிதையின் தந்தையாகின்றார். வசன கவிதை, புதுக் கவிதை பிறக்கக் காரணமாக இருந்ததால் **'வசன கவிதை'** என்ற பாரதியின் மகள்(சேய்) புதுக்கவிதையின் தாயாகின்றான். ஆகவே பாரதியார் புதுக்கவிதையின் பிதாமகன்(பாட்டன்) ஆகின்றார் என்று பாரதியைப் போற்றி கூறியுள்ளார் சுப்புரெட்டியார்.

**சான்றென் விளக்கம்**

1. பாலா ,புதுக்கவிதை ஒரு புதுப் பார்வை ப.எண் -41
2. மேலது -42
3. வாலி ,பொய்க்கால் குதிரைகள் -பாரதி ஒரு பிள்ளையார் சுழி
4. சி.மணி - வரும் போகும்
5. பாரதியார் ,வேங்கடேச பூபதி பா.எண் - ,3
6. மேலது,வசன கவிதை -1
7. டி.கே.சி. மொழிகள் -தீபம்
8. பாரதியார், செந்தமிழ் நாடு பா.எண் -1
9. மேலது,பாஞ்சாலி சபதம் பா.எண் -154
10. மீரா ,புதுக்கவிதையின் உருவம் ,அன்னம் மலர் -1976
11. பாரதியார், தோத்திரப் பாடல் பேதை நெஞ்சே பா.எண் -52
12. பாரதியார் , பாரதி அறுபத்தாறு பா.எண் -1

# முடிவுரை

பாரதியின் தேசப்பற்றுகளையும் , பாரதி தம்முடைய தாய்மொழியின் மீது அளவற்ற பற்று கொண்டுள்ளதையும் ,தமது தாய்மொழி உயர பல்வேறு புரட்சிகளையும் செய்து வந்துள்ளார் என்பதையும் ஆராய்ந்து நோக்கும்போது அவர் நாட்டின் மீதும் தமிழ் மொழியின் மீதும் கொண்டுள்ள பற்றானது சிறப்பாக விளங்குவதை சுப்புரெட்டியார் எடுத்துக் கூறியுள்ளார்.

கல்வியின் அவசியத்தையும், கல்வியால் வாழ்வு உயரும் என்பதையும் , பெண்களுக்கு கல்வி அவசியம் என்பதனையும், தொழிற் கல்வியின் மூலம் கல்வியின் மேம்பாட்டையும் பாரதி கூறியுள்ளதை சுப்புரெட்டியார் நமக்கு அழகாக எடுத்துக் கூறியுள்ளார். பாரதியின் பக்தி பார்வையானது அனைவரும் சமம் என்பதை நோக்குகிறது. பாரதியார் கண்ணன் மீது அளவற்ற பற்று கொண்டுள்ளதையும் காணமுடிகிறது. பாரதி சக்தியின் மீது அளவற்ற பக்தி கொண்டவர் என்பதை அவருடைய கவிதை வரிகளும் அவர் இயற்றிய பாடல்களும் சிறப்பாக எடுத்துக் கூறுகின்றன. பாரதி அனைவரையும் அனைவரும் ஒன்றுதான் என்பதை தமது பாடல்கள் வழி விளக்குகிறார் என்று சுப்புரெட்டியார் ஆராய்ந்துள்ளார்.

பாரதியின் கவித்திறமையானது இன்றைய நடைமுறையில் இருக்கும் புது கவிஞர்களுக்கு ஒரு வழித்துணையாக கவிதை எழுத அமைந்துள்ளது என ஆராய்ந்து நமக்கு கூறியுள்ளார். பாரதியின் சிறப்புகளை சுப்புரெட்டியார் வாயிலாக விளக்கமாக அறியப்பட்டுள்ளது.

## துணைநூற் பட்டியல்


**முதன்மைஆதாரம்:**

ந.சுப்புரெட்டியார் - புதுவை(மை)க் கவிஞர்
சுப்பிரமணிய பாரதியார்
ஒரு கண்ணோட்டம்
முதல் பதிப்பு - 1990
இரண்டாம் பதிப்பு - 2018
நூற்றாண்டு விழாகுழு வெளியீடு
வேங்கடம்“
AD-13, (plot -3354)
அண்ணா நகர்,
சென்னை-600 040.

**துணைமை ஆதாரங்கள்:**

1. கமலா முருகன் .இரா. - சுப்பிரமணிய பாரதியாரின் பாஞ்சாலி சபதம்
மூலமும் உரையும்
கௌரா புத்தக மையம்
9,செயிண்ட் ஜான் சர்ச்
வணிக வளாகம்,
ராக்கின்ஸ் சாலை,
திருச்சி - 0.1

2. முனைவர்.கமலா முருகன் - கண்ணன் பாட்டு (மூலமும் உரையும்)

3. சம்பந்த முதலியார்.தி - தாயுமானவர் பாடல்கள் (மூலமும் உரையும்) முதல் பதிப்பு-2015 உமா பதிப்பகம் சென்னை -600 085.

4. முனைவர்.சிவஞானம். பொ.ம. - பாரதியார் பற்றி மா.பொ.சி. பேருரை பெருமாய் புத்தகாலயம் டீ-5,ஸ்ரீ பாலகணேஷ்அப்பார்ட் மெண்ட்,புதிய எண்1,பழைய எண்2,ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை -600 033.

5. மாணிக்கம்.அ - திருமூலரின் திருமந்திரம் (மூலமும் தெளிவுரையும்) முதல் பதிப்பு -டிசம்பர்2001 ஏழாம் பதிப்பு-செப்டம்பர்2004 வர்த்தமானன் பதிப்பகம் 40, சரோஜினி தெரு, தி.நகர்,சென்னை-17.

6. வில்வபதி.கோ - நன்னூல்(மூலமும் உரையும்) பழனியப்பா பிரதர்ஸ், கோனார் மாளிகை 25,பீட்டர்ஸ் சாலை, சென்னை -600 014.

7. முனைவர் இராகவதாஸன்.வி.

எஸ்.வி - நாலாயிர திவ்ய பிரபந்தம்
உரையுடன்
முல்லை நிலையம்,
9,பாரதி நகர்,முதல் தெரு,
தி.நகர்,சென்னை-600 017.

8. ராஜசேகரன் - பாரதியார் கட்டுரைகள்
சாரதா பதிப்பகம்
ஜி-4,சாந்தி அடுக்ககம்-3
ஸ்ரீ கிருஷ்ணபுரம் தெரு
ராயப்பேட்டை
சென்னை -14
முதல் பதிப்பு -2011.

# NSR100
# KAMATCHI AMMAL FELLOWSHIP

## MA STUDENTS IN TAMIL



AWARDED TO :

**ச கனிமொழி**

(பதிவு எண்: 20201003)

காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
திருச்சிராப்பள்ளி ~ 620 018

உதவித்தொகையும், நூலைத் தேர்ந்தெடுக்க ஆலோசனையும், தேர்ந்தெடுக்கப்பெற்ற நூலும் வழங்கப்பெற்றன.

ஆய்வேட்டின் தலைப்பு: ந சுப்புரெட்டியார் போற்றும் கண்ணன்
பேராசிரியரின் நூல்: *கண்ணன் பாட்டுத்திறன்*
பல்கலைக்கழகம்: பாரதிதாசன்
நெறியாளர்: முனைவர் ந சுபா
பட்டம்: முதுகலை (தமிழ்)
வருடம்: 2020—2022



www.nasubbureddiar100.in

# ந. சுப்புரெட்டியார் போற்றும் கண்ணன்

திருச்சிராப்பள்ளி காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)

முதுகலைத் தமிழ் இலக்கியப் பட்டத்திற்காக அளிக்கப்பெறும் திட்டக்கட்டுரை


**ஆய்வாளர்**

ச. கனிமொழி

பதிவு எண்: **20201003**

**நெறியாளர்**

முனைவர் ந.சுபா, எம்.ஏ, எம்.ஃ.பில், பி.எச்.டி, ஸ்லெட்.,

இணைப்பேராசிரியர்

தமிழாய்வுத்துறை

காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)






காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)

(தேசியத் தர நிர்ணயக் குழு மதிப்பீட்டில் மூன்றாம் சுற்று **"A"** தகுதி பெற்றது)

**ISO 9001: 2015** தரச்சான்றிதழ் பெற்றது

திருச்சிராப்பள்ளி **- 620018**

மார்ச் **- 2022**

## நன்றியுரை

**“ந. சுப்புரெட்டியார் போற்றும் கண்ணன்”** என்ற தலைப்பில் இத்திட்டக் கட்டுரை எழுத வாய்ப்பளித்த காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)க்கு முதற்கண் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். நான் முதுகலைத் தமிழிலக்கியம் பயில எனக்கு வாய்ப்பளித்த ரெட்டி கல்வி அறக்கட்டளையின் நிர்வாக அறங்காவலர்களுக்கும் எங்களை வழி நடத்திச் செல்லும் எம் கல்லூரி முதல்வர் முனைவர் வெ.சுஜாதா அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் எம் தமிழாய்வுத்துறைத் தலைவரும் துணை முதல்வருமான முனைவர் ச.இராமலட்சுமி அவர்களுக்கும் இவ்ஆய்வுக் கட்டுரை சிறப்பாக அமைய வேண்டும் என்ற நோக்கத்தோடு ஆய்வு தொடர்பான அறிவுரைகளை வழங்கி என்னை வழி நடத்திச் சென்று கட்டுரையைச் செம்மைப்படுத்திய, எம் நெறியாளர், முனைவர்.ந.சுபா அவர்களுக்கும் எனது நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

காமாட்சி அம்மாள் உதவித்தொகை நல்கிய ந.சுப்புரெட்டியார் நூற்றாண்டு நினைவு அறக்கட்டளையினருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியினை சமர்பிக்கின்றேன்.

ஆய்வு தொடர்பாக பல உதவிகளைச் செய்து, எனக்கு ஊக்கமளித்த எம்துறைப் பேராசியர்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்கு உதவிய எனது தகப்பனார் சண்முகம், தாய்மார்கள் சுமதி, சீதாலெட்சுமி, சகோதரன் நவீன் ஆகியோருக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான பல நூல்களை வழங்கி உதவிய எம் கல்லூரி நூலகத்திற்கும் எம் துறை நூலகத்திற்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனக்குத் துணை நின்று பல உதவிகளைச் செய்த என் தோழிகளுக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**ஆய்வாளர் கையொப்பம்**
**ச. கனிமொழி**

## பொருளடக்கம்

## சுருக்க குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| நூ.எண் | - | நூற்பா எண் |
| நூற் | - | நூற்றாண்டு |
| பா.அ | - | பாடல் அடி |
| ப.எ | - | பக்க எண் |
| பா.எண் | - | பாடல் எண் |
| மேலது | - | மேலே கூறப்பட்டுள்ள நூல் |

# முன்னுரை

ந.சுப்புரெட்டியர் தமிழ்நாடு, திருச்சி மாவட்டம், பெரகம்பி என்ற ஊரில் எளிய வேளாண்மைக் குடும்பத்தில் பிறந்தார். சுப்புரெட்டியார் திருச்சி சூசையப்பர் கல்லூரியில் வேதியியலில் இளங்கலைப் பட்டமும், சென்னைப் பல்கலைக்கழகத்தில் முதுகலைப்பட்டமும், திருப்பதிதிருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டமும் பெற்றார்.

ந.சுப்புரெட்டியார் தமிழறிஞரும், எழுத்தாளரும், பேராசியரும் ஆவார். இவர் எழுதியுள்ள 135 நூல்களையும் தமிழக அரசு நாட்டுடைமையாக்கியுள்ளது. திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் 1960-ல் தமிழ்த்துறையை நிறுவி 17 ஆண்டுகள் பணியாற்றினார்.

முனைவர் சுப்புரெட்டியார் திரு.வி.க. விருது, கலைமாமணி விருது போன்ற பல விருதுகளைப் பெற்றுள்ளார். சுப்புரெட்டியார் அவர்கள் எழுதியுள்ள நூல்களுள் பன்னிரெண்டு நூல்கள் வைணவ சமயத் தத்துவங்களைப் பற்றியவை ஆகும். மேலும் இவரது கவிப்புலமையையும், ஆய்வுத் திறனையும், வைணவத் திருத்தொண்டினையும் பாராட்டும் விதமாக மார்ச் 1987 ஆம் ஆண்டு 62-வது ஸ்ரீ வைணவ மாநாட்டில் இவருக்கு “ஸ்ரீ சடகோபன் பொன்னடி” என்னும் விருது வழங்கப்பட்டது.

இவர் இயற்றிய நூல்களுள் ஒன்றுதான் “கண்ணன் பாட்டுத்திறன்”. இதில் கண்ணனைப் பற்றியும், அவனது பன்முகம் பற்றியும் மக்களுக்கு விளக்க வேண்டும் என்ற எண்ணத்தில் இந்நூல் எழுதப்பட்டு இருந்தது.

இந்த எண்ணத்தினாலே கண்ணன் பாட்டு திறன் என்ற தலைப்பில் கண்ணன் செயல்கள் அனைத்தையும் விளக்கும் பாங்கில் இந்நூலினை

படைத்தருளினார். இந்நூலில் அமைந்துள்ள நயங்களைக் காண்பதே இவ்வாய்வு.

**ஆய்வுத்தலைப்பு:**

“ந.சுப்புரெட்டியார் போற்றும் கண்ணன்” என்பதே இவ்ஆய்வேட்டின் தலைப்பாக அமைகின்றது.

**ஆய்வு நோக்கம்:**

கண்ணன் பாட்டுத்திறன் வாயிலாகக் கண்ணன் வாழ்க்கை, பன்முகங்கள், சுப்புரெட்டியார் கண்ணன் மீது கொண்ட ஈடுபாடு இவற்றை ஆராய்வதே இந்த ஆய்வேட்டின் நோக்கமாகும்.

**ஆய்வுக் கருதுகோள்:**

ஆழ்வார்களும், ஆயர்மக்களும் கண்ணன் மீது கொண்ட அன்பை சுப்புரெட்டியார் எளிமையாக விரித்துரைத்துள்ளார்.

**ஆய்வு எல்லை:**

சுப்புரெட்டியார் எழுதியுள்ள பல நூல்களுள் கண்ணன் பாட்டுத்திறன் என்னும் நூலில் உள்ள கருதுக்களே இவ்ஆய்வேட்டின் எல்லையாக அமைகிறது.

**ஆய்வுமுறை:**

கண்ணன் பாட்டுத்திறன் காணப்படும் செய்திகளைப் பகுப்பாய்வு செய்து காணும் பகுப்பாய்வு முறையும் அதனை விளக்கிக் காட்டப்பெறும் விளக்கமுறை ஆய்வும் ஈண்டு பயன்படுத்தப்படுகிறது.

**ஆய்வேட்டின் அமைப்பு:**

இந்த ஆய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயலாகப் பகுக்கப்பட்டுள்ளது.

அவை

இயல் 1: கண்ணனுடன் உறவு

இயல் 2: கண்ணனின் பன்முகம்

இயல் 3: தனிப்பாடல்களில் கண்ணன்

இயல் 4: படிமங்கள்

**இயல் ஒன்று:**

திருமாலின் சிறப்புகள், ஆயர்பாடி மக்கள் கண்ணன் மீது கொண்ட அன்பு போன்றவற்றை சுப்புரெட்டியார் எடுத்துரைத்துரைத்துள்ள பாங்கு இவ்வியலில் ஆராயப்படுகிறது.

**இயல் இரண்டு:**

கண்ணன் பிறப்பு, கண்ணனின் பன்முகங்கள், கண்ணனின் செயல்கள் ஆகியவற்றை சுப்புரெட்டியார் விரித்துரைக்கும் முறை இவ்வியலில் ஆராயப்படுகிறது.

**இயல் மூன்று:**

தனிப்பாடல்களில் கண்ணன், பற்றிய இசைப்பாடல்வடிவம், ஆழ்வார்கள் கூறும் கருத்துகள் போன்றவற்றை சுப்புரெட்டியார் ஆய்வு செய்த திறம் பற்றி இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

**இயல் நான்கு:**

பாட்டில் அமைந்துள்ள படிமங்கள் உருக்காட்சிகள், கவிதை அனுபவம் போன்றவற்றை சுப்புரெட்டியார் விரித்துரைக்கும் பாங்கு இவ்வியலில் கூறப்படுகிறது.

**முதன்மை ஆதாரம்:**

இவ்வாய்விற்குக் கண்ணன் பாட்டுத்திறன் முதன்மை ஆதாரமாக அமைகிறது.

**துணைமை ஆதாரம்:**

பாரதியாரின் கண்ணன் பாட்டும் பிற நூல்களும் துணைமை ஆதாரமாக பயன்படுத்தப்பட்டுள்ளது.

**முடிவுரை:**

ஆய்வேட்டின் இறுதியில் முக்கியமான முடிவுகள் முடிவுரை என்ற தலைப்பின் கீழ் தரப்பெற்றுள்ளது. ஆய்வுக்குத் துணை நின்ற நூல்கள் துணை நூற்பட்டியலாகத் தொகுத்து ஆய்வேட்டின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது.

# இயல் - 1

## கண்ணனுடன் உறவு

பாரதியார் படைத்த கண்ணன் பாட்டு 23 இசைப்பாடல்களைக் கொண்ட ஓர் இலக்கியம் ஆகும். இசையோடு இயைந்த பாடல்கள் என்பதனை உணர்த்தும் பொருட்டாகப் ‘‘பாட்டு’’ என்று அவர் பெயர் வைத்திருக்க வேண்டும்.

மகாகவி இசையில் நல்ல ஞானம் உடையவர். அதனால் தான் ஒவ்வொரு பாடலுக்கும் ராகத்தின் பெயரையும் தாளத்தின் பயரையும் குறித்து வைத்துள்ளார்.

‘‘கண்ணன் என்னும் தூய தமிழ்ப் பெயர் பாரதியாரைப் பெரிதும் கவர்ந்திருக்கிறது. இவை தெய்வ பக்திப் - பாடல்களாக மட்டுமல்லாமல் தேச பக்திப் பாடல்களாகவும் உள்ளது.

கண்ணன் பிறருடன் கொண்ட உறவு நிலைகளைப் பற்றி இதில் கூறப்பட்டுள்ளது.

**திருமாலின் சிறப்புகள்:-**

தமிழ் மக்களின்பண்டைய சமயங்களுள் ஒன்று திருமாலைப் பரம் பொருளாகக் கொண்டு வழிபட்டுவந்த முறை ஆகும். தமிழகத்தில், வைணவ சமயம் தோன்றி நிலைபெற்றது என்பதற்கு தொல்காப்பியம் போன்ற தமிழ் முன்னூல்களே எடுத்துக்காட்டாக அமைந்துள்ளன. ஆதிதமிழர்கள் நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம். நெய்தல் என்று நான்காகப் பகுத்து அந்நிலங்களுக்கு தெய்வங்களையும் வகுத்துள்ளனர். காடுசார்ந்த முல்லை நிலத்தையும் அதன் தெய்வமாகிய திருமாலையும் முதற்கண் வைத்து

சிறப்பித்துள்ளனர் என்பதை **மாயோன் மேய காடுறை உலகம்** என்ற தொல்காப்பிய நூற்பாவால் அறிந்து கொள்ள முடிகிறது.

இதனால் 'நானிலம் என்ற பெயர் நிலப்பகுதி பெறுவதற்கு முன்பாகவே திருமாலுக்கு உரிமையும் தலைமையும் தமிழகத்தில் ஊன்றிவிட்டன என்பது தெளிவாகிறது.

**"அங்கண் முல்லையின் தெய்வமென்று**

**அருந்தமிழ் உரைக்கும் செங்கணமால்" (1)**

என்று திருமாலை சேக்கிழார் பெருமாள் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

முல்லை நில மக்களை ஆயர், ஆய்ச்சியர் என்று பண்டைய தமிழ்மக்கள் வழங்கிவந்தனர். திருமாலை இலக்கியம் **'தென்னவன் தொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய நல்லினத்தவர்"** என்று கூறுவது சிறப்புடையது முல்லை நில மக்கள் யது குலத்தில் தோன்றித்தம் குலத்தில் வளர்ந்த கண்ணனைத்தம் குல தெய்வமாகக் கொண்டுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

மாயோன் என்பது முல்லை நில தெய்வமான திருமாலின் அவதாரமான கண்ணன என்று கூறப்படுகிறது. மாயோன் என்பதற்கும் கண்ணன் என்பதறற்கும் **கருநிறமுடையோன்** என்ற பொருளும் உண்டு.

**ஆயர்மக்கள் கண்ணனிடம் கொண்ட உறவு:-**

தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரே கண்ணணை தெய்வமாகக் கொண்டு அவனது குழந்தைச் செயலை பிள்ளைப் பிராயத்தில் ஆற்றிய அருஞ்செயல்களில் தமிழ் மக்கள் ஈடுபாடு கொண்டிருந்தனர் என்பதற்குத் தொல்காப்பியத்தில் எடுத்துக்காட்டுகள் உள்ளன.

**“காமப் பகுதி கடவுளும் வரையார்**

**ஏனோர் மருங்கினும் என்மனார் புலவர்**

**குழவி மருங்கினும் கிழவ தாகும்” (2)**

என்ற தொல்காப்பிய நூற்பா வாயிலாக பெண் மக்கள் ஆண் மக்களிடமும், கடவுளிடத்தும் கொண்டுள்ள உறவினை தொல்காப்பியர் கூறியுள்ளார்.

இது தெய்வக் குழந்தையாகிய கண்ணனின் மேல் ஆயமகளிர் கொண்ட காதல் வெள்ளத்தைப் பற்றிக் கூறியதாகவே கூறப்பட்டுள்ளன. சிலப்பதிகாரம், ஆழ்வார்கள் அருளிச் செயல்கள இவற்றில் அமைந்த காதல் பாக்கள் யாவும் கண்ணன் மீது ஆயர் பெருமக்கள் வைத்துள்ள உறவையே சுட்டிக் கூறுகிறது.

வாசுதேவனான கண்ணனை பலதேவனுடன் கொண்டு போற்றிய பெருமை விந்திய மலைக்கு அப்பாலுள்ள வட புலத்தில் ஒரு காலத்தில் மிகுந்த புகழினைப் பெற்றிருந்தது என்பதைப் பண்டைய வடநூல்களாலும் கல்வெட்டுக்களாலும் அறிந்து கொள்ள முடிகிறது. இவ்வழக்கு காலப்போக்கில் தென்னாட்டிலும் வழங்கப்பட்டது. இதற்கு சங்க இலக்கியம் சான்றாக அமைந்துள்ளது.

**கண்ணனின் வரலாறு:-**

தமிழ் மக்களின் ஆதி தெய்வங்களில் ஒருவரான கண்ணன் தாமே தனித்தும் நம்பிமூத்தபிரானுடனும் நிகழ்த்திய அவதாரங்கள் பற்றி மக்கள் பல்வேறு வரலாறுகள் கூறியுள்ளனர். இவற்றுள் பல வடநூல் வழக்குப் பெறாதவையாக உள்ளன.

இருப்பினும் தமிழகத்திற்கே உரிய சில வரலாறுகளும் உள்ளன. அவற்றிற்கு பாரதம், பாகவதம் போன்ற புராண இதிகாசங்களை ஆதாரமாக் கூறலாம். இதனால் கண்ணன் வழியினராய்த் தென் நாட்டில் குடியேறிய ஆயர்பாடியராய் இங்கு வந்தேறிய ஆயர் போன்ற பழந்தமிழ் குடிகளால் இவ் வரலாற்று வழக்குகள் நடைபெற்றன.

இவ்வரலாறுகளில் சிறப்புடையவை நப்பின்னைப் பிராட்டித் திருமணம், கண்ணன் குருந்தொசித்தது, குடக்கூத்தாடியது, ததிபாண்டனுக்கு வீடளித்தது முதலியனவாகும்.

இவை பற்றிய செய்திகளை சங்க இலக்கியங்கள், சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி, பழமொழி, ஆழ்வார் அருளிச் செயல்கள், பிள்ளைப் பெருமான் அய்யங்காரின் அ்'டப் பிரபந்தம் முதலிய நூல்களின் மூலமாகக் காணலாம்.

இத்தகைய வழக்குகளால் தமிழகத்தில் கண்ணனைப்பற்றிய வரலாறு தொன்றுதொட்டே வழிவழியாக இருந்து வருகிறது. இதனால் தான் பாரதியாரும் கண்ணனைப் பற்றி விரிவாகப் பாடியுள்ளார். கண்ணனை ஆயர்பாடியில் குழலூதும் கண்ணனாகவும், மகாபாரத யுத்தத்தில் கீதை உபதேசம் செய்த கிரு்'ணனாகவும் இலக்கியங்கள் காட்டுகின்றன.

**ஆழ்வார்கள் கூறும் சம்பந்த ஞானம்:-**

எம் பெருமானாகிய சர்வேசுவரனுக்கும் நமக்கும் உள்ள உறவை அறிந்து கொள்வதே சம்பந்த ஞானம் என்று வழங்கப்பெறுகிறது. சர்வேசுவரனையும் நம்மையும் பொருத்திவைப்பது இந்த சம்பந்த ஞானம் ஆகும். சம்பந்த ஞானம் பற்றிய கருத்தினை திருமாழிசையாழ்வார் மிக அற்புதமாக் கூறியுள்ளார்.

**“நின்ற தெந்தை ஊர கத்து**

**இருந்த தெந்தை பாட கத்து**

**அன்று வெ.்.கணைக்கிடந்த(து)**

**எண்ணிலாத முன்னெலாம்**

**அன்று நான் பிறந்திலேன்**

**பிறந்த பின் மறந்திலேன்**

**நின்ற தும் இருந்த தும்**

**கிடந்ததும் என்நெஞ்சுளே.” (3)**

இந்த பாசுரத்தின் கருத்தைத் தெளிவாக்க வேண்டியது இன்றியமையாததாக உள்ளது.

**ஓன்பது வகை சம்பந்தம்:-**

எம்பெருமானுக்கும், நமக்கும், பரமான்மாவுக்கும் சீவான்மாவுக்கும் உள்ள சம்பந்தம் ஒன்பது வகைப்படும் என்று சுப்புரெட்டியர் கூறியுள்ளார். இந்த ஒன்பது வகை சம்பந்தங்களும் வைணவ மந்திரங்களில் மூன்றனுள் ஒன்றாகிய திருமந்திரத்தினுள் பெறப்படுகின்றன என்பது வைணவ சமயக் கோட்பாடு ஆகும்.

**“ஓம் நமோ நாராயணாய’** என்பது திருமந்திரம் இவற்றில் ‘ஓம்’’,’’**நமோ’’ நாராயணாய’’** என்று மூன்று பதங்கள் அடங்கியுள்ளன.

இவற்றுள் முதல் பதங்களாகிய பிரணவம் என்பது **அ,உ,ம** என்று மூன்று எழுத்துக்களைக் கொண்டதாக உள்ளது. இதனுள் அகரம் என்பது தந்தை –மகன், காப்பாற்றப்படுபவன். காப்பவன் என்ற சம்பந்தங்களைக் கூறுகிறது. இவற்றில் அகாரம்இ நாராயண என்ற பதத்தின் சுருக்கமாகும். இவற்றில் ‘‘ஆய’’ என்னும் நான்காம் வேற்றுமையை இறதியில் பெற்றுள்ள ‘‘நாராயணாய’’ (நாராயண ̧ஆய) என்னும் பதத்தின் சுருக்கமாகும்.

ஆய என்பது அடிமை-ஆண்டாள் என்றும், உகாரம்-நாயகன்-நாயகி என்றும் மகாரம்- அறிபவன்- அறியப்படும் பொருள் என்றும்இ சொத்து-சொத்துக்குரியவள் என்றும்இ உடல்- உயிரையுடையவன் என்றும், தாங்குகிறவன்- தாங்கப்படும் பொருள் என்றும், போகத்தை அனுபவிக்கிறவன்-போகப் பொருள் என்றும் உறவுகளை சம்பந்தப்படுகிறது.

இவ்வாறாக திருமந்திரம் ஆன்மாவுக்கும், இறைவனுக்கும் உள்ள ஒன்பது உறவுகளை ஒன்பது வகைகளாக சுப்புரெட்டியர் விளக்கியுள்ளார்.

**“குறைவு ஒன்றும் இல்லாத**

**கோவிந்தா! உன்தன்னோடு**

**உறவேல் நமக்கு இங்கு**

**ஒழிக்க ஒழியாது. (4)**

என்பது போல இந்த ஒன்பது வகை சம்பந்தங்களை என்றும் அழியாதிருக்கும் என்று சுப்புரெட்டியார் கூறியுள்ளார்.

**பாரதியின் பக்கி சுவை:-**

பாரதியின் பக்கிச் சுவையை கண்ணன் பாட்டு என்ற பகுதியில் 23 பாடல்கள் விவரிக்கின்றன. தோத்திரப் பாடல்கள், வேதாந்தப் பாடல்கள் என்ற பிரிவுகளில் 14 பாடல்கள் பாரதியாரை ஒரு வைணவச் செல்வராக் காட்டுகின்றன.

இதன் முகவுரையில் பாரதியாருக்கு கண்ணபிரான்மீதுள்ள அதிதீவிர பக்தி காரணமாக இந்நூலில் உள்ள பாடல்கள் வெளியான என்று நெல்லையப்ப பிள்ளையவர்கள் கூறுகின்றார்.

**“பொன்னைக் கொண்டு உரைகல் மீதே**

**நிறம் எழ உரைத்தாற்போல**

**உன்னைக் கொண்டு என் நாவகம்பால்**

**மாற்றின்றி உரைத்துக் கொண்டேன்**

**உன்னைக் கொண்டு என்னுள்வைத்தேன்**

**என்னையும் என்னில் இட்டேன் (5)**

என்று கூறுவதில் இந்நிலையைக் காண முடிகிறது.

பாரதியின் பக்திச்சுவை இந்நிலையை சார்ந்தவை அல்ல. பாரதியின் உணர்ச்சி கவிதை ஆற்றலினின்றும் கனிந்துள்ளது. இவை இல்லாமல் இ‘ட தெய்வத்தை. வழிபடக்கூடிய தெய்வத்தை பல்வேறு பாவனைகளாக வழிபடலாம் என்று பக்திப் பனுவல்கள் கூறுகின்றன.

**“பனிக்கடலில் பள்ளிக்கோளைப்**

**பழகவிட்டு ஓடிவந்து, என்**

**மனக்கடலில் வாழவல்ல**

**மாயமணாளநம்பீ.” (6)**

என்று சுப்புரெட்டியார் கூறுகிறார்.

ஆழ்வார் பாசுரங்களிலும் எம்பெருமானை தாய், தந்தை, குரு, தெய்வம் என்று பாவித்திருக்கின்றனர். இவற்றைப் போலவே பாரதியாரும் கண்ணனை மனதிற் கொண்டு கண்ணனைக் குழந்தையாகவும், தந்தையாகவும், தாயாகவும், தோழனாகவும், சீடனாகவும், அரசனாகவும், காதலியாகவும், காதலனாகவும், குருவாகவும் தெய்வமாகவும். பாவித்துப் பாடியுள்ளர் என்று கூறுவதில் இருவேறு கருத்திற்கு இடம் இல்லை என்று சுப்புரெட்டியார் தனது உரையில் கூறுகிறார்.

**சுவை பற்றிய விளக்கம்:-**

உலகப் பொருள்களைக் காண்பது ஒரு நிலை அவற்றைக் கண்டு இன்புறுவது மற்றொரு நிலை ஒவ்வொருவரும் பொருளைக் கண்டு மகிழ்வதற்கும், மகிழாது இருப்பதற்கும் அவரவருடைய மன நிலையே

காரணமாகும். மனதின் நிலை எப்போதும் ஒரு நிலையில் இருப்பது இல்லை. இன்பமாக இருக்கும் போது உலகமே இன்பமாகத் தெரிகிறது. துன்பமாக இருக்கும் போது உலகமே துன்பமாகக் காட்சியளிக்கிறது.

ஒரு பொருளை மீண்டும் காண நேரிடும் போது முன்பு அனுபவித்ததைப் போலவே சுகம்- துக்கம் என்ற உணர்ச்சிகளைத் தட்டி எழுப்புகிறது. இவ்வாறெல்லாம் மனதில் தோன்றும் உணர்ச்சிகளை தான் அறிஞர்கள் வாசனை என்று கூறுகினறனர். வெளியில் ஒரு பொருளை காணும் போது அப்பொருள் பற்றிய வாசனை மலர்கிறது. அவ்வாசனைக்கு ஏற்றவாறு நாம் உலகப் பொருள்களை நல்லவை என்றும் தீயவை என்றும் கொள்ளுகின்றோம். எல்லாவற்றையும் ரசமாய்க் கண்டு உணரும் உள்ளத்தையுடையவனே சிறந்த கவிஞன் என்பது அறிஞர் கருத்தாகும்.

**இலக்கியச் சுவை:-**

இறையநுபவத்திற்கு அடுத்த நிலையில் வைத்து எண்ணக்சுகூடியது இலக்கியச் சுவையாகும். இலக்கியச் சுவையில் ஈடுபட்ட புலவர் ஒருவர்

**“இருந்தமிழே உன்னால் இருந்தேன்: இமையோர்**

**விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன” (7)**

என்று கூறியுள்ளார். வாழ்நாள் முழுவதும் தமிழ் இலக்கியத் தேனை மாந்திய பாவேந்தர்.

**கன்னற்**

**பொருள் தரும் தமிழே நீஓர்**

**பூக்காடு: நானோர்தும்பி (8)**

என்று தன் அனுபவத்தை கூறுகிறார்.

பாரதியார் கண்ணன்பாட்டில் சிலவற்றில் ஏலெங்களைப்பற்றிய (சுவை) குறிப்புகள் தந்துள்ளார். இவர் பாடல்கள் அனைத்தையும் ஆழ்ந்து கற்றால்

சங்க இலக்கியங்களையோ தொல்காப்பியத்தையோ எங்கும் குறிப்பிட்டதாகத் தெரியவில்லை.

காசியில் வாழ்ந்த காலத்துப் பாரதியார் வடமொழியை ஆழ்ந்து கற்றிருத்தல் வேண்டும். வடமொழி இலக்கியங்களை நன்கு சுவைத்திருத்தல் வேண்டும். அதன் தாக்கம் இங்கும் இடம்பெற்றுள்ளது.

**ரசங்களின் பரிணாமம்:-**

ஒன்பது சுவைகளுள் கருணம் ஒன்றுதான் பல்வேறு ரஸங்களாகப் பரிணமிக்கின்றது. கருணம் ஒன்று தான் உலகின் அடிப்படை உண்மை நிலையில் அடங்கிக் கிடக்கின்றது. மனத்தின் உருக்கம் மட்டிலும் இல்லாவிடில் அங்கு ரஸத்திற்கே இடம் இல்லை. உருக்கம் கருணத்தில் தலையெடுக்கும். ஆதலால் கருணமே சிறந்த ரஸம் ஆகும்.

**“உவமை யென்னும் தவலரும் கூத்தி**
**பல்வகைக் கோலம் பாங்குறப் புணைந்து**
**காப்பிய அரங்கில் கவினுறத் தோன்றி**
**யாப்பறி புலவர் இதயம்**
**நீப்பறு மகிழ்ச்சி பூப்ப நடிக்குமே” (9)**

**ஓற்றுமையில் வேற்றுமை:-**

ஓர் உணர்ச்சியில் பிற உணர்ச்சிகள் கலக்காமல் இருப்பது அரிது. பிற உணர்ச்சிகளின் கூறுகள் அதில் இருக்கத்தான் செய்கின்றன. பூமியை எடுத்துக் கொண்டால் அதில் நீர், காற்று, நெருப்பு,ஆகாயம் என்ற நான்கும் கலந்துதான் இருக்கும்.

பக்தி என்பது சிறந்த ரஸம் அல்லது மனோநிலை. அதற்கு உறுப்பாகவே மற்ற ரஸங்கள் நிற்கின்றன என்று ஜயதேவர், லீசாசுகர் முதலிய மாமுனிவர்களாகிய கவிஞர்கள் காவியம் எழுதி மெய்ப்பித்துள்ளனர்.

பக்தி ரஸம் என வழங்குவது உபசாரமே அன்றிக் காப்பியச் சுவை பற்றிச் சிறந்த நூல்களில் வழங்குதல் இல்லை

**“பக்கிச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ” (10)**

என்று சேக்கிழார் பெருமாணைப் புலவர்கள் குறிப்பிடுவதையும் உபசார வழக்காகவே கொள்ளுதல் வேண்டும்.

பக்தி என்ற பாவம் சிருங்காரத்தில் அடங்கும் பகவானிடத்தில் செலுத்தும் அன்பு -பக்தி குழந்தைகளிடம் செலுத்தும் அன்பு- வாத்சல்யம் மனைவிடத்தில் செலுத்தும் அன்பு -காதல் இவ்வாறு அன்பு இட வேறுபாட்டிற்கேற்பப் புதுப்பெயர்களை பெறுகின்றது.

உலகியற் செயல்களுள் நகை காதல் போன்ற இன்பம் உருவாவது போல அழுகை, இழிவரல்,அச்சம்,வெகுளி முதலியவற்றில் இன்பம் உளதாதல் இல்லை.

இலக்கியத்தில் காணப்பெறும் எல்லாவித உணர்ச்சிகளும், படிபோருக்கு இன்பம் அளிப்பதால் அவையாவும் சுவைகள் என்று வழங்கப்பெறுவதாக ந.சுப்புரெட்டியர் கூறுகிறார்.

## சான்றெண் விளக்கம்

1. சேக்கிழார் - திருக்குறிப்புத் தொண்டநாயனார் - பெரியபுராணம் - பா.எண் 18.

2. தொல்காப்பியர் - தொல்காப்பியம் (பொருளதிகாரம்) - புறத்திணை - நூ.எண் - 5.

3. சேக்கிழார் - திருச்சந்த விருத்தம் - பா.எண்-64.

4. ஆண்டாள் - திருப்பாவை - பா.எண் 28.

5. பெரியாழ்வார் - பெரியாழ்வார் திருமொழி - பா.எண்.5 (4.5)

6. மேலது - பா.எண் 5 (4:9)

7. தமிழ் விடு தூது - கண்ணி 1.51

8. பாரதிதாசன் - அழகின் சிரிப்பு - தமிழ் - பா.எண்.10

9. சுப்புரெட்டியார்.ந - கலிங்கத்துப் பரணி ஆராய்ச்சி - பா.எண்.4

10. மீனாட்சி சுந்தரம்பிள்ளை - சேக்கிழார் பிள்ளைத்தமிழ் - தாலப்பருவம் - பா.எண் 8

# இயல் - 2

## கண்ணனின் பன்முகம்

**கண்ணன் பிறப்பு:-**

பெரியாழ்வார் ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து தம் தோழரான செல்வ நம்பியைப் பாக்க திருக்கோட்டியூர் செல்கிறார். அங்கே கோயில் கொண்டிருக்கும் சௌமிய நாராயணப் பெருமானைத் தரிசிக்கின்றார். அச்சமயம் அத்திருக்கோவிலில் ஸ்ரீ ஜயந்திவிழா நடைபெற்றுக் கொண்டு இருந்தது. அதனைக் கண்ட போது பெரியாழ்வாருக்கு சௌமிய நாராயணனின் திருமேனி கிரு‘ணாவதாரத்தை நினைவுபடுத்தியது.

பெரியாழ்வாரின் மனக்கண்ணுக்கு அந்த திருக்கோயில் நத்த கோபாலனின் அரண்மனையாகவும், திருக்கோட்டியூர் ஆயர்பாடியாகவும் காட்சியளிக்கிறது. சௌமிய நாராயணன் குழந்தைக் கண்ணனாக காட்சிதருகிறான். பெரியாழ்வார் கண்ணனின் பிறப்புக் காட்சிகளைக் கண்டு அழகிய பாசுரங்களை வழங்குகின்றார். இவ்வாறு வழங்கும் போது தன்னை யசோதைப் பிராட்டியாக மாற்றிக் கொள்கிறார். இதனால் ஆய்ப்பாடி மக்களுக்கு ஆனந்தம் அதிகரித்து விட்டது.

**“வண்ண மாடங்கள் சூழ்திருக்கோட்டியூர்**
**கண்ணன் கேசவன் தம்பி பிறந்தினில்**
**எண்ணெய் சுண்ணம் எதிரெதிர் தூவிடக்**
**கண்ணன் முற்றம் கலந்தளறு ஆயிற்றே”(1)**

என்று பாசுரங்களை அற்புதமாக படைக்கின்றார். இந்த பாசுரங்களைப் பாரதியார் படித்து அநுபவித்திருக்க வேண்டும் என்று சுப்புரெட்டியர் அவர்கள் தனது உரையின் மூலம் கூறுகிறார்.

ஆய்ப்பாடி மக்கள் கண்ணன் பிறப்பால் தாமாகவே ஆனந்தமாகின்றனர். பெரியாழ்வார் யசோதையாக மாறி இந்த காட்சியைத் திருகோட்டியூரில் நடைபெறுபவையகாகக் காட்டுகின்றார். பாரதியாரோ கண்ணனின் பிறப்பால் தாம் பெற்ற மகிழ்ச்சியை எக்களிப்பை, தம்மைச் சுற்றியுள்ளாரிடம் காட்டுகின்றார்.

**பண்ணையிசைப்பீர் - நெஞ்சில்**

**புண்ணை யொழிப்பீர் - இந்தப்**

**பாரினி லேதுயர் நீங்கிடும்**

**என்றிதை**

**எண்ணிடைக் கொள்வீர் - நன்கு**

**கண்ணை விழிப்பீர் - இனி**

**ஏதுங் குறைவில்லை வேதம்,**

**துணையுண்டு. (2)**

என்ற பாடலால் அவர்களிடம் ஊக்கமும் நம்பிக்கையும் பிறக்கச் செய்கிறார்.

கண்ணனின் திருமேனியை மற்ற பெண்களுக்கு யசோதை காட்ட விரும்பியதைப் போல, ஆழ்வாரும் தாம் கண்ட ''**அழியா அழகென்னும்**'' தத்துவத்தைக் ''**காணீரே வந்து காணீரே**'' என்று காட்ட விரும்புகிறார் என்று சுப்பு ரெட்டியார் கூறுகிறார்.

**கண்ணன் – என் தோழன்**

நம் வாழ்வில் பழகிப் பெற்றுள்ள எத்தனையோ நண்பர்களில் சில நெருங்கிய நண்பர்கள் இருப்பார்கள். அவர்களுள் யாரோ ஒருவர் நமக்கு ஆப்த நண்பராக இருப்பார்கள். அவ்வாறு பாரதிக்கு கண்ணன் தோழனாக இருப்பதைக் காணலாம்.

இதிகாசக் கண்ணனை மாதிரியாக வைத்துக் கொண்டு புதியதொரு கண்ணனை தோழனாகப் படைத்துக்காட்டுகிறார் பாரதியார். முதலில் இதிகாசக் கண்ணனைக் காட்டுகிறார். இந்த இதிகாச கண்ணன் சுபத்திரையை அருச்சுனன் மனைவியாக அமைத்துத் தந்தான். பன்னிரண்டு ஆண்டுகள் கானகத்தில் வாழ்ந்த போதும் ஓராண்டு கரந்து வாழ்ந்தபோதும் பாண்டவர்களுக்கு ஒரு துன்பம் நேராதவாறு காத்தவன்.

பாரதியார் படைத்துக்காட்டும் கண்ணாகிய தோழனும் பழைய அச்சில் வார்க்கப் பெற்ற புதிய கண்ணாகத் தோற்றம் பெறுகிறான். இவனைச் ‘‘சமய சஞ்சீவி’’ யாகக் காட்டுகிறார் கவிஞர்.

**“ஊனை வருத்திடும் நோய்வரும் போதிலும்**
**உற்ற மருந்து சொல்வான் - நெஞ்சம்**
**ஈனக் கவலை களெய்திடும் போதில்**
**இதஞ் சொல்லி மாற்றிடுவான்” (3)**

எப்படி இதஞ்சொல்வான் பிறிதோர் இடத்தில் காட்டும் பாங்கினை சுப்புரெட்டியார் அழகாக எடுத்துக்காட்டுகிறார்

**“சென்றதினி மீளாது மூட ரேநீர்**
**எப்போதும் சென்றதையே சிந்தை செய்து**
**கொன்றழிக்கும் கவலையெனும் குழியில் வீழ்ந்து**
**குமையாதிர் சென்றதனைக் குறித்தல் வேண்டா**
**இன்று புதி தாய்ப்  பிறந்தோம் என்று நெஞ்சில்**
**எண்ணமதைத் திண்ணமுற இசைத்துக்கொண்டு**
**தின்றுவிளை யாடியின் புற்றிருந்து வாழ்வீர்**
**தீமையெல்லாம் அழிந்து போம் திரும்பி வாரா (4)**

என்று கூறுவார். இதைக் கண்ணனாகிய தோழனின் உபதேசமாகக் கொள்வதில் தவறு இல்லை.

கண்ணன் பிழைக்கும் வழியை ஒரே பேச்சில் சொல்லி விடுவான். மழைக்குக் குடை உதவுவது போலவும் பசிக்கு உணவு உதவுவது போலவும் வாழ்வுக்கு கண்ணன் உதவுவான் என்கிறார்.

உற்றுழி, உறுபொருள் கொடுத்தும், ஒருவர் கூறும் பொருளை அவர் கூறும் முன்பே உணர்ந்து கொள்வான். ஆட்டங்கள் காட்டியும் பாடல்கள் பாடியும் ஆறுதல் செய்திடுவான். பிறர் கேலி செய்தாலும் அதனைப் பொறுத்துக் கொள்வான்.

**‘‘நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்**

**மேற்சென்று இடித்தற் கொருட்டு. (5)**

என்று நட்பின் பயனை வள்ளுவர் காட்டுகிறார்.

**கண்ணன் எப்படிப்பட்டவன்:-**

கண்ணனாகிய தோழன் பேச்சில் சதுரன். கோபம் கொள்ளும் போது கோபத்தைப் போக்கி சிரிக்கச் செய்பவன். மனம் வேறுபட்ட போது ஏதோ ஒன்று செய்து மகிழ்ச்சி செய்திடுவான். ஆபத்து நேரும் போது ஆபத்தை விலக்கிடுவான். தீமைகள் நேராதவாறு நம்மைக் காத்திடுவான்.

நெறிதவறி நடப்பவர்களை உதைத்து நசுக்குவான். மலை மலையாக பொய் கூறுவான் ஆனால் அவை யாவும் புரை தீர்ந்த நன்மை பயப்பனவாகவே இருக்கும்.

**“பெண்மைக் குணமுடையான் - சில நேரத்தில்**

**பித்தர் குணமுடையான் - மிகத்**

**தன்மை குணமுடையான் சிலநேரம்**

**தழலின் குணமுடையான். (6)**

என்பது கண்ணனின் குண ஓவியமாக கூறப்படுகின்றன.

தோழன் கண்ணனைப் பாரதியார் காட்டும் போது மனம் தன்னிச்சையாக நண்பர்களை சோதிக்கத் தொடங்குகிறது.

**“தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்**

**தீரா இடும்பை தரும்” (7)**

என்று வள்ளுவர் தோழமை பற்றி நமக்கு எச்சரிக்கின்றார்.

தோழனாக பாரதியார் காட்டும் கண்ணன் நாம் பெரிதும் விரும்புகின்றோம். நேசிக்கின்றோம். வாழ்க்கையில் உண்மைத் தோழராக இருப்பவரிடம் இந்த குணாசியங்கள் இல்லா விட்டாலும் நம் உணர்ச்சிகள் மூலம் அவற்றைக் காண முயல்கின்றோம் என்று சுப்புரெட்டியர் நட்புக்கு இலக்கணம் காட்டுகிறார்.

**கண்ணனைத் தாயாகக் கொள்ளுதல்:-**

சமயச் சான்றோர்கள் இறைவனைத் தாய் நிலையிலும் தந்தை நிலையிலும் வைத்து எண்ணுகின்றனர். அன்புகாட்டி வேண்டியவற்றை கொடுப்பதால் தாயும், கல்வி முதலியவற்றில் தந்தையும் பொறுப்பாக இருப்பதால் உவமையாகக் கொள்ளப் படுகின்றனர்.

**“....... நல்வீடு செய்யும்**

**மாதாவினைப் பிதுவை**

**மாலை வணங்குவனே.” (8)**

தொண்டரடிப் பொடிகளின் திருவாக்கில் தாய், தந்தை உறவினைப் பற்றிக் கூறியுள்ளார். திருமங்கையாழ்வாரும் அவரின் திருவாக்கில் தாய் - மகன் உறவு பற்றி தெளிவாகக் காட்டுகிறார்.

**“தெளிவிலாக் கலங்கல் நீர்சூழ்**

**திருவரங் கத்துள் ஓங்கும்**

**ஒளியுணர் தாமே யன்றே**

**தந்தையும் தாயும் ஆவார்” (9)**

என்று தந்தை தாய் உறவுகளைப் பற்றிக் கூறியுள்ளனர்.

கவிஞர் கண்ணனைத்தாயாகப் பாவிக்கும் போது பராசக்தியே அவருடைய தாயாகி விடுகிறாள். கவிஞர்

**“எனையாளும் மாதேவி வீரர் தேவி**

**இமையவரும் தொழுந்தேவி, எல்லைத்தேவி**

**மனைவாழ்வு பொருளெல்லாம் வகுக்கும் தேவி**

**மலரடியே துணையென்று வாழ்த்தாய் நெஞ்சே” (10)**

என்று கண்ணனட தாயாக பாவித்து வழிபடுகின்றனர். பாவித்

முதலில் உடலுக்கு உரம் கொடுப்பதைப் பற்றிக் கூறுகின்றனர். உண்ண உண்ணத் தெவிட்டாத அளவிற்கு உயிர்த் தன்மை பொருந்திய முலையின் வழியாக உணர்வுகளையே அன்போடு தந்து எந்தன் வாயில் கொண்டு வந்து ஊட்டுவதுமான தன்மை உடையவள் தாய் ஆவாள்.

தாய் மடியில் இருப்பது என்பது குழந்தைக்கு மிகவும் சுகமான ஒரு செயலாகும். மேலும் குழந்தை விரும்புவது பல கதைகளைக் கேட்டு மகிழ்தலே என்று கூறுகின்றார் கவிஞர்.

**“உண்ண உண்ணத் தெவிட்டாதே – அம்மை**

**உயிரெனும் முலையினில் உணர்வெனும் பால்,**

**வண்ணமுற வைத்தெனகே – என்றன்**

**வாயினிற்கொண் கட்டுமோர் வண்மை யுடையாள். (11)**

அடுத்த நிலை குழந்தைக்கு கதைக்கூறுவதாக அமைந்துள்ளது. காலம் காலமாகக் கதைகளைக் கேட்பதில் மிகவும் விருப்பமுடையவர்கள். அத்தகையக் கதைகளை பலவகைகளாகவும் சொல்லியும் கேட்டும் மகிழ்கின்றோம்.

இன்பவியல், துன்பவியல் எனப்பொது நிலையில் வகைமைப்பட்டு நின்றாலும் வெற்றிப் பெருமிதம், தோல்வியின் துன்ப நிலை என்றமைந்தப் பல்வேறு விதமானக் கதைகள் உள்ளன. இன்பம் மட்டும் தருவதான சில கதைகள், நான் ஏற்றம் பெற்று வாழ்வில் வெற்றிகளையடைய உதவும் சில கதைகள், துன்பம் பொதிந்த கதைகள் சில, தோல்விகளைத் தந்து வீழ்ச்சி பெற்றவர்களின் கதைகள் சில, இப்படிப்பல கதைகளைக் குழந்தை பருவத்தில் ஏற்றபடியும் என் உள்ளமறிந்து அன்போடு அவள் சொல்கின்ற தன்மையிலே அற்புதமான நிலையை அடைந்து விடலாம்.

**“இன்பமெனச் சில கதைகள் - எனக்**

**கேற்றமென்றும் வெற்றியென்றும் சில கதைகள்**

**துன்பமெனச் சிலகதைகள் - கெட்ட**

**தோல்வியென்றும் வீழ்ச்சியென்றும் சில கதைகள்**

**என் பருவம் என்றன் விருப்பம் - எனும்**

**இவற்றினுக் கிணங்கவென் னுளமறிந்தே**

**அன்பொடவள் சொல்லி வருவாள் - அதில்**

**அற்புதமுன் டாய்ப்பர வசமடைவேன் (12)**

என்று இப்பகுதியில் கண்ணம்மாவின் கதை சொல்லும் போக்கைக் காணமுடிகிறது.

**“சின்ன சின்ன பொம்மை**

**சிங்கார பொம்மை”**

என்று குழந்தைகளுக்கு பொம்மைகளை அறிமுகம் செய்வது போல் காட்டுகின்றனர். இவற்றுடன் விண்வெளியிலுள்ள பொருட்களையும் பொம்மையாக காட்சிப் படுத்திக் காட்டுகின்றார். நிலா என்கிற ஒரு பொம்மை உள்ளது. அதில் குளிர்ச்சியான அமுதம் போன்ற ஒளி வீசிடும். கூட்டம் கூட்டமாக மேகங்கள் பல்வேறு விதமாக அழகுகளைக் கொண்டமைந்த பொம்மை மழையைக் கூடப் பொழியச் செய்யும்.

**“சந்திரனென்றொரு பொம்மை – அதில்**
**தண்ணமுதல் போலஒளி பரந்தொழுகும்**
**மந்தை மந்தையா மேகம் - பல**
**வண்ணமுறும் பொம்மையது மழைபொழியும்” (13)**

தாயாகி வரும் கண்ணணைப் பாடுகையில்முற்றிலும் வேறு தளத்திற்குச் சென்று விடுகிறார் பாரதி.

**“கண்ணனெனும் பெயருடையான் - என்னைக்**
**கட்டி நிறைவான் எனும் தன் கையிலணைத்து**
**மண்ணெனும் தன் மடியில் வைத்தே – பல**
**மாயமுறும் கதைசொல்லி மனங்களிப்பாள்.” (14)**

உயிர்களைப் பெற்று, அந்த உயிர்களுக்காக சிரு‘டியின் அற்புதங்களை எல்லாம் படைப்பவளாக அவற்றோடு இன்பம் - துன்பம் மகிழ்ச்சி – கவலை என உலகின் இருமைகளனைத்தையும் அடக்கிய பேரியற்கையாக, மூல பிரகிருதியாக கண்ணன் என்னும் தாயைப் பாரதி காட்டுகிறார்.

**கண்ணனைத் தந்தையாக பாவித்தல்:-**

தந்தை என்றாலே குலத்தையும், பெயரையும், நன்னடத்தைகளையும் அளிப்பவர் என்பதே உலக வாழ்வின் நடைமுறை. கண்ணன் என் தந்தை என்று பெருமையோடு கூறும் பாரதி அவரது இந்த அடையாளங்களைப் பற்றிக் கூறுவது மெய்சிலிர்ப்பூட்கிறது. சமயச் சான்றோர்கள் எம்பெருமானைத் தந்தை நிலையில் வைத்தெண்ணக்கூடிய இடங்கள் எண்ணற்றவை எடுத்துக்காட்டாக நம்மாழ்வார் திருவேங்கட முடையானை.

**"…. திருவேங் கடத்து**

**என் ஆனை என் அப்பன்" (15)**

என்றும் கூறுகின்றனர்.

பூமியில் என்னைப் பிள்ளையாக என் தாய் அனுப்பி வைத்தாள். இங்கே எனக்குத் தம்பிகள் பலர் உள்ளனர். தந்தையாரின் கட்டளைக்குட்பட்டு இங்கு பல கோள்கள் சுற்றிக் கொண்டிருக்கின்றதான விந்தைகள் பல உண்டு. இவைகளைக் கண்டு நாங்களும் என் தந்தையும் மனம் களிப்படைகின்றோம். இவற்றிற்கெல்லாம் காரணமான என் தந்தையின் பெருமைமிக்க வரலாற்றினைக் கூறுகின்றார்.

**"பூமிக் கெனைய னுப்பினான் - அந்தப்**

**பூதமண்டலத்திலென் தம்பிகளுண்டு**

**நேமித்த நெறிப்படியே - இந்த**

**நெடுவெளி யெங்கனும் நித்தம் உருண்டே**

**போமித் தரைகளி லெல்லாம் - மனம்**

**போலவிருந் தாளுபவர் எங்களினத்தார்**

**சாமி இவற்றினுக் கெல்லாம் - எங்கள்**

**தந்தையவன் சரிதங்கள் சிறிதுரைப்பேன்." (16)**

அவர் பெயரை வாய்விட்டுச் சொல்லவும் அவரை ஈசனென்றும் கண்ணனென்றும் கூறுவார்கள். அவர் முகத்திணையும் உண்மைக் குணங்களையும் அறியாத சிலர் அவரை மும்மூர்த்திகளான பிரம்மா, வி'ணு, சிவன் என்றும் சொல்லித் தங்களுக்குள் விவாதம் செய்வார்கள் - எந்த செய்திகளையும் அறியாத மூடர் சிலர் அவர் தேவர் குலத்தைச் சார்ந்தவர் என்று கூறுவார்கள்.

**"நாவு துணிகுவ தில்லை – உண்மை**

**நாமத்தை வெளிப்பட உரைப்பதற்கே:**

**யாவரும் தெரிந்திடவே- எங்கள்**

**ஈசனென்றும் கண்ணனென்றும் செல்லுவதுண்டு: (17)**

தனது சொந்த வாழ்வில் சாதிய வேறுபாடுகளை உதறித்தள்ளி அனைத்து தரப்பினருடனும் சரிசமமாகப்பழகி வந்தவன் பாரதி. இதற்கான நியாயம் தனது தந்தையான கண்ணனிடமிருந்தே கிடைத்தது என்று பிரகடனம் செய்கின்றார்

**கண்ணனை வேலைக்காரனாகப் பார்த்தல்:-**

பாரதியாரின் கண்ணன் - என் சேவகன் என்ற பாடல் கண்ணனின் இந்த எளிமைக் குணத்தை எடுத்துக் காட்டவதாக அமைந்துள்ளது . சேவகர்கள்-பணியாளர்கள் பற்றி பாரதியார் கூறுகிறார்.

**"கூலி மிகக் கேட்பார்**

**கொடுத்ததெல்லாம் தாம் மறப்பார்**

**வேலைமிக வைத்திருந்தால்**

**வீட்டிலே தங்கிடுவார்" (18)**

கூலியை மிகுதியாகக் கேட்பார்கள். முன்பு தேவையான போது நாம் தரும் பணத்தையும் மறந்து விடுவார்கள். வேலை அதிகமாக உள்ள நாட்களில் வேலைக்கு வராமல் நின்று விடுவார்கள்.

இது பொதுவாக அரசு ஊழியர்கள் உட்பட வேலையாட்களின் இயல்பு என்பதை எல்லோரும் அறிவர். ஊதியம் பெறும் அனைவருமே மனோதத்துவப் போக்கில் ஒரே வகையில் அடங்குவர். சில பணியாளர்களைப் பற்றிப் பாரதியார் கூறிப்பிடுகிறார்.

**"ஓயாமல் பொய்யுரைப்பர்**

**ஒன்றுரைக்க வேறு செய்வார்**

**தாயாகி யோடு**

**தனியிடத்தே பேசிடுவார்**

**உள்வீட்டுச் செய்தியெல்லாம்**

**ஊரம்பலத் துரைப்பார்**

**எள்வீட்டில் இல்லையென்றால்**

**அங்கும் முரசறைவார்**

**சேவகரால் பட்ட**

**சிரமம்மிக உண்டுகண்டீர்" (19)**

இவையெல்லாம் வீட்டுச் சேவகர்கள், வேலைக்காரிகள் இவர்களிடத்தில் இன்றும் காணலாம். மனித இயல்பு எப்போதும் ஒன்று தானே. சில குடும்பங்களில் வேலைகாரர்களோ? வேலைக்காரிகளோ இல்லாமல் இல்லை.

**"சேவகர் இல்லாவிடிலோ**

**சேய்கை நடப்பதில்லை" (20)**

என்று வாழ்க்கையை உற்று நோக்கிக் கூறுகின்றார் கவிஞர்.

பாரதியார் காட்டும் ‘‘கண்ணன் என்ற சேவகன்’’ நல்ல உடற் கட்டுள்ளவன். கண்ணிலே களங்க மற்ற பார்வைஇ வாயில் இனிமையான பேச்சு, யார் கண்டாலும் நல்ல வேலைக்காரன் என்ற கருத்து தோன்றக் கூடியவன்.

**“தாலி கட்டும் பெண்டாட்டி**

**சந்ததிகள் ஏதுமில்லை**

**தானோர் தனியாள்**

**நரைதிரைதோன் நாவிடினும்**

**ஆன வயதிற்கு**

**அளவில்லை: தேவரீா்**

**ஆதரித்தால் போதும்**

**அடியேனை நெஞ்சிலுள்ள**

**காதல் பெரிதெனக்குக்**

**காசுபெரி தில்லை’’ (21)**

கண்ணனை வேளையாளாக அமா்த்திக் கொள்கிறாா் கவிஞா்.

**கண்ணன் - என் விளையாட்டுப்பிள்ளை:-**

இதில் கண்ணனைக் குழந்தையாகக் கண்டு அவனது விளையாட்டுகளால் அடைந்த இன்பத் தொல்லைகளைப் பாடப்படுவது ஆகும்.

கண்ணன் சிறுவனாக இருக்கும் போது. சற்று, வளா்ந்து முன்குமரப் பருவத்தை எட்டிய போதும் அவன் செய்த குறும்புகளை அளவிட்டு உரைத்தல் முடியாது. கண்ணனின் இத்‘‘திருவிளையாடல்கள்’’ பாகவத புராணத்தின் மூலமும் பல்வேறு இதிகாச புராணங்களின் முலமும் மக்களிடையே பரவியிருந்தன. ஆழ்வார்கள் பாசுரங்களும் இவற்றையே குறிபபிட்டுள்ளன.

குழந்தைப் பருவத்தில் விளையாட்டு ஒன்று தான் அதற்கு இன்பம் அளிப்பது. கற்பனையூர்வது என்ற பாரதியாரின் கவிதையொன்றில் குழந்தைப்பருவத்தின் பெருமகிழ்ச்சி விளக்கப்படுகின்றது.

**“குழந்தைகள் வாழ்ந்திடும் பட்டணம் காண்- அங்கு**

**கோல்பந்து யாவிற்கும் உயிருண்டாம்**

**பிள்ளைப் பிராயத்தை இழந்தீரே – நீர்!**

**பின்னும் அந்நிலைபெற வேண்டீரோ? (22)**

என்ற பகுதியில் இதனைக் காணலாம்.

**கண்ணம்மா – என் குலதெய்வம்:-**

கண்ணணைக் குல தெய்வமான கண்ணம்மாவாகப்பார்த்து தன்துயர்களைய வேண்டுதலே கண்ணம்மா எனது குலதெய்வம்.

எல்லாச் சமயங்களுமே இறைவனைச் சரன் அடைதலைப் பேசுகின்றன. வைணவதத்துவம் பிரபத்தி நெறி அல்லது சரணாகதியை முக்கியடையும் ஒரு நெறியாகவே காண்கிறது.

**“ நிகர்இல் அமரர் முனிக்கணங்கள்**

**விரும்பும் திருவேங்கடத்தானே**

**புகல் ஒன்று இல்லா அடியேன் உன்**

**அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே. (23)**

என்று நம்மாழ்வார் திருவேங்கட முடையானைச் சரண் அடைகின்றார்.

திருமழிசை பிரான் எம்பெருமான் திருவடியில் அடைக்கலம் புகுகின்றார். புகுந்தவர்.

**‘அடைக்கலம் புகுந்த என்னை**

**அஞ்சல் என்ன வேண்டுமே’’**

என்று தன்னை நோக்கி ‘‘**அஞ்சற்க**’’ என்று திருவாய் மலர வேண்டும் என்று எம்பெருமானை இறைஞ்சுகின்றார்.

உண்னைச் சரணம் அடைந்து விட்னே். கண்ணம்மா வாகிய என்குல தெய்வமே, உன்னைச் சரணம் அடைந்து விட்டேன்.

**‘‘நின்னைச் சரணடைந்தேன் - கண்ணம்மா!**

**நின்னைச் சரணடைந்தேன்! (24)**

என் குல தெய்வமான கண்ணணாகிய இறைவனின் பாதங்களைச் சரண் அடைந்தால் தானாகவே தீமைகள் அழிந்து நன்மைகள் பெருகும். துன்பம் சோர்வு, தோல்விகள் நீங்கி தர்மம், அறங்கள் பெருகும் என்பதனை என்றைக்கும் தெய்வ சிந்தனை ஒன்றே நல்வழிக்கும் நல்வாழ்விற்கும் வித்திடும் என்பதான எண்ணங்களையும் உணர்த்துவதாக இப்பகுதி அமைகிறது.

## சான்றெண் விளக்கம்

1. பெரியாழ்வார் - திருமொழி பா.எண் 1(1:1)
2. பாரதியார் - தெய்வப்பாடல்கள் - கண்ணன் பிறப்பு - பா.எண்.48
3. அ. சீனிவாசன் - ஆழ்வார்களும் பாரதியும் - கண்ணனைப்பற்றி பாரதி - ப.எண்.212
4. பாரதியார் - பாரதி அறுபத்தாறு - பா.எண்.32
5. இராம கிருட்டினன் - திருக்குறள் - குறள் எண் - 784
6. பாரதியார் - கண்ணன் பாட்டு - கண்ணன் என் - தோழன் - பா.எண்.8
7. அ.இராமகிருட்டிணன் - திருக்குறள் - குறள் எண் - 510
8. நம்மாழ்வார் - திருவிருத்தம் - பா.எண்.95
9. தொண்டரடிப்பொடியாழ்வார் - திருமாலை - பா.எண்.37
10. பாரதியார் - வேதாந்தப் பாடல்கள் - நெஞ்சொடு சொல்வது – பா.எண்.2
11. பாரதியார் - கண்ணன் பாட்டு – பா.எண் - 1
12. மேலது – பா.எண் - 2
13. மேலது – பா.எண் - 3
14. மேலது – கண்ணன் என் தாய் - பா.எண் - 1
15. நம்மாழ்வார் - திருவாய்மொழி – பா.எண் - 3.(9:1)
16. பாரதியார் - கண்ணன்பாட்டு – கண்ணன் - என்தந்தை – பா.எண் -
17. மேலது – பா.எண் - 3, ப.எண் - 17

18. பாரதியார் - கண்ணன் பாட்டு – கண்ணன் என் சேவகன் - பா.எண் - 1

19. மேலது – பா.அ:7

20. மேலது – பா.அ:12

21. மேலது – பா.அ:34

22. பாரதியார் - வேதாந்தப் பாடல்கள் - கற்பனையூதர் பா.எண்:6

23. நம்மாழ்வார் - திருவாய்மொழி – பா.எண்.6(10:10)

24. பாரதியார் - பாரதியார் பாடல்கள் - பா.எண்:1

# இயல் - 3

## தனிப்பாடல்களில் கண்ணன்

நம்முடைய பாரத நாட்டின் குல தெய்வமாகிவிட்ட கண்ணனுக்குப் பாமாலை சூட்டாத கவிஞர்கள் இல்லை என்கிறார் சுப்புரெட்டியார்.

இந்தத் தெய்வத்தைப் பாரதநாடு நெடு நாட்களாக மறந்திருந்தது. கீதையை உபதேசித்துப் பார்த்தனுடைய தேரை வெற்றிபெற ஓட்டிய கண்ணரொனின் உருவமே தோன்றுகிறது என்று கூறுகிறார். பார்த்தசாரதி என்ற திருநாமத்தில் சௌலப்பிய குணம் நிறைந்து நிற்கின்றதல்லவா? இந்த எளிய தன்மையைக் கொண்ட உருவம் பாரதியின் இதயத்திலும் எழுந்து இவருடைய கவிதைகட்கெல்லாம் ஓர் உயிருட்டத்தைத் தந்துள்ளது.

இதில் தேரும் தேர்ப்பாகனும் குறியீடுகளாக அமைகின்றன. பார்த்தன் பிரபத்தி நெறிக்குக் சரணாகதித் ததீதுவத்திற்குக் குறியீடாக உள்ளான். கீதை கூறும் செய்தியும் இதுவே ஆகும். மேலும் பார்த்தனுடைய தேரில் தலைவனான கண்ணன் முன்பும் பார்த்தன் பின்பும் வீற்றிருப்பது போல பிரணவத்தில்- ஓம் என்ற மொழியில்-பகவானைக் கூறும் ‘‘அகாரம்’’ முன்பும் அடியவனானா சிவனைக்கூறம் ‘‘மகாரம்’’பின்பும் இருப்பதால் பிரணவத்திற்கு பார்த்தன் தேரை ஒப்பிடுவது முன்னோர் வழக்காகும் என்று சுப்புரெட்டியார் கூறுவதை அறியமுடிகிறது.

**கண்ணன் பற்றிய இசைப்பாடல்வடிவம்:-**

கண்ணனப்பற்றிக் ‘‘கண்ணன்பாட்டு’’ என்ற தலைப்பில் காணப்படும் இருபத்துமூன்று பாடல்களைத்தவிர தோத்திரப் பாடலக்ள், ‘வேதாந்தப் பாடல்கள்’ என்ற பிரிவுளில் பல்வேறு தலைப்புகளில் பதிநான்கு பாடல்கள்

காணப்படுகின்றன. சுப்புரெட்டியார் பல இயல்களிலும் பல பாடல்களைக் குறிப்பிட்டுள்ளார்.

ஆரியதரிசம் என்ற தலைப்பில் காணப்பெறும் ஒரு பாடலில் ''பார்த்தன் செல்வத்தேர் ஏறு சாரதியாய்'' நின்ற காட்சி காட்டப்பட்டது. இந்தப்பாடல் கனவாக பாரதியின் மனதில் மகிழ்த்தது.

கனவில் ஒரு கானகம், அடர்கானகம், வான்முகட்டில் மதியொளி தென்படுகின்றது. அந்த கானகத்தில் ஒரு குன்றம். அதைச் சுற்றிலும் சுனைகளும் பொய்கைகளும் நிறைந்துள்ளன. அந்தக் குன்றத்தின் மீது பார்த்தன்வீற்றிருந்த தேர் தென்படுகிறது. பார்த்தசாரதி தேரின்முன் பக்கம் காணப்படுகிறான். அவனுடைய எழில்கொழிக்கும் திரு உருவமும்அருள் பொங்கும் விழியும் கையில் இலங்கும் சுதர்சனம் என்னும் திகிரியும் கவிஞரின் கண்ணையும் கருத்தையும் கவர்கின்றதாக் கூறுகிறார்.

இந்தக்காட்சிகளிப்பை அவரிடம் எழச்செய்கின்றது. அந்த எக்களிப்பில் ''கிரு'ணார்ச்சுனதரிசம்'' அற்புதமான இசைப்பாடல் வடிவம் கொள்ளுகின்றது என்று சுப்புரெட்டியர் கூறுகிறார்.

**''கண்ணனைக் கண்டேன் - எங்கள்**
**கண்ணனைக் கண்டேன் - மணி**
**வண்ணனை ஞான மலையினைக் கண்டேன்**
**கானவென்ன கனவே'' (1)**

போர்க்களத்தைக் காண்கின்றார். தேர்களும் யானைகளும், பரிகளும் வீரர்களும் அணி வகுத்து நிற்பதைக் காண்கின்றார். கண்ணன் நேரில் ஓர் இளைஞன் காணப்படுகினறான்.

**"கண்ணனற்றேரில் - நீலக்**

**கண்ணனற் றேரில் -மிக**

**எண்ணயர்ந் தானோர் இளைஞனைக் கண்டேன்**

**கனவென்ன கனவே" (2)**

என்று பாடுகின்றார். சுப்புரெட்டியர் கடைப்பூதங்களான நிலம், நீர், காற்று, வானம் என்பவற்றினுள்ளே மனிதன் புகுந்து அவற்றைக் கொண்டு பல்வேறு தொழில்களை நடத்துவதைப் போலவே. இறைவனும் உயிருள்ள பொருள்களினிடத்லும், அந்தரயாமியாகத் தங்கியிருந்து தொழில் நடத்துகின்றான் என்பதைத் தெளிவாக சுப்புரெட்டியர் கூறியுள்ளார்.

**'என்னை நீ புகலக் கேண்மோ**

**எங்குமாய் யாவும் ஆகி**

**பன்னிய பொருளும் யானே!**

**மறைக்கெலாம் முடிவும்யானே (3)**

என்ற உண்மையையும் உணர்வாயாக என்று கூறுகிறார்.

சீவான்மாவுக்கும் பரமான்மாவுக்கும் உள்ள தொடர்பை விளக்குகின்றார். "**தர்மங்களை –யெல்லம் அறவே ஒதுக்கித்தள்ளிவிட்டு என்னைச் சரணடைக: பாவங்கள் அனைத்தினின்றும் உன்னை நான் விடுவிப்பேன். வருந்தாதே"** என்பது கீதோபதேசம் - ஆகும்

பாரதியார் இதனை,

**"செய்தலுன் கடனே –அறம்**

**செய்தலுன் கடனே – அதில்**

**எய்துறும் விளைவினில் எண்ணம்வைக்காதே" (4)**

என்று பேசுகிறர்.

அந்நிய ஆட்சியில் அடிமைப்பட்டுக்கிடக்கும் இந்திய மக்களைக் கிளர்ந்தெழுந்து சுதந்திரப் போரில் குதிக்குமாறு கூறும் கவிஞரின் அறைகூவலே இது என்று இதனைக் கருதலாம். அன்றாட வாழ்வே சதம் என்று கருதி மயங்கி நிற்கும் மக்களுக்குப் புதிய வாழ்வில் புகுவதற்கு மக்களயாவரும் சுதந்திரப் போரில் பங்குபெற வேண்டும் என்பதே பாரதியின் கீதோ பதேசம் என்று சுப்புரெட்டியார் கண்ணன் பற்றி இசைப்பாடல்களாகக் கூறுகிறார்.

**கண்ணனை வேண்டுதல்:-**

கண்ணணை வேண்டுதல் என்ற ஒரு பாடலிலும் நாட்டு நலனைக் கருத்தில் கொண்டு தான் கீதாசாரியனை வழிபடுகின்றார் கவிஞர்.

**“எங்களாரிய பூமியெனும்பயிர்**
**மங்களம்பெற நித்தலும் வாழ்விக்கும்**
**துங்க முற்ற துணைமுகிலெ! முலர்ச்**
**செங்க ணாய்நின் பதமலர்சிந்திப்பாம்.” (5)**

இதனைத்தொடாந்து வரும் பாடல்களில் நாட்டு நலனையே திரும்பத்திரும்ப வேண்டுவதைக் காண முடிகிறது.

கண்ணனுக்குக் கோவிந்தன் என்ற ஒரு திருநாமமும் உண்டு கோவர்த்தனம் என்ற மலையைத் தூக்கிக் கல்மாரியைத் தடுத்துக் கோக்களை காத்தபோது இந்திரன் சூட்டிய பெயரே கோவிந்தன் என்ற திருமாமம் ஆகும். எனவே கோவிந்தன் பாட்டு என்ற பாடலும் கண்ணனைப் பற்றியதாகவே எடுத்துக் கொள்வது ஏற்புடையது என்று சுப்புரெட்டியார் கூறுகிறார்.

கோவிந்தனிடம் வேண்டுவனவற்றைப் பாடலில் காணலாம்.

**எளியனேன் ‘யான்’ எனலை எப்போது**

**போக்கிடுவாய்! இறைவனே இவ்**

**வளியிலே பறவையிலே மரத்தினிலே**

**முகிலினிலேவரம்பில் வான**

**வெளியிலே கடலிடையே மண்ணகத்தே**

**வீதியிலே வீட்டிலெல்லாம்**

**களியிலே கோவிந்தா! நினைக்கண்டு**

**நின்னொடுநான் கலப்ப தென்றோ? (6)**

இங்கு கண்ணனை விசுவருப தரிசனமாகவே கண்டு களிப்பதைக் காணமுடிகிறது.

பாரதியின் பாஞ்சாலி சபதத்திலும் திருதராட்டிரன்வாய்மொழியாக் கண்ணனைப் பற்றிக் கவிஞர் பேசுகின்றார்.

**ஆழ்வார்கள் கூறும் கருத்துகள்:-**

கரிய நிறத்தையேனும் நீல நிறத்தையேனும் காணம் போதெல்லாம் ஆழ்வார்கள் எம்பெருமான் கண்ணனைக் கண்டதாகவே கூறுகின்றனர்.

நம்மாழ்வர் ஆழ்வார்கட்கு அத்திருமேணியில் அவ்வளவு அன்பு இருப்பதாகக் கூறுகிறார்.

**“பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற**

**காவி மலரென்றும் காண்டோறும் -பாவியேன்**

**மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வவை**

**எல்லாம் பிரான் உருவேஎன்று.” (7)**

**“பூவைப் பூ.காயாம் பூ.நீலோற்பலம், கருநீர்ப்பூ என்னுமிவற்றை நான் காண்கின்ற பொழுதெல்லாம் எம்பெருமான் உருவைக் கண்டதாகவே நினைத்து ஆவியும் உடலும் பூரிக்கப் பெறுகின்றேன்.”**
என்கின்றார் ஆழ்வார்.

மற்றொரு பாசுரத்தில் மேகம்,மலை,கடல்,செறிந்த இருள், பூவைப் பூ மற்றும் கருநெய்தல், குயில்,மயில்,கருவிளை,களங்கனி இவற்றைக் காணும்போதெல்லாம். கண்ணபிரானை நேரில் காண்பது போன்ற அநுபவம் ஏற்படுவதாக ஆழ்வார் கூறுவதாக சுப்புரெட்டியார் தனது ஆய்வின் மூலமாக தெளிவுபடுத்துகிறார். ஆண்டாளும் குயில், மயில் கருவிளை, களங்கனி காயாம்பூ என்னும் இவை ஐந்தையும் ஐம்பெரும் பாதபர்கள் என்று பழிப்பதாக கூறுகிறார்.

இதனை.

**“பைம்பொழில்வாழ் குயில்காள்**
**முயில்காள்! ஒண் கருவிளைகாள்!**
**வம்பக் களங்கனிகாள்!**
**வண்ணப்பூவை நறுமலர்காள்!**
**ஐம்பெரும் பாதகர்காள்!**
**அணிமாலிருஞ் சோலைநின்ற**
**எம்பெருமா னுடையநிறம்**
**உங்களுக்கு என்செய்வதே.” (8)**

(நாச்.திரு-9.4)

என்ற பாடலின் மூலமாக அறியமுடிகிறது.

இவை கண்ண பிரானின் நிறத்தைக் கொண்டு தன்னைத் தீங்கு செய்வதாகக் கருதுகிறாள். தனக்குத் தீங்கு விளைவிப்பதற்காக அவை

கண்ணபிரானின் நிறத்தை ஏறிட்டுக் கொண்டன என்பது ஆண்டாளின் நினைப்பு. இவற்றை எல்லாம் நினைத்து பாரதியார் **“நந்தலாலா”** என்ற பாடலில்

**“காக்கைச் சிறகினிலே**

**நந்தலாலா –நின்றன்**

**கரியநிறம் தோன்றுதையே**

**நந்தலாலா:**

**பார்க்கு மரங்களெல்லாம்**

**நந்தலாலா –நின்றன்**

**பச்சைநிறம் தோன்றுதையே**

**நந்தலாலா” (9)**

என்று கூறுவதாக கருதலாம் என்று கூறுகிறார்.

நந்தகுமரனைக் கவிஞர் **“நந்தலாலா”** என்று கூறுகிறார். தான் கோட்கும் ஒலிகள் யாவும் கண்ணனின் புல்லாங்குழலின் இனிய ஓசையை நினைவூட்டுவதாகக் கூறுகிறார். பெரியாழ்வார் பாசுரங்கள் மட்டுமே இன்றி நாலாயிரத்திவ்வியப் பிரபந்தப் பாசுரங்கள் யாவும் பாரதியின் பாடல்களில் நிழலிடுவதைக் காணமுடிகிறது.

**கண்ணன் திருவடி:-**

கண்ணன் திருவடிப் பெருமையை இவ்வாறு கூறுகிறது.

**“பிராட்டியும் அவனும் விடினும்**

**திருவடிகள் விடாது திண்கழலா**

**யிருக்கும்” (10)**

தண்ணைப் பற்றினாரை, புரு‘காரப் பொருளான பிராட்டியாரும் உபாயப் பொருளான எம்பெருமானனும் கைவிடினும் பகவானுடைய திருவடிகள் என்றும் விடா அவைமிக்க உறுதியுடையனவாகும். கண்ணனின் திருவடிகள் அவனை விடவும் புரு‘கார பூதையான பிராட்டியாரைவிடவும் சிறந்தனவாகும். இதன் விளக்கம் ஈண்டுத் தேவவைப்படுகின்றது. பிராட்டியா் சேதநனுடைய துன்ப நிலையைக் கண்டு மனமிரங்கி அவனை ஏற்றுக்கொள்ளுமாறு புரு‘காரம் செய்கின்றாா். இத்தகைய பண்புடைய அவா் இவனுடைய குற்றங்களை எடுத்துரைக்க மாட்டாா் என்பது உண்மை. ஆயினும் ஈசுவரன் மனதில் இவனை ஏற்றுக் கொள்ளும் எண்ணத்தை ஊன்றுவிப்பதற்காக ஒரு கால் சில குற்றங்களை உரைக்கக்கூடும்.

இங்ஙனம் குற்றம் உரைக்கும் முறையில் பிராட்டியா் இவனைக் கைவிட்டு வராகின்றாா். இந்தச் சேதநனிடம் ஊன்றிய அன்பு கொண்ட பகவான், தனக்குள்ள வாத்சல்யம் முதலிய குணங்களால்,

**“என் அடியாா் அது செய்தாா்**

**செய்தாரேல் நன்று செய்தாா்” (11)**

என அவனை ஏற்றுக்கொள்ள முன் வந்து நிற்பான்

பெரியாா்கள் திருநாட்டுக் கெழுந்தருளும் இறுதிக் காலத்தில் தமக்கு மிகவும் வேண்டிய உள்ளன்பா் கட்கு அருமையான சில உபதேசங்களளைச் சொல்லிப்போவதுண்டு. இதனை “சரமசந்தேசம்” என்று வழங்குவா். கண்ணன் நம்மாழ்வாரைத் திருநாட்டிற்குக் கொண்டு போக விரைகின்றான். ஆழ்வாரும் தமக்கு இனி அடைய வேண்டிய பொருள் தப்பாது என்று துணிவு கொள்ளுகின்றாா். இவா் சம்சாரிகளாகின்ற நம் போலியா் பக்கல் பரம கருணைவடிவெடுத் தவராகையாலே, சரம உபதேசம் செய்த் தொடங்குகின்றா்.

**“கண்ணன் கழலிணை**

**நண்ணும் மன முடையீர்**

**எண்ணும் திருநாமம்**

**திண்ணம் நாரணமே” (12)**

என்று தம் உபதேசத்ததைத் தொடங்குகின்றார். எம்பொருமான் கழலிணை என்று சொல்ல வேண்டிய இடத்தில் **“கண்ணன் கழவிணை”** என்று சொல்லப்பட்டிருப்பது சிந்திக்ககத்தக்கது என்று சுப்புரெட்டியார் தனது ஆய்வில் கூறுகின்றார்.

அடியார்க்காகத் தூது சென்றும், தேரோட்டியும் ஆன்மகோடிகட்காகத்தன் எளியனாயிருக்கும் இருப்பு என்னும் திருக்குணத்தை காட்டியும் பெருமை பெற்றவன் கண்ணன். ஆகவே,அவன் திருவடிகள் குறிப்பிடப்பெறலாயிற்று.

பாரதியார் இக்கருத்துகளை எல்லாம் நன்கு அறிந்து தெளிந்தவர். வைணவ தத்துவம் இவர் அறியாததன்று பாரதியார் பிறந்து வளர்ந்த எட்டயபுரமும், கல்விகற்ற நெல்லையும் பதியும் ஆழ்வார் திருவவதரித்த குருகுருக்கு எட்டாத ஊர்களன்று “இறைவா! இறைவா! என்ற இசைப்பாடலொன்றே இவர் வைணவ தத்துவத்தை நன்கு அறிந்தவர் என்பதற்கு அரணாக அமைகின்றது.

**“எத்தனை கோடி இன்பம்**

**வைத்தாய் - எங்கள்**

**இறைவா! இறைவா! இறைவா! (13)**

என்பது இசைப்பாடலின் பல்லவி. இங்குக் கடவுளைப் பொதுவாக **“இறைவா”** என்று தான் விளிக்குகின்றார் இப்பாடலில் இனிமையாக கூறியுள்ளார்.

**"சித்தினை அசித்துடன்**

**இணைத்தாய் - அங்கு**

**சேரும் ஐம்பூதத்து**

**வியன் உலகு அமைத்தாய்**

**அத்தனை உலகமும்**

**வண்ணக் களஞ்சியம்**

**ஆகப் பலப்பலநல்**

**அழகுகள் அமைத்தாய்" (14)**

இதில் சித்து, அசித்து, ஈசுவரன் என்ற மூன்று விசிட்டாத்வைத தத்துவங்கள் இயைந்து நிற்கும் அதியம் நம் கருத்தினைக் கவர்வதாக சுப்புரெட்டியார் கூறுகிறார்.

சித்து என்பது, அறிவுள்ள ஆன்மா. ஆசித்து என்பது, உயிரற்ற சடப்பொருள் - உடலும் இதனுடன் சேரும். சித்தாகிய உயிரை அசித்தாய உடம்புடன் இணையச்செய்து அந்த உயிரை இயக்கும் இறைவனின் செயலையும், அந்த உயிர்கள் அசித்தினைக் கொண்டு செயலையும், கைபுனைந்தியற்றி எத்தனையோ கோலங்கள் புனைந்து தமக்கு வேண்டிய விதவிமான வசதிகளை எல்லாம் அமைத்து இந்த உலகினைக் கண்டுகேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலனுக்கும் ஏற்ற வண்ணக் களஞ்சியமாக ஆக்கிக்கொள்ளும் அற்புதத்திறத் தினையும் வியந்து போற்றுகினறார் சுப்புரெட்டியார்.

கண்ணன் தலைமைப் பொறியாளராக நின்று எத்தனையோ பொறியாளர்களளையும் எண்ணற்ற தொழிலாளர்களையும் கொண்டு எத்தனையோ நீர்த்தேக்க அணைகளைக் கட்டியுள்ளதையும், அங்ஙனம் சேமித்த நீரைக் கொண்டு எண்ணற்ற உழவர்களால் பல்லாயிரக்கணக்கான

ஏக்கர் நிலங்களை வளமாக்கிய செயல் களையும் எண்ணி எண்ணி இறும்பூதெய்துகின்றோம் என்று கண்ணனின் செயல்களை சுப்புரெட்டியார் இதில் அழகாக எடுத்துக் கூறியுள்ளார்.

**"முக்தியென்று ஒருநிலை**

**சுமைத்தாய் - அங்கு**

**முழுதினையும் அமைத்தாய்**

**பக்தியென்று ஒரு நிலை**

**வகுத்தாய் - எங்கள் பரமா!பரமா!**

**பரமா! (15)**

என்ற சரணத்தில் பரமபத நாதனைக் குறிப்பிடுவதுடன் முக்தி என்ற வீடுபேற்றையும் அதனையடையும் வழியாகிய பக்கியையும் குறிப்பிடுகின்றார்.

இவற்றை எல்லாம் அறிந்து தெளிந்த பாரதியார்.

**"கண்ணன் திருவடி**

**எண்ணுக மனமே**

**திண்ணம் அழியா**

**வண்ணம் தருமே" (16)**

என்ற கண்ணனின்திருவடிச் சிறப்பைப்பாடத் தொடங்குகின்றார். இத்தலைப்பிலுள்ள எட்டுப் பாடல்களும் மேற்குறிப்பிட்ட திருவாய்மொழிப் பாசுரங்கள் போல் அமைந்திருத்தலை ஒப்பு நோக்கிக் கண்டு மகிழலாம்.

முதல் திருவாய்மொழிப் பாசுரமும் பாரதியாரின் பாடலும் அடியொற்றி அமைந்துள்ளன. ஏனையவை அமையா விடினும் அவற்றில் கருத்தொற்றுமை நிழலிடுவதைக் காண முடிகிறது.

**“மாதவன் என்று என்று**

**ஓத வல்லீரேல்**

**தீதுஒன்றும் அடையா**

**ஏதம் சாராவே” (17)**

என்பது திருவாய் மொழிப் பாசுரம்.

**“புகழ்வீர் கண்ணன்**

**தகைசேர் அமரர்**

**தொகையோ(டு) அசுரர்**

**பகைதீர்ப்பதையே! (18)**

என்பது பாரதியாரின் பாடல், இவை இரண்டிலும் ஓரளவு கருத்தொற்றுமை காணப்படுகின்றது.

**“நாரணன் எம்மான்**

**பாரணங்கு ஆளன்**

**வாரணம் தொலைத்த**

**காரணம் தானே” (19)**

என்பது திருவாய் மொழிப் பாசுரம்.

**“நலமே நாடில்**

**புலவீர் பாடீர்**

**நிலமா மகளின்**

**தலைவன் புகழே (20)**

என்பது பாரதியார் பாடல், ஆழ்வார் பாசுரத்திலுள்ள **“பாரணங்கு ஆளன்”** என்ற தொடர் பாரதியாரின் பாடலில் **“நிலமா மகளின் தலைவன்”** என்று

மாறிக் கிடக்கின்றது. ஆனால் இரண்டிலும் கருத்தொற்றுமை இல்லை என்று கூறுகிறார்.

ஆழ்வார் மறந்தும் புறந்தொழா மாந்தர் பாரதியாரோ சமரச நிலையினர் எல்லாக் கடவுள்களையும் பாடுபவர் வழிபடுபவர். ஆகவே ஆழ்வார் பாசுரங்களில் திருமால், நாரணன், அரவு அணையான், காயாமலர் வண்ணன், மாதவன், முகில் வண்ணன், நெடியான் என்றெல்லாம் சுட்டப்பெறுகின்றான். பாரதியார் தம் பாடலில் பல கடவுள்களையும் சூட்டுவதாக கூறுகின்றார் சுப்புரெட்டியார்.

**“ஒன்றே பலவாய்**
**நின்றோர் சக்தி**
**என்றும் திகழும்**
**குன்றாஒளியே” (21)**

இந்தப் பாடல்களில் திருமால், சிவன், தேவர்கள், சக்தி என்ற தெய்வங்கள் குறிப்பிடப் பெற்றிருபதைக் காணலாம். கருத்தில் வேறுபடினும் பாடல் அமைப்பு ஒன்று படுகின்றது. ஆழ்வாரையொட்டி பாரதியாரும் கண்ணன் வழிபாட்டில் ஆழ்ங்கால்படுகின்றார் என்று சுப்பு ரெட்டியார் கண்ணன் மீது கொண்ட அன்பை அழகாக எடுத்துக் கூறுகிறார்.

**சான்றெண் விளக்கம்**

1. சீனிவாசன் - ஆழ்வார்களும் பாரதியும் - ப.எண்:199
2. மேலது – ப.எண் 199
3. வில்லிபுத்தூராழ்வார் - வில்லிபாரதம் - பா.எண்:5
4. சீனிவாசன் - பாரதியின் புதிய ஆத்திச்சூடி – ப.எண்:109
5. பாரதியார் - தெய்வப் பாடல்கள் - பா:எண் - 3
6. மேலது – கோவிந்தன் பாட்டு – பா.எண் - 43
7. நம்மாழ்வார் - பெரிய திருவந்தாதி – பா.எண் - 73
8. ஆண்டாள் - நாச்சியார் திருமொழி – பா.எண்:39(9.4)
9. பாரதியார் - வேதாந்தப்பாடல்கள் - நந்தலாலா – பா.எண்-1
10. முமுட்சுப்படி – பா.எண் - 146
11. பெரியாழ்வார் - பெரியாழ்வார் திருமொழி – பா.எண் 16(4.9.2)
12. நம்மாழ்வார் - திருவாய்மொழி – பா.எண்-(10.5:1)
13. பாரதியார் - பாரதியார் பாடல்கள் - எத்தனை கோடி இன்பம் - பா.எண் - 9
14. பாரதியும் பாட்டும் - இறவைா இறவைா – பா.எண் - 1
15. மேலது – பா.எண் - 2
16. பாரதியார் - வேதாந்தப்பாடல்கள் - கண்ணன் திருவடி – பா.எண்:22
17. நம்மாழ்வார் - திருவாய்மொழிப்பாசுரம் - பா.எண் 7

18. பாரதியார் - பாரதியார் பாடல்கள் - கண்ணன் திருவடி –பா.எண்-5

19. நம்மாழ்வார் - திருவாய் மொழிப்பாசுரம் - பா.எண் - 2

20. பாரதியார் - பாரதியார் பாடல்கள் - கண்ணன் திருவடி – பா.எண்-4

21. மேலது – பா.எண் - 8

# இயல் - 4

## படிமங்கள்

**படிமம்:**

படிமம் அல்லது படம் என்பது ஒரு உருவத்தை காகிதம் அல்லது எண்முறை படமாக எடுப்பது ஆகும். படிமம் என்பது நவீன இலக்கியத் திறனாய்வில் பயன்பாட்டில் உள்ள ஒரு சொல் ஆகும். இலத்தீன் சொற்களான இமெகோ, இமித்தரை ஆகியவற்றின் அடியொற்றிப் பிறந்தது. படிமம் என்பதன் வேர்ச்சொல் படி ஆகும். படி என்னும் சொல்லிற்கு ஒப்பு, ஓர் அளவு, குணம், உருவம், முறைமை, வேடம் போன்ற பொருள்கள் உள்ளன. அதுபோல், படிமம் என்பதற்கு வடிவம், படிமக்கலம், பிரதிமை, தூய்மை, பூதம் முதலான பொருள்கள் இருக்கின்றன. இச்சொல்லை இலக்கியத்தில் முதன்முதலாகக் கையாண்டவர் **தெ.பொ.மீனாட்சி சுந்தரனார்** ஆவார(1).

**படிமக்கவிதை:**

படிமம் என்பது புதுக்கவிதைக்கு உரியது எனினும் மரபிலுள்ள உருவகமே புதுக்கவிதையில் பெயர் மாறி தொடர்கிறது, உவமை உருவகங்களின் பரிணாம வளர்ச்சியே படிமம் என கைலாசபதி சுறியுள்ளது கவனிப்பிற்குரியது.(2) மெய் உரு என்பவை படிமப் பண்புகள் என தொல்காப்பியமும் கூறுகின்றது.(3)

இமேஜ் என்னும் ஆங்கிலச் சொல்லின் தமிழ்ச் சொல்லே படிமம், பிம்பம், உரு காட்சி என அழைக்கப்படுகிறது. ஆயினும் படிமமே பிரபலம். மேலை நாடுகளில் நிகழ்ந்த தொழில்புரட்சிகளால் சமூகத்தில் மாற்றங்கள்

பல ஏற்பட்டன அக்காலச் சூழலில் ஏற்பட்ட அம்மாற்றம் படைப்பகளிலும் காணப்பட்டது. இதனால் பல புத்திலக்கியங்கள் தோன்றின.

படிமத்துக்கு பல விளக்கங்கள் உண்டு. சொற்களால் வரையப்படும் ஓவியம் என சி.டேலூயில் கூறுவார்.(4) கவிதையைச் செம்மைப்படுத்துவதும் செறிவுபடுத்துவதும் சிறப்புப்படுத்துவதும் படிமமேயாகும். கவிதையைக் காட்சியாகத் தோன்றச் செய்வது படிமம் எனப்படும்.

மிக முக்கியமாக படைப்பாளனின் அனுபவத்தை வெளிப்படுத்தும் ஆற்றல் பெற்றதே படிமம். குறிப்பாக “தீப்பந்து போன்ற சூரியன்” என்னும் **“தீப்பந்து சூரியன்”** என்று சுருக்கி எழுதினால் அது படிமம். படிமத்திற்கு சுருக்கதேவை.(5)

கவிஞர்கள் தம் அனுபத்தைத் தேர்ந்தெடுத்த சொற்களால் உணர்வூட்டி நமக்குத் தருகின்றனர். உருக்காட்சிகள் சிந்தனை இவற்றின் குறியீடுகளாக சொற்கள் துணைபுரிகின்றன. **“பர்ட்டன்”** என்ற திறனாய்வாளரின் கருத்துப்படி கவிதையின் உருக்காட்சி சொற்களின் மூலம் நம்புலன்களைத் தொடுகின்றது.(6)

புலன்களின் மூலம் படிப்போரின் உணர்ச்சிகளும் அறிவும் விரைவாகத் தூண்டப் பெறுகின்றன. இதன் காரணமாகக் கவிதையில் உருக்காட்சி அதிகமாகப் பயன்படுகின்றது.

**“செலுத்தப்பெறும் புலன்களுக்கேற்ப உருக்காட்சிகள் வகைப்படுத்தப் பெறுகின்றன”**

- கட்புல உருக்காட்சிகள்
- செவிப்புல உருக்காட்சிகள்
- சுவைப்புல உருக்காட்சிகள்

- ❖ நாற்றப்புல உருக்காட்சிகள்
- ❖ ஊறு அல்லது தொடுபுல உருக்காட்சிகள்

என்பவை ஆகும். இவற்றைத்தவிர **“மரபு நிலை உருக்காட்சிகள், இயக்கநிலை உருக்காட்சிகள்** என்பவையும் உள்ளன. இவை தனியாகவும் ஒன்று இரண்டு பலவுமாக இணைந்து கலவை உருக்காட்சிகளாகவும் கவிதையில் அமைகின்றன என்று கூறுகிறார்.

குறியீடுகளாக அமையும் சொற்கள் **“கட்டுண்ட”** உருக்காட்சிகளையும், விடுதலை உருக்காட்சிகளையும் உண்டாக்கிப் படிப்போரிடையே ஒத்துணர்வுத் துலங்கலையும் ஒட்ட உணரும் துலங்கலையும் எழுப்புகின்றனர். இவற்றால் படிப்போரின் கவிதை அனுபவம் - முருகுணர்ச்சி – கொடுமுடியை எட்டுகின்றது. இக்கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு **“கண்ணன் பாட்டை”** ஆராய்வோம். புாரதியாரின் முருகியல் நோக்கு அவர்தம் அற்புதமான பாடலில் எவ்வாறு அமைந்துள்ளன என்பதை சுப்புரெட்டியார் கூறுவதை ஈண்டு நோக்கலாம்.

**கட்புல உருக்காட்சிகள்:**

கண்ணனாகிய தோழன் எவ்வாறெல்லாம் தமக்குத் துணை புரிவான் என்று கூறுமிடத்தில் வரும், **“பொன்னவிற் மேனி சுபத்திரை, “தீபத்திலே விழும் பூச்சிகள்”, “கண்மகிழ் சித்திரம்”.** இவற்றின் கட்புல வண்ண உருக்காட்சிகளும் வடிவ உருக்காட்சிகளும் அமைந்திருப்பதைக் கண்டு மகிழலாம்.

கண்ணன் என்பதாய் என்னும் பாடலில் வரும் **“சந்திரன் என்றொருபொம்மை”, மந்தை மந்தையாக மேகம்”.**

**“வானத்து மீன்களுண்டு – சிறு**

**பணிகளைப் போல்மின்னி நிறைந்திருக்கும்”**(7)

என்ற தொடர்களிலும் கட்புல உருக்காட்சிகள் அமைந்து பாட்டைக் கவினுறச் செய்வதை கூறுகிறார்.

“கண்ணன் என் தந்தை” என்ற பாடலில் காணப்பெறும்,

**“நிறந்தனிற் கருமை கொண்டான் அவன்;**

**நேறமுறக் களிப்பது பொன்னிறப் பெண்கள்”**(8)

என்ற அடிகளைப் படிக்கும் போது கருநிறக் கண்ணனும் பொன்னிறப் பெண்களும் நம் மனக்கண்ணில் வண்ண வடிவ உருக்காட்சிகளாக அமைகின்றனர். “கண்ணம்மா - என் காதலி - 6” என்ற பாடலில் வரும்.

**“எல்லை யற்ற பேரழகே!**

**எங்கும் நிறை பொற்சுடரே!**

**முல்லைநிகர் புன்னகையாய்!**

**மோதுமின்பமே! கண்ணம்மா!**(9)

என்ற பகுதியில் கட்புல - வண்ண உருக்காட்சிகளை அநுநுவித்து மகிழலாம்.

**செவிப்புல உருக்காட்சி:**

செவிப்புல உருக்காட்சிகளுக்கு பாட்டின்பத்தை மிகுவிக்கத் துணை புரிகின்றன. கண்ணம்மா என் தாய் என்ற பாடலில் வரும்,

**-அலை**

**எற்றிநுரை சுக்கியொரு பாட்டிசைக்கும்**

**ஒல்லெனுமப் பாட்டினிலே – அம்மை**

**ஓமெனும் பெயரென்றும் ஒலித்திடுங்கள்**(10)

என்ற பகுதியில் தாய் தன் குழந்தைக்குக் காட்டும் "விரிகடற் பொம்மை" பாட்டிசைப்பதிலும், அப்பாட்டில் "ஓம்" எனும் பெயர் ஒலிப்பதிலும் செவிப்புல உருக்காட்சி இருப்பதை காணமுடிகிறது.

**"சேரி முழுதும் பறைபடித்தேயருட்**

**சீர்த்திகள் பாடிடுவேன்**

**பேரிகை கொட்டித்திசைகளதிரநின்**

**பெயர் முழக்கிழுவேன்"**(11)

இப்பாடற் பகுதியில் "பறையடித்தல்", "கீர்த்திகள் பாடுதல்", பேரிகை கொட்டுதல்", பெயர் முழக்குதல்" இவை செவிப்புல உருக்காட்சிகளாக நின்று அவற்றின் ஒலிகள் நமது மனக்காது கேட்குமாறு செய்கின்றன" ஒரு சில உருக்காட்சிகள் தாம் ஈண்டுக் காட்டப்பெற்றன. பாடல்களைப் படித்து நுகரும் போது பலவற்றைக் கண்டு மகிழலாம் என்று சுப்புரெட்டியார் கூறுகிறார்.

**சுவைப்புல உருக்காட்சிகள்:**

இவ்வகை உருக்காட்சிகள் "கண்ணன் பாட்டில்" அதிகமாக காணப்பெறவில்லை. "கண்ணன் - என்தாய்" என்ற பாடல்,

**"உண்ண உண்ணத் தெவிட்டாதே - அம்மை**

**உயிரெனும் முலையினில் உணர்வெனும் பால்;**

**வண்ணமுற வைத்தெனக்கே - என்றன்**

**வாயினிற் கொணடூட்டுமோர் வண்மையுடையாள்"**(12)

'உண்னும் போது தெவிட்டுதல்', வாயினில் ஊட்டுதல்' என்பவை சுவைப்புல உருக்காட்சிளாக அமைகின்றன. இவையின்றி கண்ணன் - என்

விளையாட்டுப்பிள்ளை என்ற பாட்டிலும் கண்ணனின் செயல்களைக் கூறும் இடத்தில் சுவைப்புல உருக்காட்சிகள் வருவதாக சுப்புரெட்டியார் கூறுகிறார்.

**“தின்னப் பழங்கொண்டு தருவான்;- பாதி**

**தின்கின்ற போதிலே தட்டிப் பறிப்பான்”**(13)

இப்பாடற்பகுதியில் “தின்னுவதற்குப் பழம்” “தின்கின்ற போதில்” என்பவை சுவைப்புல உருக்காட்சியாக அமைகின்றன. இப்பகுதியை படிக்கும் போதே பழத்தின் சுவையை நம் மனம் உணர்கின்ற தன்றோ? இதே பாட்டில் வரும் “தேனொத்த பண்டங்கள்” என்ற தொடரிலும் உருக்காட்சி தென்படுகின்றது.

**நாற்றப்புல உருக்காட்சிகள்:**

நாற்றப்பல உருக்காட்சிகள் அரியனவாகவே காணப்பெறுகின்றன. “கண்ணன் என் காதலன்” என்ற பாடலில் வரும் “நெஞ்சில் கனல் மணக்கும் பூக்கள்” என்ற தொடரிலும், “கண்ணன் - என் காந்தன்” என்ற பாட்டில் வரும்,

**“பணிசெய் சந்தனமும் - பின்னும்**

**பல்வகை அத்தர்களும்**

**குனியும் வாண்முகத்தான் - கண்ணன்**

**குலவி நெற்றியிலே**

**இனிய பொட்டிடவே - வண்ணம்**

**இயன்ற சவ்வாதும் (14)**

என்ற பகுதிகளைப் படிக்கும்போதே சந்தனம், அத்தர், சவ்வாது, மணம் கூடுவது இவை நாற்றப்புல உருக்காட்சிகளாக அமைவதாக கூறுகிறார்.

**தொடுபுல உருக்காட்சிகள்:**

இவ்வகை உருக்காட்சிகளும் பாட்டில் அதிகமாகத் தென்படவில்லை. எனினும் ஒன்றரண்டு காட்டப்படுகிறது. “கண்ணன் - என் தோழன்” என்ற

பாட்டில் வரும்". தன்மைக் குணமுடையான்", தழலின் குணமுடையான்" என்ற தொடர்களிலும், "கண்ணன் - என் சீடன் என்ற பாட்டில் வரும்,

**"சினத்தீயாகி நான்**

**ஏதடா சொன்ன சொல் அழித்துரைக்கின்றாய்;**

**பித்தனென்றுன்னை உலகினர் சொல்வது**

**பிழைபிலை போலும்" என்றேன்;**(15)

என்ற தொடர்களிலும் தொடுபுல உருக்காட்சிகள் காணப்படுவதாக கூறப்படுகிறது.

கண்ணன் - என் காதலி என்ற பாட்டில் வரும்,

**"மேனி கொதிக்கு தடீ! - தலை சுற்றியே**

**வேதனை செய்குதடீ!"**(16)

என்ற அடியைப் படிக்கும்போதே இவ்வகை உருக்காட்சிகள் நம் மனதை உணரச் செய்கின்றது என்று கூறுகிறார்.

**இயக்கப்புல உருக்காட்சிகள்:**

"கண்ணன் பாட்டில்" பல இடங்களில் இவ்வகை உருக்காட்சிகள் அமைந்து பாடலின் சுவையைப் பன்மடங்கு உயர்த்துவதாக கூறப்படுகிறது.

**"சேனைத் தலை நின்று போர் செய்யும் போதினில்**

**தேர் நடத்திக் கொடுப்பான்**

**ஆட்டங்கள் காட்டியும் பாட்டுக்கள் பாடியும்**

**ஆறுதல் செய்திடுவான்"**(17)

மேற்காட்டப் பெற்ற தொடர்களிலும் பாடற் பகுதிகளிலும் இயக்கப்புல உருக்காட்சிகள் அமைந்திருப்பதைக் கண்டு மகிழலாம்.

**கலவை நிலை உருக்காட்சிகள்:**

சில பாடல்களில் ஒன்றுக்கு மேற்பட்ட பலவகை உருக்காட்சிகள் அமைந்து அவற்றிக்குப் பொலிவூட்டுகின்றன.

**"வெடுக்கெனச் சினத்தீ வெள்ளமாய்ப் பாய்ந்திடக்**

**கண்சிவந்திதழ்கள் துடித்திடக்கனன்று நான்"**(18)

இந்த அடிகளில் "சினத்தீ" தொடுபுல உருக்காட்சியையும், கண்கள் சிவத்தல் கட்புல உருக்காட்சியையும் வெள்ளமாய்ப் பாய்தல், துடித்திடுதல் இவை இயக்க நிலை உருக்காட்சிகளையும் எழுப்பச் செய்கிறது.

இக்கலவை நிலை உருக்காட்சி கவிதையைக் கவின் பெறச் செய்கின்றது. தேனிலினிய குரலிலே - கண்ணன் செப்பவும் என்ற தொடரில் தேன்சுவைப்புல உருக்காட்சியையும், குரலில் செப்புதல் செவிப்புல உருக்காட்சியையும் எழுப்பிக் கலவையை உருவாக்குதலைக் காணமுடிகிறது.

**"பிள்ளைக் கனியமுதே - கண்ணம்மா**

**பேசும் பொற்சித்திரமே**

**அள்ளி யணைத்திடவே - என் முன்யே**

**ஆடிவருந்தேனே**

**ஓடி வருகையிலே - கண்ணம்மா!**

**உள்ளங் குளிருதடீ!**

**ஆடித்திரிதல் கண்டால் - உன்னைப்போய்**

**ஆவி தழுவு தடீ!**(19)

என்ற பாடற்பகுதிகளில் கனியமுது, தேன் இவை சுவைப்புல உருக்காட்சிளையும், பேசும் பொற்சித்திரம் செவிப் புல உருக்காட்சியையும், அள்ளி அணைத்திடல், உள்ளம் குளிருதல், ஆவிதழுவும் இவை இயக்க

நிலை உருக்காட்சிகளையும், இவற்றையெல்லாம் கொண்ட குழந்தை கட்புல உருக்காட்சியையும் எழுப்பிக் கலவை நிலை உருக்காட்சியை உருவாக்கிப் பாட்டின் சுவையைப் பன்மடங்கு உயர்த்துவதை காணலாம்.

**“சொல்லும் மழலையிலே - கண்ணம்மா!**

**துன்பங்கள் தீர்த்திடுவாய்!**

**முல்லைச் சிரிப்பாலே - எனது**

**மூர்க்கந் தவிர்த்திடுவாய்”**(20)

என்ற பாட்பகுதியில் “சொல்லும் மழலை” என்ற தொடர் செவிப்புல உருக்காட்சியையும், “முல்லைச்சிரிப்பு” கட்புல உருக்காட்சியையும் எழுப்பி ஒரு கலவை நிலையை உண்டாக்குவதையும் கண்ணுறுகின்றோம். இவ்வாறு பாடல்களில் பல்வேறு இடங்களில் பலவித கலவை நிலை உருக்காட்சிகளைக் காணலாம் என்று கூறுகிறார்.

**கவிதை அநுபவம்:**

நம் உடல் தூண்டல் துலங்கல் முறையில் இயங்குகின்றது. உள்ளமும் அதற்கேற்பத் துலங்குகின்றது. வெளியுலகிலிருந்து தூண்டல்கள் புலன்களைத் தாக்கும்போது, அவற்றிற்கேற்பப் புலன்கள் துலங்குகின்றன. அதாவது அப்புலன்கள் அத்தூண்டல்களால் கிளர்ச்சியடைகின்றன.

அதனால் ஏற்படும் உணர்ச்சியை மனம் அநுபவிக்கின்றது. இந்த உணர்ச்சிப் பெருக்கில் உண்டாகும் இன்பமே - முருகுணர்ச்சியே - சுவையாகும். எடுத்துக்காட்டாக மணப்பொருள்கள் நல்கும் மணத்தை நாற்றப்புல நரம்புகள் வாங்கி, மூளைக்கு அனுப்புகின்றன. மனம் அப்பொருள்கள் தரும் மணத்தை அநுபவிக்கின்றது.

பிற புலன்களின் மூலம் பெறும் தூண்டல்களால் மனம் அந்தந்தப் பொருள்கள் தரும் சுவைகளைப் பெற்று அவற்றில் ஈடுபடுகின்றது. இவ்வாறு வெளியுலகத் தூண்டல்களால் அடிக்கடி மனம் பெறும் அநுபவம் பெருமூளையில் பதிவாகின்றது. உலகை இன்பமயமாகக் கண்டு, உள்ளத்தில் பூரிப்பு அடைபவர்கள் கவிஞர்கள். அதற்கு உள்ளத்தில் கனிவு வேண்டும்.

இவ்வாறு பெருமூளையில் பதிவாகியிருக்கும் அநுபவம் கவிதைகளைப் படிக்கும் போது நினைவாற்றலின் காரணமாகத் தூண்டல்களாக மாறுகின்றன. அவை மூளையிலுள்ள பூத்தண்டு மேற்பூத்தண்டு என்னும் பகுதிகளின் மூலமாகப் புலன்களை அடைகின்றன. அப்படி அடையும் போது அவை மூளையில் அற்புதமாக அமைந்திருக்கும் நரம்பு அமைப்புகளைத் தூண்டுகின்றன.

அப்போது கவிதைகளில் வரும் உருக்காட்சிகளைப் புலன்கள் மீண்டும் மனத்தில் தோன்றச் செய்கின்றன. மனம் அக்காட்சிகளை அநுபவித்து மகிழ்கின்றது. இத்தகைய முருகுணர்சியைத் தம் முருகியல் நோக்கால் தம்முடைய கவிதைகளில் ஏற்றிவைக்கின்றர் கவிஞர்கள். உலக இயல்பிற்குப் படம் போலிருக்கும் அவர்களுடைய கவிதைகளை நாம் பயிலுங்கால் அதே நோக்கை நாம் பயிற்சியால் பெறுகின்றோம். கவிஞர்கள் உலகப் பொருள்களை அநுபவித்த உணர்ச்சி சுவை வடிவமாக அவர்தம் கவிதைகளில் தேக்கி வைக்கப் பெற்றுள்ளன என்று கூறுகிறார்.

அக்கவிதைகளை நாம் பயிலுங்கால் அவற்றிலுள்ள சுவைகளை நம் மனம் அநுபவித்து மகிழ்கின்றது. பாரதியாரின் **“கண்ணன் பாட்டைப்”** பயின்று அநுபவிப்பவர்கள் அவருடைய முருகியல் நோக்கை மானசீகமாகக் கண்டு மகிழலாம். நம்மிடமும் அந்நோக்கு எழுவதையும் உணர்ந்து

மகிழலாம் பாடல்களும் **“மும்மா் அறுக்கும் மருந்தாக”** நமக்குக் களிப்பூட்டுவதையும் உணரலாம்.

பாட்டிலமைந்துள்ள படிமங்களே - உருக்காட்சிகளே - இப்பெரும்பணியை - நுட்பமான பணியை நிறைவேற்றத் துணை புரிகின்றன.

**“கண்ணன் காதலன் - எனக்கொரு**

**களிய முதமடா**

**விண்ணமுதமுமே - அதனை**

**வெல்ல மாட்டதடா”**(21)

என்பது கவிமணி தேசிக விநாயம் பிள்ளையின் பாட்டநுபவமாகும். கண்ணன் பாட்டு முழுவதையும் காட்டும் முறையில்,

**“பல**

**கோணங்களில்**

**கண்ணனைப்**

**படம் பிடித்த**

**கேமரா...”**(22)

என்ற புதுக்கவிதை அமைகின்றது. பாரதியாரையே “கேமரா” என்ற ஒரு குறியீடாகச் சொல்லி மகிழ்கின்றார் சுப்புரெட்டியார்.

இவ்வாறாக படிமங்கள் என்ற தலைப்பில் **“கண்ணன் பாட்டில்”** அமைந்துள் உருக்காட்சிகளையும் கவிதை அநுபவத்தையும் சுப்புரெட்டியார் கூறுகிறார்.

## சான்றெண் விளக்கம்


1. https://ta.m.wikipedia.org
2. பொன்.குமார் - கீற்று - ப.எண்.1.
3. மேலது - ப.எண்.1
4. மேலது - ப.எண்.2
5. மேலது - ப.எண்.2
6. சுப்புரெட்டியார் - கண்ணன்பாட்டுத்திறன் - ப.எண்.221
7. பாரதியார் - கண்ணன் பாட்டு – கண்ணன் என் தாய் பா.எண்-4
8. கண்ணன் என் - தந்தை – பா.எண் -4
9. கண்ணம்மா – என் காதலி – பா.எண் - 4
10. கண்ணம்மா – என் தாய் - பா.எண் 5
11. கண்ணன் - என் ஆண்டான் - பா.எண் 3
12. கண்ணன் - என்தாய் - பா.எண் 1
13. கண்ணன் - என் விளையாட்டுபிள்ளை – பா.எண் 1
14. பாரதியார் - கண்ணன் பாட்டு - கண்ணன் என் காந்தன் - பா.எண்.1
15. மேலது – கண்ணன் -என் சீடன் - பா.எண் 11
16. மேலது – கண்ணன் என் காதலி – பா.எண் 15
17. கண்ணன் என் தோழன் - பா.எண் 15
18. மேலது – பாடல்.எண் - 4

19. கண்ணன் என் சீடன் - பா.எண் - 3(122)

20. கண்ணம்மா என் குழந்தை – பா.எண் - 2,3

21. தேசிக விநாயகம் பிள்ளை.சி – மலரும் மாலையும் - பாரதியும் பட்டிக் காட்டானும் - பா.எண் - 16

22. கவிஞர் வாலி – பாரதி ஒரு பிள்ளையார் சுழி

# முடிவுரை

சுப்புரெட்டியார் அவர்கள் எழுதிய நூல்களுள் பன்னிரண்டு நூல்கள் வைணவ சமய தத்துவங்களைப் பற்றியவை ஆகும். இவருக்கு தமிழக அரசு, தமிழ் வளர்ச்சிக் கழகம் பரிசு வழங்கி சிறப்பித்துள்ளது. மேலும் இவரது கவிப்புலமையையும் ஆய்வுத்திறனையும் வைணவத் திருத்தொண்டினையும் பாராட்டும் விதமாக மார்ச் 1987 ஆம் ஆண்டு பண்ணுருட்டி ஸ்ரீமத் ஏ.வே.ஷ இராமநுசநாவலர் சபை தமது 62-வது ஸ்ரீ வைணவ மாநாட்டில் இவருக்கு "ஸ்ரீ சடகோபன் பொன்னடி" என்னும் விருதை வழங்கிச் சிறப்பித்துள்ளது.

ஆழ்வார்கள் வாயிலாகவும், ஆயர்பாடி மக்கள் வாயிலாகவும் கண்ணன் பற்றி கூறியிருப்பது சிறப்பாக அமைந்திருக்கிறது. கண்ணன் பிறப்பு முதல் கண்ணனை தாய், தந்தை, குழந்தை, தெய்வம் என பல்வேறு விதமாக பாவித்து வழிபட்ட நிகழ்வுகளையும் அழகாகக் கூறியுள்ளார்.

இவற்றுள் கண்ணனின் பக்தித்திறன் சிறப்பாக காட்டப்பட்டுள்ளது. கண்ணன் ஒரு தெய்வமாக இல்லாமல் நம்முடன் வாழும் ஒரு மனிதனாகக் காட்டப்படுகின்றான். இதன் மூலமாக கண்ணன் மீது சுப்புரெட்டியார் கொண்டுள்ள பக்தித்திறத்தை அறிய முடிகின்றது.

கண்ணன் பாட்டுத்திறன் மூலம் கண்ணனின் வாழ்க்கை, ஆயர்பாடி மக்கள் கொண்டுள்ள அன்பு போன்றவற்றை சுப்புரெட்டியாரின் ஆய்வு மூலமாக அறியமுடிகிறது.

கண்ணன்மீது ஆழ்வார்கள் மற்றும் பாரதியார் கொண்டிருந்த பக்தி பாவத்தினை நன்கு உணர்ந்து அனைவருக்கும் எளிமையாகப் புரியும் வண்ணம் ஒப்புமைப்படுத்தி எடுத்துக் காட்டியுள்ள பாங்கு சுப்புரெட்டியாரின் வைணவ ஈடுபாட்டையும் ஆழ்ந்த புலமையையும் தெற்றெனக் காட்டுகின்றது.

# துணை நூற்பட்டியல்

**முதன்மை ஆதாரம்:**


1.சுப்புட்டியார்.ந — கண்ணன் பாட்டுத்திறன் ந.சுப்புட்டியார் 100 committee publications

13/5th Street, Anna Nagar West, Chennai – 600 040 முதற்பதிப்பு – 1982


**துணைமை ஆதாரம்:**


1.முனைவர்.கமலாமுருகன் — கண்ணன் பாட்டு(மூலமும் உரையும்)

சாரதா பதிப்பகம் சென்னை – 600 014 முதற்பதிப்பு – அக்டோபர் 2007

2. ஆழ்வார்கள் — நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் மர்ரே கம்பெனி ராஜம் பதிப்பு

3.சிவஞானம். ம.பொ — பாரதியார் பற்றி ம.பொ.சி பேருரை

B-5, ஸ்ரீ பாலகணேஷ் அப்பார்ட்மெண்ட் புதியஎண் 2 ஸ்டேஷன் ரோடு மேற்கு மாம்பலம், சென்னை – 600 033

4.சுப்பிரமணிய பாரதியார் — பாரதியார் கவிதைகள் எஸ்.ஆர்.சுப்பிரமணிய பிள்ளை வெளியீடு – 1962

5. சீனிவாசன்.அ — ஆழ்வார்களும் பாரதியும்கர்மயோகி பதப்பகம் நூலாசியார் பதிப்பாளர் நெ.6, யாதவாள் - 2வது குறுக்குதெரு, விருகம் பாக்கம் சென்னை 600 092

6. தேசிக விநாயம் பிள்ளை.சி — மலரும் மாலையும் பாரி நிலையம் 59, பிராட்வே சென்னை – 1 முதற்பதிப்பு:30 நவம்பர்

| | |
|---|---|
| 7. இராமகிருட்டிணன்.ஆ | திருக்குறள்(உரைநயம்) குமரன் பதிப்பகம் 19, கண்ணதாசன் சாலை தி.நகர் , சென்னை – 600 017<br>முதற்பதிப்பு – ஜீன் 2011 |
| 8.தொல்காப்பியர் | தொல்காப்பியம் பொருளதிகாரம் (மூலமும் உரையும்) கதிர் பதிப்பகம் 93 , தெற்கு வீதி திருவையாறு – 613204 முதற்பதிப்பு – மார்ச் - 2018 |
| 9.பாரதியார் | பாரதியார் பாடல்கள் பூம்புகார் பிரசுரம் 15இ மன்னார்சாமி கோவில் தெரு சென்னை – 600 013 |
| 10.பண்டிதவித்துவான் தி.சங்குப் புலவர் | தமிழ் விடு தூது திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம் ,லிமிடெட் , |
| 11.மாணிக்கவாசகர் | திருவாசகம் தருமையாதீன வெளியீடு |

# NSR100
# KAMATCHI AMMAL
# FELLOWSHIP

## MA Students in Tamil

Fellowship



AWARDED TO :

**ஜெ ஸ்ரீசிந்து**

(பதிவு எண்: 20201005)

காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
திருச்சிராப்பள்ளி ~ 620 018

உதவித்தொகையும், நூலைத் தேர்ந்தெடுக்க ஆலோசனையும், தேர்ந்தெடுக்கப்பெற்ற நூலும் வழங்கப்பெற்றன.

ஆய்வேட்டின் தலைப்பு: ந சுப்புரெட்டியாரின் பார்வையில் குயில் பாட்டு

பேராசிரியரின் நூல்: *குயில் பாட்டு – ஒரு மதிப்பீடு*

பல்கலைக்கழகம்: பாரதிதாசன்

நெறியாளர்: முனைவர் ச இராமலட்சுமி

பட்டம்: முதுகலை (தமிழ்)

வருடம்: 2020–2022



*www.nasubbureddiar100.in*

# “ந.சுப்புரெட்டியாரின் பார்வையில் குயில்பாட்டு’’

திருச்சிராப்பள்ளி, காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
முதுகலைத் தமிழ் இலக்கியப் பட்டத்திற்காக அளிக்கப்பெறும் திட்டக்கட்டுரை.


**ஆய்வாளர்**

ஜெ.ஸ்ரீசிந்து

பதிவு எண் : 20201005

**நெறியாளர்**

**பேரா. முனைவர் ச.இராமலட்சுமி, எம்.ஏ.,எம்.பில்.,டி.ஜி.டி.,பி.எச்.டி**

துணைமுதல்வர் & தலைவர்,

தமிழாய்வுத்துறை

காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)






**காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

(தேசியத் தர நிர்ணய மறுமதிப்பீட்டில் மூன்றாம் சுற்று “A” தகுதி பெற்றது)

திருச்சிராப்பள்ளி - 620 018

மார்ச் - 2022

## நன்றியுரை

**‘‘ந.சுப்புரெட்டியார் பார்வையில் குயில் பாட்டு’’** என்ற தலைப்பில் இத்திட்டக் கட்டுரை எழுத வாய்ப்பளித்த காமாட்சி அம்மாள் அறக்கட்டளைக்கு எமது முதற்கண் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இத்திட்டக் கட்டுரை எழுத வாய்ப்பளித்த காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி) க்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். முதுகலைத் தமிழிலக்கியம் பயில எனக்கு வாய்ப்பளித்த காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி) க்கும் எனது நன்றியினை தெரிவித்துக் கொள்கின்றேன். எங்களை வழி நடத்திச் செல்லும் எம் கல்லூரியின் முதல்வர் முனைவர் வெ.சுஜதா அம்மா அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இவ்வாய்வுக் கட்டுரை சிறப்பாக அமைய வேண்டும் என்ற நோக்கத்தோடு ஆய்வுத் தொடர்பான அறிவுரைகளை வழங்கி என்னை வழி நடத்திச் சென்று கட்டுரையைச் செம்மைப்படுத்திய எம் நெறியாளர், கல்லூரின் துணைமுதல்வர் பேரா. முனைவர் ச.இராமலட்சுமி அம்மா அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றினை உரித்தாக்குகின்றேன்.

ந.சுப்புரெட்டியார் அவர்களின் படைப்பில் ஆய்வு செய்ய வாய்ப்பளித்த காமாட்சி அம்மாள் அறக்கட்டளைக்கும் உதவித்தொகை நல்கிய ந.சுப்புரெட்டியார் நூற்றாண்டு நினைவு அறக்கட்டளையினருக்கும் எம் நெஞ்சார்ந்த நன்றியினைச் சமர்ப்பிக்கின்றேன். ஆய்வு காலத்தில் எனக்கு

ஊக்கமளித்த தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் எம் நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

இவ்வாய்விற்குத் தேவையான புத்தகங்களை வழங்கிய கல்லூரி நூலகத்திற்கும் எம் துறை நூலகத்திற்கும் இவ்வாய்வேட்டினை தட்டச்சு செய்து கொடுத்த அண்ணி, கி.மனோன்மணி அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன். மற்றும் ஆய்வுக் காலத்தில் எனக்கு உதவியாக இருந்த எனது குடும்பத்தினர் அனைவருக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன், மற்றும் எனது ஆய்வை விரைவில் முடிக்க உற்சாகம் தந்த எனது நண்பர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**ஆய்வாளர் கையொப்பம்**

(ஜெ.ஸ்ரீசிந்து)

**பொருளடக்கம்**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

கு.எண் - குறள் எண்

ப.எண் - பக்க எண்

பா.எண் - பாடல் எண்

பா.அடி - பாடல் அடி

பக் - பக்கங்கள்

மேலது - மேலே கூறப்பட்டுள்ள நூல்

# முன்னுரை

பாரதி தனக்குள்ளேயே ஒரு தீப்பொறியைச் சுமந்து இந்த பூமிக்கு வந்த சூரியன். எனவேதான் இவரது கவிதைக் கதிர்கள் கும்பகர்ணனை எழுப்பிய கம்பனின் உலக்கை வரிகளாய் இந்த சமுதாயத்தை தட்டி எழுப்பிட முனைந்தது. பாரதியின் புகழ் கொடியில் நம் மூவர்ணக்கொடி போன்று பட்டொளி வீசிப் பறந்தவை கண்ணன் பாட்டு, குயில் பாட்டு, பாஞ்சாலி சபதம் ஆகிய நூல்களாகும்.

இவற்றுள் குயில் பாட்டு 745 அகவற்பாவால் செய்யப்பட்ட ஒரு காவியம், இந்நூலில் குயிலினை அறிமுகப்படுத்துவதாக 34 அடிகளும், குயிலின் முன் ஜென்மக் கதையாக 262 வரிகளும் கொண்டமைந்த ஓர் அழகிய கற்பனைக் காவியம் இது. இதில் இரண்டு பிறவிகளில் தொடர்ந்த ஒரு பெண்ணின் காதலைமையப்படுத்தி மனிதன், குயில், குரங்கு, எருது என்ற நிலையில் காதல் விரிந்து நின்று நடைபெறுவதாக அமைந்து படிப்பவர் தமக்கு இன்சுவை ஊட்டும் ஓர் உன்னத காவியம் குயில்பாட்டு என்றால் மிகையாகாது.

ந.சுப்புரெட்டியார் 27.08.1916 அன்று பிறந்தார். தமிழ்நாடு, திருச்சி மாவட்டம், பெரகம்பி என்ற ஊரில் எளிய வேளாண்மைக் குடும்பத்தில் பிறந்தார். திருச்சி சூசையப்பர் கல்லூரியில் வேதியியலில் இளங்கலைப் பட்டமும், சென்னை பல்கலைக் கழகத்தில் முதுகலைப் பட்டமும், திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டமும் பெற்றார்.

ந.சுப்பரெட்டியார் எழுதியுள்ள 135 நூல்களையும் தமிழக அரசு நாட்டுடைமை ஆக்கியுள்ளது. திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் 17 ஆண்டுகள் தமிழ்த்துறையில் பணியாற்றினார்.

திரு.வி.க. விருது

திருக்குறள் விருது

டாக்டர் இராதாகிருஷ்ணன் விருது

கலைமாமணி விருது, ஆகிய விருதுகளைப் பெற்றுள்ளார்.

இனிமை, எளிமை, தெளிவு இவர் தம் நூல்களின் தனிச்சிறப்பியல்புகள் ஆகும். ந.சுப்புரெட்டியாரின் மதிப்பீட்டை எனது திட்டக் கட்டுரையாக ஆய்வு செய்துள்ளேன். இதில் குயிலின் உணர்வுகளைப் பிரதிபலிப்பதே முதன்மையாக எடுத்தாளப்பட்டுள்ளது.

**ஆய்வுத்தலைப்பு**

''ந.சுப்புரெட்டியாரின் பார்வையில் குயில் பாட்டு''தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்**

ந.சுப்புரெட்டியாரது குயில் பாட்டு என்னும் நூல் வாயிலாக குயில்பாட்டுப் பற்றிய சுப்புரெட்டியாரின் கருத்துக்களை ஆய்வதே இவ்ஆய்வின் நோக்கம்.

**ஆய்வு கருதுகோள்**

காதலும் இசையும் மனிதர்களை மட்டுமல்ல குயிலையும் ஈர்த்துள்ளது என்பதை ந.சுப்புரெட்டியார் பார்வையில் நிறுவுவதே ஆய்வின் கருதுகோளாகும்

**ஆய்வு எல்லை**

ந.சுப்புரெட்டியாரின் 'குயில் பாட்டு ஒரு மதிப்பீடு' என்னும் நூல் இவ்வாய்வு எல்லையாக அமைகின்றது.

**ஆய்வு அணுகுமுறை**

இவ் ஆய்வேடானது விளக்கமுறை ஆய்வு, பகுப்புமுறை ஆய்வு, தொகுப்புமுறை ஆய்வு என்ற மூன்று ஆய்வு முறைகளைப் பின்பற்றி அமைந்துள்ளது.

**ஆய்வேட்டின் அமைப்பு**

இந்த ஆய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன.

**அவை**

இயல் 1: குயிலும் காதலும்

இயல் 2: இசையும் நயமும்

இயல் 3: கவிஞரும் காதலும்

இயல் 4: குயில்பாட்டில் உள்ளுறை

என நான்கு இயல்களாக அமைகின்றன.

**இயல் ஒன்று**

சங்க இலக்கிய காதல் மரபு, குயிலின் நாணம், சேர மன்னனின் காதல் மொழிகள், குயில் பற்றிய முனிவரின் கருத்து போன்ற தகவல்கள் முதல் இயலில் இடம் பெற்றுள்ளன.

**இயல் இரண்டு**

'குயில்பாட்டு' இனிய மாஞ்சோலையில் அழகிய பெண்குயில் ஒன்று பாடுவதாக கவிதை அமைக்கப்படுகின்றது. இசைக்கு மயங்கிய கவிஞர் என்பதாகக் கதை தொடர்கின்றது. இவற்றுள் இசையின் இனிமை பற்றியும் இசைத் தோன்றும் இடங்கள் பற்றியும் இரண்டாம் இயலில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

**இயல் மூன்று**

அக இலக்கிய பாடல்கள் எல்லா உயிர்களிடத்தும் அன்பு கொள்வதை வலியுறுகின்றன. கவிஞர் குயிலிடத்தும் குயில், காளை, குரங்கு போன்ற உயிர்கள் மீது கொண்ட காதலினையும் மூன்றாம் இயல் எடுத்தியம்புகின்றது.

**இயல் நான்கு**

உள்ளுறை தத்துவமும், மாயைக் குறித்த பாரதியார் பாடல்களும், சித்தாந்தச் செய்திகளும் கற்பனை வீச்சுகளும், ஒளி வடிவமான இறைவனின் தன்மைகளும், பற்றி நான்காம் இயலில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**முதன்மை ஆதாரம்**

'குயில் பாட்டு ஒரு மதிப்பீடு' என்ற ந.சுப்புரெட்டியாரின் நூல் முதன்மை ஆதாரமாகக் கையாளப்பட்டுள்ளது.

**துணைமை ஆதாரம்**

குயில் பாட்டு (மூல உரை), பாரதியாரின் நூல்கள், சங்க இலக்கிய நூல்கள், கட்டுரை நூல்கள் போன்றவை துணைமை ஆதாரமாக பயன்படுத்தப்பட்டுள்ளன.

# இயல் - 1

# குயிலும் காதலும்

**முன்னுரை**

காதல் மரபு என்பது சங்க காலம் முதல் இக்கால இலக்கியங்கள் வரை மிகச் சிறந்த பண்பாடாக போற்றப்படுகின்றது. தமிழர்களின் இரு கண்களாக அக இலக்கியங்களும், புற இலக்கியங்களும் திகழ்கின்றன. மானுட காதல் போல் மற்ற உயிர்களிடத்தும் அன்பு உணர்வு மேலோங்கி இருந்ததை தமிழ் இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன. அந்த வகையில் பாரதியின் குயில் பாட்டில் குயிலும் காதலும் என்னும் பொருண்மையில் ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

**சங்க இலக்கிய காதல் மரபு**

காதல் என்னும் செய்தி சங்க காலத்தில் இருந்தே இலக்கிய மரபாக கையாளப்படுகிறது. அகநானூறு கலித்தொகை, பெருங்கதை, சீவக சிந்தாமணி, கம்பராமாயணம் ஆகியவற்றில் இலக்கியத் தொடர்புடன் காதல் மரபு உள்ளது என்பதை,

**“யாயும் ஞாயும் யாரா கியரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறை கேளீர்**
**செம்புலப் பெயல்நீர் போல**
**அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே”**[1]

என்ற குறுந்தொகைப் பாடல் வழி, உறவுத் தொடர்பும் நட்புத் தொடர்பும் இல்லாத இரண்டு நெஞ்சங்கள் இயல்பாகவே அன்பு நிரம்பியதால் இந்த அன்பு பலப்பல பிறப்புகளில் பயின்று வந்து உள்ளதை இப்பாடல் வாயிலாக உணரமுடிகின்றது.

**குயில் பாட்டில் காதல்**

காதல் மரபினை பாரதியார் குயில் பாட்டில் அற்புதமாக கையாண்டுள்ளார். குயில் பாட்டின் கதை விந்தையானது. புதுவை நகரின் மேற்கில் ஒரு மாஞ்சோலை. அங்கு வேடர் வாராத நாளில் விந்தை குயிலொன்று, காதலின் உணர்வு மிகுதியால் துள்ளும் இன்பமும் துயரும் கலந்த குரலில் குயில் பாடியதை,

> **"காதல் காதல் காதல்**
> **காதல் போயின் காதல் போயின்**
> **சாதல் சாதல் சாதல்"**[2]

என்ற இவ்வரிகளின் வாயிலாகக் காணமுடிகின்றது.

**குயிலின் நாணம்**

மங்கைகளுக்கு மட்டுமே உரிய குணமாகக் கருதப்படும் நாணத்தை குயில்களும் கடைப்பிடிக்கின்றன என்பதை,

> **"பூரிப்புக் கொண்டாய் புளகம் நீ எய்துவிட்டாய்**
> **வாரிப் பெருந்திரைபோல் வந்த மகிழ்ச்சியிலே**
> **நாணந் தவிர்ந்தாய் நனவே தவிர்ந்தவளாய்**
> **காணத் தெவிட்டாதோர் இன்பக் கனவிலே"**[3]

என்ற பாடலின் வாயிலாக முனிவர் கூறுவதன் வழி உணரமுடிகின்றது.

**இலக்கிய மரபில் காதல்**

களவுப் புணர்ச்சி நடைபெற்ற பின்னர், தலைவன் நின்னைப் பிரியேன் என்று தலைவியிடம் உரைப்பதென்பது வழி வழியாக வரும் காதல் இலக்கிய மரபு. இதனையே,

> **"மன்ற மராஅத்த பேஎதிர் கடவுள்**
> **கொடியோர்த் தெறூஉ மென்ப யாவதும்**

**கொடிய ரல்லரெங் குன்றுகெழ நாடர்**

**பசைஇப் பசந்தன்று நுதலே"**[4]

என்ற குறுந்தொகைப் பாடலின் வாயிலாக அறிய முடிகிறது.

**குயிலின் கதை**

குயில் தன் கதையைக் கவிஞரிடம் எனக்கான அவமானத்தையும் துன்பத்தையும் உங்களிடம் சொல்கின்றேன். பெண்ணான என் மீது இரக்கம் கொண்டு என்னுடைய பிழைகளைப் பொறுத்துக் கொள்ளும்படி வேண்டிக் கொள்கின்றேன் என்று தன் வரலாற்றை உரைப்பதையும், குயில் குயிலியாக மாறியத் தருணத்தையும்,

**"வேதனையும் நாணும் மிகுந்த குரலினிலே**

**கானக்குயிலி கதை சொல்ல லாயிற்று**

**மானக் குலையும் வருத்தமும் நான் பார்க்காமல்**

**உண்மை முழுவதும் உரைத்திடுவேன் மேற்குலத்தீர்**

**பெண்மைக் கிரங்கிப் பிழை பொறுத்தல் கேட்கின்றேன்"**[5]

என்னும் இப்பாடலின் வாயிலாக உணரமுடிகின்றது.

**குயில் பிறப்பின் தன்மை**

குயில் தன் பிறப்பின் தன்மையை கூறலாயிற்று. பெருத்த கனமான வடிவமுடைய உடல் வலிமையும், கம்பீரமான நடையும் இல்லாத சிறப்பற்ற மிகச் சிறிய பறவை சாதியிலே நான் பிறந்தேன். இரவு பகல் என்று பாராது வயிற்றுக்கான உணவினைத் தேடி அலையும் நிலை என்னுடையது என்ற தன் வாழ்வியலை எண்ணிப் புலம்பும் சூழலை,

**"பார வடிவம் பயிலும் உடல் வலியும்**

**தீர நடையும் சிறப்புமே இல்லாத**

**சல்லித் துளிப்பறவைச் சாதியிலே நான் பிறந்தேன்**

**அல்லும் பகலும் நிதம் அற்ப வயிற்றினுக்கே**

**காடெல்லாம் சுற்றிவந்து காற்றிலே எற்றுண்டு"**[6]

என்ற இப்பாடல் புலப்படுத்துகின்றது.

என் உயிரே நான் சொல்வதை அருள் கூர்ந்து கேட்க வேண்டும். சோலையில் ஆழ்ந்த சிந்தனையோடு நான் அமர்ந்திருந்த நேரத்தில் முனிவர் ஒருவர் வருகைப் புரிந்தார். அவர் திருவடியில் வீழ்ந்து வணங்கினேன் என்பதை,

**"தேவனே என்னருமைச் செல்வமே என்னுயிரே**
**போவதன் முன்னொன்று புகல்வதைக் கேட்டருள்வீர்**
**முன்னம் ஒருநாள் முடிநீள் பொதிய மலை**
**தன்னருகே நானும் தனியே ஓர் சோலைதனில்**
**மாங்கிளையில் ஏதோ மனத்திலெண்ணி வீற்றிருந்தேன்"**[7]

என்னும் பாடலில் குயில் தன் ஆதங்கத்தை வெளிப்படுத்த ஆட்களின்றி தவிக்கும் சூழல் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**குயிலும் முனிவரும்**

குயில் முனிவரிடம் வேதங்களை உணர்ந்த பெருமானே, குயிலினத்தில் என் இயல்பு மாறுபட்டது உலக உயிர்கள் பேசும் எல்லா மொழியும் புரிகிறது மனிதர்களைப் போன்ற மனநிலை எனக்கு உள்ளது இவை ஏன் என்று அறிய முடியவில்லை என்பதை,

**"வேதமுனிவரே! மேதினியில் கீழ்ப்பறவைச்**
**சாதியிலே நான் பிறந்தேன், சாதிக்குயில்களைப்போல்**
**இல்லாமல் என்றன் இயற்கை பிறிதாகி**
**எல்லார் மொழியும் எனக்கு விளங்குவதேன்?"**[8]

என்ற பாடலின் வாயிலாக குயில் முனிவரிடம் இதன் காரணத்தை அறியும் படி எனக்கு எடுத்துக் கூறுங்கள் என்று பணிவுடன் கேட்பதை காணமுடிகிறது.

**முனிவரின் கூற்று**

குயிலாகப் பிறந்ததை சாபமாக எண்ணி வருந்தும் குயிலிடம் அதன் முற்பிறப்புத் தகவலை முனிவர் கூற்றின் வழி அறிந்து அகமகிழ்வு அடைந்தமையை,

> **"குயிலே! கேள் முற்பிறப்பில்**
> **வீறுடை வெந்தொழிலார் வேடர் குலத்தலைவன்**
> **வீர முருகன் எனும் வேடன் மகளாகச்**
> **சேரவள நாட்டில் வளர்ந்தாய் நீ"[9]**

என்ற பாடலின் வாயிலாக உணரமுடிகின்றது.

**வேடர் குல அழகி**

இளமை அழகு பொங்கி நின்ற உன் அழகிற்கு இந்தச் சேர, சோழ, பாண்டிய நாடுகளில் உள்ளவர்கள் எவரும் இணையாக மாட்டார்கள் என்று சுட்டப்படுகின்றது. பெருமை கொண்டு நிற்கும் அளவிற்கு உன்னுடைய அழகு அனைவரையும் வியக்கும் தன்மைக் கொண்டது என்பதை,

> **"நல்லிளமை**
> **முந்தும் அழகினிலே மூன்று தமிழ் நாட்டில்**
> **யாரும் நினக்கோர் இணையில்லை என்றிடவே**
> **சீருயர நின்றாய்"[10]**

என்ற பாடலின் வாயிலாக குயில் வேடர் குலத்தில் பிறந்த அழகி என்பதை உணரமுடிகிறது.

**மாடனும் குயிலும்**

வளம் செழித்தக் காட்டினிலே 'மாடன்' என்ற வேடவன் உன் அழகில் மயங்கி காதல் கொள்கின்றான் மாடன் நீண்ட நாட்களாக உன் மீது கொண்ட அன்பால் திருமணம் செய்ய விரும்பி புதிய தேனினையும் அழகிய

மலர்களையும் தினம் தினம் உனக்கான பரிசுகளாகக் கொடுத்து உன் நினைவினிலேயே எப்போதும் மனம் வாடி நின்றான் என்பதை,

**"செழுங்கான் வேடரில் உன்**
**மாமன் மகடினொருவன் மாடன்என்னும் பெயர் கொண்டான்**
**காமன் கணைக்க இரையாய் நின்னழகைக் கண்டுருகி**
**நின்னை மணக்க நெடுநாள் விரும்பி அவன்**
**பொன்னை மலரைப் புதுதேனைக் கொண்டு**
**உனக்கு நித்தம் கொடுத்து நினைவெலாம் நீயாகச் "**[11]

என்னும் இப்பாடல் உணர்த்துவதோடு மட்டுமல்லாமல், உன் மீது கொண்ட காதலால் படுகின்ற மன வருத்தம் சகிக்க முடியாமல் கருணையினால் அவனை ஏற்றுக் கொள்கிறாய் என்பதையும் உணர்த்தியுள்ளது..

**தந்தையும் நெட்டைக்குரங்கனும்**

குயிலின் மிகுந்த அழகின் பெரும் புகழ் உலகில் எங்கும் பரவத் தொடங்கி நெட்டைக் குரங்கன் குயிலின் மீது விருப்பம் கொண்டு குயிலின் தந்தையிடம் பெண் வேண்டிக் கேட்கிறான். தந்தையும் மிகவும் மகிழ்ந்து திருமணத்திற்கு ஒப்பு கொள்கிறார் என்பதை,

**"ஆயிடை நின்றன் அழகின் பெருங்கீர்த்தி**
**தேயமெங்கும் தான் பரவத் தேன்மலையின் சார்பினில் ஓர்**
**வேடர்கோன் செல்வமும் நல் வீரமுமே தானுடையான்**
**நாடனைத்தும் அஞ்சி நடுங்கும் செயலுடையான்"**[12]

என்ற பாடலின் வாயிலாக மொட்டைப் புலியனின் மகனான நெட்டைக்குரங்கனுக்கு திருமணம் செய்து வைக்க குயிலின் தந்தை உடன் பட்டார் என்பதை உணர்த்துகின்றது.

**மாடனின் கோபம்**

நெட்டைக் குரங்கனுக்கு திருமணம் செய்து வைக்க குயிலின் தந்தை ஒப்புக்கொண்டார் என்பதை அறிந்து மாடன் கோபம் கொள்கிறான். பன்னிரண்டு நாட்களில் மணம் செய்ய ஏற்பாடு செய்து நிச்சயம் செய்தார். ஆனால் இன்று உன்னை மற்றொருவன் மணந்து கொள்ளப் போகிறான் என்ற செய்தியைக் கேட்டு மாடனின் மனம் கோபத்தில் எரிந்ததையும், குயிலிடம் கோப மொழிகளை உதிர்த்ததையும்,

> **“பன்னிரண்டு நாட்களிலே பாவையுனைத் தேன் மலையில்**
> **அன்னியன் கொண்டு ஏகிடுவான் என்னும் அது கேட்டு,**
> **மாடன் மனம் புகைந்து மற்றைநாள் உன்னை வந்து**
> **நாடிச் சினத்துடனே நானா மொழி கூற”**[13]

என்ற இவ்வரிகளின் வாயிலாக உணரமுடிகின்றது.

**குயிலும் மாடனும்**

குயில் மாடன் பேசியதை கேட்டு உன் கோபத்தை விட்டு அமைதிகொள். மாடனே நான் தந்தையின் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு நெட்டைக் குரங்கனைத் திருமணம் செய்து கொண்டாலும் நெடுநாள் வாழ மாட்டேன் மர்மமான செயல்கள் மூலம் பிரிவை உண்டாக்கி தாய் வீட்டிற்கு வந்திடுவேன் என்பதை,

> **“நீயும் அவனிடத்தே நீண்ட கருணையினால்**
> **காயும் சினந்தவிர்ப்பாய்! மாடா! கடுமையினால்**
> **நெட்டைக் குரங்கனுக்குப் பெண்பாக நேர்ந்தாலும்**
> **கட்டுப்படி அவர்தம் காவலிற்போய் வாழ்ந்தாலும்**
> **மாதம் ஒரு மூன்றில் மர்மம் செய்து**
> **பேதம் விளைவித்துப் பின்னங்கே வந்திடுவேன”**[14]

இப்பாடலின் வாயிலாக அடுத்த எட்டு மாதங்களில் கண்டிப்பாக உன்னையே என் மணவாளனாக் ஏற்றுக் கொள்வேன். என் வார்த்தைகளை

நம்புவாயாக மாடனே என்று குயிலி கூறினாள். காதலியான குயிலி அவன் மீது கொண்ட காதலால் அல்ல இரக்கத்தினால் தான் சொன்னாய் என்ற இப்பாடலின் வாயிலாக அறிந்துக்கொள்ள முடிகிறது.

**சேரமன்னனின் காதல்**

பெண்மைத் தன்மையோடு மானிடர் இனத்திலே வேடனின் மகளாக முன் பிறவியில் இருந்தாலும் அனைவரும் உன்னைச் செல்லமா சின்னக்குயிலி என்றே அழைப்பார்கள். இப்படியே சில தினங்கள் சென்ற பின்பு நீயும் உன் தோழியரும் மாலை வேளையில் காட்டில் விளையாடிக் கொண்டிருந்தீர்கள். அப்போது வேட்டையாட காட்டிற்கு வந்த தன் துணையாக வந்தவர்களை பிரிந்து மானை துரத்திய படி நீங்கள் விளையாடும் இடம் வந்தான் அப்போது உன் அழகில் மயங்கினான் என்பதை,

> **"நின்னொத்த தோழியரும் நீயும் ஒரு மாலையிலே**
> **மின்னற் கொடிகள் விளையாடுதல் போலே**
> **காட்டினிடையே களித்தாடி நிற்கையிலே,**
> **வேட்டைக் கெனவந்தான் வெல்வேந்தன் சேரமான் "[15]**

என்ற பாடலின் வாயிலாக அழகில் மயங்கியதனால் உன்மேல் ஏற்பட்ட காதலினால் உன்னை அவனது மனைவியாக திருமணம் செய்ய முடிவு செய்தான் என்பதை இப்பாடல் எடுத்து உரைக்கின்றது.

**சேர இளவலின் காதல் மொழிகள்**

நான் வஞ்சியின் மன்னனின் மகன் வேடுவரின் தவப்புதல்வியே, மற்றவர்கள் வியப்பு கொள்ளும் படியான அழகை உடையவளே நான் ஆணாகப் பிறந்ததின் பயனை உன்னைக் கண்டு காதல் கொண்ட நாளான இன்று அடைந்தேன் என்பதை,

> **"ஆங்கவனும் நின்னிடத்தே**
> **வஞ்சித் தலைவன் மகன்யான் என வுரைத்து**
> **வேடர் தவமகளே விந்தை யழகுடையாய்,**

**ஆடவனாய்த் தோன்றியதன் பயனை இன்று பெற்றேன்**

**கண்டதுமே நின்மிசையான் காதல் கொண்டேன் என் றிசைக்க”**[16]

என்ற பாடலின் வாயிலாக சேர இளவன் காதல் கொண்டதை குயிலிடம் காதல் மொழி பேசியதை அறியமுடிகிறது.

**குயிலியின் மொழிகள்**

சேர இளவலின் மீது காதல் கொண்ட குயிலி தனது காதலை மறைத்து பேசுகிறாள் தலைவனே! உங்கள் அரண்மனையில் ஐந்நூறுக்கும் மேலான பணி பெண்கள் அழகிலும் அறிவிலும் ஆற்றல் பெற்றவர்கள் என்று கேட்டிருக்கின்றேன். ஆதலால் அவர்களைச் சேர்ந்து அன்புடன் வாழ்வீர்களாக என்பதை,

**“மண்டு பெருங்காதல் மனத்தடக்கி நீ மொழிவாய்;**

**ஐயனே! உங்கள் அரண்மனையில் ஐந்நூறு**

**தையலருண்டாம், அழகில் தன்னிகரில் லாதவராம்;**

**கல்வி தெரிந்தவராம்ளூ கல்லுருகப் பாடுவராம்;**

**அன்னவரைச் சேர்ந்தேநீர் அன்புடனே வாழ்ந்திருப்பீர்”** [17]

என்ற பாடலின் வழி ஒரு மலையில் வாழும் வேடவனின் மகள் என்னையா பெண் எடுக்க முன் வருவீர்கள் என்று இப்பாடலின் வாயிலாக குயில் சேர இளவனுக்கு பதில் உரைப்பதை அறியமுடிகின்றது.

**சேரனின் இப்பிறவி**

குயிலியின் காதல் இளவரசனான சேரன் இப்பிறவியில் தொண்டை வள நாட்டில் கடற்கரைக்கு அருகில் ஒரு நகரத்தில் பிறந்து வளர்கின்றான். அவன் உன்னை ஒரு காட்டினில் கண்டு நீ இனிமையாகப் பாடும் பாடல்களைக் கேட்டிடுவான் என்பதை,

**“வழி நின்றன் மன்னவனும் தொண்டை வளநாட்டில்**

**ஆழிக்கரையின் அருகேயோர் பட்டணத்தில்**

**மானிடனாத் தோன்றி வளருகின்றான்ளூ நின்னையொரு**

**கானிடத்தே காண்பான்ளூ கனிந்து நீ பாடுநல்ல**

**பாட்டினைத்தான் கேட்பான் "[18]**

என்ற பாடலின் வாயிலாக பழம் பிறப்பின் வினைத் தொடர மீண்டும் உன்மேல் காதல் கொண்டிடுவான் என்று முனிவர் கூறுவதைக் காண முடிகின்றது.

**குயிலியின் அய்யம்**

குயில் முனிவரிடம் நானோ குயிலின் உருவில் உள்ளேன் அவரோ உயர்ந்த மானிடர் உருவில் உள்ளார். எங்கள் காதல் கை கூடினாலும் எங்களின் திருமணம் நடக்க இயலாது அல்லவா? என்பதை

**"குயிலுருவம் கொண்டேன்யான் கோமானோ மேன்மை**

**பயலு மனிதவுருப் பற்றி நின்றான் எம்முள்ளே**

**காதலிதைந் தாலும் கடி மணந்தான் கூடாதாம்**

**சாதற் பொழுதினிலே தார்வேந்தன் கூறிய சொல்**

**பொய்யாய் முடியாதோ? என்றிசைத்தேன்"[19]**

என்ற பாடலின் வழி குயிலுக்கும் மானிட உருவில் உள்ள சேர இளவரசனுக்கும் திருமணம் நடக்க இயலாது என்பதை இவ்வடியின் வாயிலாக உணரமுடிகிறது.

**சேரமன்னன் சின்ன குயிலி**

சேர மன்னன் சின்ன குயிலிடம் வேத முறைப்படி திருமணம் செய்து கொள்வதாக வாக்களித்தான் என்பதை,

**"வேத நெறியில் விவாகமுறைச் செய்துக் கொள்வேன்**

**மாதரசே என்று வலகை தட்டி வாக்களித்தான்"[20]**

என்ற இவ்வரியிகள் சுட்டிக்காட்டியுள்ளதன் வழி அறியமுடிகின்றகிறது.

**குயிலின் உண்மை நிலை**

முனிவர் குயிலை பார்த்து புன்னகையுடன் பேதைப் பெண்ணே, இப்பிறவியிலும் விந்திய மலைச் சாரலில் உள்ள வேடனின் மகளாக மானிட உருவம் கொண்டுதான் நீ பிறந்தாய் ஆனால் விதியால் மாடன் உன்னைக் கண்டு இந்த பிறவியில் மன்னனை கணவனாகச் சேரப்போகின்ற நிலையை அறிந்து உன்னை மாயம் செய்து குயிலாக மாற்றினார் அதோடு உன்னை கண்காணிக்க வேண்டி நீ செல்லும் திசையெல்லாம் தொடர்ந்தனர் என்பதை,

> **"ஐயர் உரைப்பார் 'அடிபேதாய்' இப்பிறவி**
> **தன்னிலும் நீ விந்தகிரிச் சார்பினிலோர் வேடனுக்குக்**
> **கன்னியெனத் தான் பிறந்தாய் கர்ம வசத்தினால்**
> **மாடன் குரங்கன் இருவருமே வன்பேயாக்**
> **காடுமலை சுற்றி வருகையிலே கண்டுகொண்டார்"** [21]

இவ்வாறு குயிலின் உண்மை நிலை முனிவர் குயிலுக்கு எடுத்துக்காட்டியதை இவ்வரியின் வாயிலாக உணரமுடிகிறது.

**குயிலின் மனநிலை**

குயில் இறந்தவர்கள் இரக்கமின்றி வாழ்பவர்களை துன்புறுத்துதல் அதர்மம் என்று உணர மாட்டார்களா? பேய்கள் என்னை உருமாற்றியதோடு மட்டுமின்றி என் பழம்பிறப்பினையும் மறைத்து என்னைத் துன்பப்படுத்துகின்றன என்பதை,

> **"விதியே இறந்தவர்தாம் வாழ்வாரை**
> **நின்று துயருறுத்தல் நீதியோ? பேய்களெனைப்**
> **பேதைப் படுத்திப் பிறப்பை மறப்புறுத்தி**
> **வாதைப்படுத்தி வருமாயில் யானெனது**
> **காதலனைக் காணுங்கால், காய் சினத்தால் ஏதேனும்**
> **தீதிழைத்தால் என் செய்வேன்? "** [22]

என்ற அடியின் வாயிலாக முனிவரிடம் இதற்கு ஏதாவது மாற்று வழியிருந்தால் உரைத்திடுங்கள் என்று முனிவரிடம் குயில் கேட்பதை அறியமுடிகின்றது.

**முனிவரின் உரையும் பிரிவும்**

தெளிந்த அறிவுடைய முனிவர் பெண் குயிலே வளம்மிக்க தொண்டை நாட்டில் உள்ள சோலை ஒன்றில் அரசமகன் உன்னைக்கண்டு காதல் கொண்டு நிற்கும் வேளையில் மாடன் பல்வேறு விதமான மாயங்கள் செய்து இளவரசன் உன் மீது கோபம் கொள்வதையும் உன்னை துரோகி என்று எண்ணி கைவிட முடிவு செய்வதை நீயே உணர்வாய் என்று குயிலுக்கு எடுத்துக் கூறுவதை,

> **“தேற்றமுறு மாமுனிவர் செப்புகின்றார்ளூ பெண் குயிலே**
> **தொண்டை வளநாட்டிலோர் சோலையிலே வேந்தன் மகன்**
> **கண்டுனது பாட்டில் கருத்திளகிக் காதல் கொண்டு**
> **நேசம் மிகுதியுற்று நிற்கையிலே, பேயிரண்டும்**
> **மோசம் மிகுந்த முழுமாயச் செய்கை பல**
> **செய்துபல பொய்த்தோற்றம் காட்டித் திறல்வேந்தன்”**[23]

என்ற பாடலின் வாயிலாக முனிவர் எனக்கு மாலை பூசையும் தியானமும் செய்ய வேண்டிய காலம் வந்தது என்று கூறி காற்றில் மறைந்தார் முனிவர் என்பதை இப்பாடல் தெளிவுப்படுத்துகின்றது.

**முடிவுரை**

குயிலின் காதல் கதை, முற்பிறப்பு வரலாறு, சேரன், மாடன் மற்றும் நெட்டைக்குரங்கன் போன்றோரின் காதல் கவிநயம், முனிவர் குயிலுக்கு உண்மை நிலை எடுத்துக் கூறுதல் ஆகியவை பற்றியும் குயிலும் காதலும் இவ்வியலில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. குறுந்தொகை மூலமும் உரையும் - ப.எ. - 67
2. ந. சுப்புரெட்டியார் குயில்பாட்டு - ப.எ. - 3
3. மேலது - ப.எ. – 35
4. குறுந்தொகை மூலமும் உரையும் - ப.எ. - 123
5. மேலது - ப.எ. – 15
6. மேலது - ப.எ. – 39
7. மேலது - ப.எ. – 54
8. மேலது - ப.எ. – 55
9. மேலது - ப.எ. – 55
10. மேலது - ப.எ. – 55
11. மேலது - ப.எ. – 56
12. மேலது - ப.எ. – 57
13. மேலது - ப.எ. – 58
14. மேலது - ப.எ. – 58
15. ந. சுப்புரெட்டியார் குயில்பாட்டு - ப.எ. - 31
16. குயில்பாட்டு மூலமும் உரையும் - ப.எ. - 61
17. ந. சுப்புரெட்டியார் குயில்பாட்டு - ப.எ. - 17
18. குயில்பாட்டு மூலமும் உரையும் - ப.எ. - 70
19. மேலது - ப.எ. – 70
20. ந. சுப்புரெட்டியார் குயில்பாட்டு - ப.எ. - 36
21. குயில்பாட்டு மூலமும் உரையும் - ப.எ. - 71
22. மேலது - ப.எ. – 72
23. மேலது - ப.எ. – 72

# இயல் 2

# இசையும் நயமும்

**முன்னுரை**

இசை என்பது ஒழுங்கு படுத்தப்பட்ட, கட்டுப்படுத்தப்பட்ட, அழகான ஒலி. இசை என்ற சொல்லுக்கு இசைய வைப்பது என்று பொருள் உண்டு. அனைத்து வகை உயிரினங்களையும் இசைய வைப்பதே இசை. இசையை சங்கீதம் என்றும் அழைப்பர். சங்கீதம் என்பது செவிக்கு இன்பம் தரும் ஒலி. அந்த வகையில் குயில் பாட்டில் வரும் இசை நயத்தினை ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

**"இனிய மாஞ்சோலையில் அழகிய**

**பெண்குயில் ஒன்று பாடுவதாக அமைகின்றது"**[1]

என்ற வரிகள் குயிலின் இசையை பற்றியச் செய்தியை உணர்த்துகின்றது.

**பாட்டில் இசைக் கவர்ச்சி**

இசைக்கு மயங்காத உயிர்கள் இல்லை என்பது அனைவரும் அறிந்ததே அது நம்மை மறக்கச் செய்யும் பேராற்றல் உடையது என்பதனை தற்கால புதுக்கவிஞர்,

**இசை**

**ஒழுங்கு படுத்தப்பட்ட ஓசை**

**அதே சமயத்தில்**

**ஆத்மாவோடு பேசுகிற**

**அந்தரங்க பாஷை**

**இசை**

**காதுகளுக்குப்**

**போர்த்தி விடுகின்ற**

**கௌரவப் பொன்னாடை**

**இசையை**

**பூமியில் முதன் முதலாகக்**

**கண்டுபிடித்த விஞ்ஞானி**

**காற்றுத் தான்**

**அந்தக் காற்று**

**கவனிப்பாரற்றுக்**

**காட்டில் வளர்ந்த**

**மூங்கிலைக் கூட நாம்**

**முத்தமிட வைத்தது!"**[2]

என்ற புதுக்கவிதையின் வாயிலாக இசையை ஓசை, பாஷை, காற்று என பட்டியலிட்டுச் சுட்டிக்காட்டியுள்ளார்.

**இசைக் சங்கமம்**

நாதம், தாளம் பண் என்று இசையோடு தொடர்புப்படுத்திப் பாடுகின்றார் பாரதி. அடிக்கடி நாம் கேட்ட வார்த்தைகள் ஆனாலும் இவை என்னென்னத் தன்மைகளோடு பயன்படுத்தப்படுகின்றன என்பதை உணர்ந்த பாரதி இச்சொற்களைத் தனித்தனியே படைத்துள்ளார் என்பதை,

**"நாதம் நாதம் நாதம்**

**நாதத் தேயோர் நலிவுண் டாயின்**

**சேதம் சேதம் சேதம்"**[3]

என்று நாதத்தின் சிறப்பையும் அதற்கு இடையூறு ஏற்பட்டால் சேதம் என்றும் அதைப்போன்றே,

**"தாளம், தாளம், தாளம்**

**தாளத் திற்கோர் தடையுண் டாயின்,**

**கூளம், கூளம், கூளம்"**[4]

இதில் தாளத்திற்கு தடை ஏற்பட்டால் கூளம் என்பர்.

**“பண்ணே, பண்ணே, பண்ணே**

**பண்ணிற்கேயோர் பழுதுண்பாயின்**

**மண்ணே, மண்ணே, மண்ணே”[5]**

இப்பாடலின் வாயிலாக இசைப் பாடல் என்பது ராகம் - தாளம் - பல்லவி கொண்டு அமைவது என்பதை அறிய முடிகின்றது.

**இசைத் தோன்றும் இடங்கள்**

காட்டில் உள்ள பறவைகளின் கலகலப்பான ஒலியினிலும், மரங்களில் காற்று மோதியதனால் தோன்றுகின்ற இனிய சலசல வென்ற இசையிலும் கொட்டும் அருவியிலும் ஓடும் ஆற்றினில் தோன்றும் ஒலிகளிலும் நீலநிற தன்மை கொண்ட கடல் அலைகளின் எழுச்சியினால் எப்போதும் உள்ளதை.

**“கானப் பறவை கலகலெனும் ஓசையிலும்**

**காற்று மரங்களிடைக் காட்டும் இசைகளிலும்**

**ஆற்றுநீ ரோசை அருவி யொலியினிலும்**

**நீலப் பெருங்கடலெந் நேரமுமே தானிசைக்கும்”[6]**

ஒலிக்கும் ஒலியினிலும் மானிட இனத்தில் தோன்றிய பெண்கள் மற்றவர் மனமும் உடலும் உருகும் படியாகப் பாடும் இனிய தேன் போன்ற பாடல் வரிகளிலும் ஏற்றம் இறைப்பவர்களின் ஏற்றப் பாடல்களிலும் வளையல் அணிந்த பெண்கள் நெல்லை உரலிட்டுக் குத்தும் போது அவர்கள் குக்குக்கூ வென்று கொஞ்சும் ஒலியினிலும் அவ்வாறே சுண்ணப் பொடிகள் இடிக்கும் பெண்களின் இனிய பாடல்களிலும் இசைத் தோன்றும் இடங்களாக,

**“ஓலத் திடையே உதிக்கும் இசையினிலும்**

**மானுடப் பெண்கள் வளருமொரு காதலினால்**

**ஊனுருகப் பாடுவதில் ஊறிடுந்தேன் வாரியிலும்**

**ஏற்றநீர்ப் பாட்டின் இசையினிலும், நெல்லிடிக்குங்**

**கோற்றொடியார் குக்குவெனக் கொஞ்சும் ஒலியினிலும்**

**சுண்ண மிடிப்பார்தஞ் சுவைமிகுந்த பண்களிலும்**

**பண்ணை மடவார் பழகுபல பாட்டினிலும்"**[7]

இப்பாடலின் வாயிலாக பயிற்சி செய்யும் பெண்களின் பாடல் ஒலியிலும் கூட்டமாகப் பெண்கள் சேர்ந்து தங்கள் கைகளில் அணிந்த வளையல்கள் ஒலிக்குமாறு வட்டமிட்டுக் கும்மி கொட்டிப் பாடுகின்ற பாடல்களிலும் புல்லாங்குழலில் தொடங்கி வீணை வரையிலும் உள்ள நால்வகைக் கருவிகளையும் கொண்டு மனிதர்கள் தங்கள் வாயினாலும் கையினாலும் வாசிக்கும் பல கருவிகளினால் நாட்டிலும் காட்டிலும் எப்போதும் இனிமையாக ஒலித்துக் கொண்டிருக்கும் பாடல்களிலும் நான் சிந்தை உருகி மனதைப் பறிகொடுத்தேன்.

**"வட்டமிட்டுப் பெண்கள் வளைக்கரங்கள் தாமொலிக்கக்**

**கொட்டி யிசைத் தடுமோர் கூட்டமுதப் பாட்டினிலும்**

**வேயின் குழலோடு வீணைமுத லாமனிதர்**

**வாயினிலும் கையாலும் வாசிக்கும் பல்கருவி"**[8]

இசைத் தோன்றும் இடங்கள் பற்றி கூறுகின்ற போது வளருமொரு காதலினால் பெண்கள் இயல்பிலேயே மென்மையான குரல் உடையவர்கள் அவர்கள் பேசுவதே இனிய இசை போன்றதுதான். அத்தகையவர்கள் பாடும் போது மேலும் இன்பத்தைத் தந்து கேட்பவர்கள் உருகும்படியாக இருக்கும் என்பதை குறித்தே இப்பாடல் போற்றப்படுகின்றது.

**மயக்கம் தரும் இசை**

மயக்கம் தரும் இனிய குயலின் இசையால் உலகினையும், வானையும், பெரிய கிளைகளைக் கொண்ட மரங்களையும், சோலைகளையும் தன்னையும் அறியவில்லை. கவிஞர் பற்றிய நினைவே இல்லாத போது எருதினைப் பற்றி எவ்வாறு அறியும். தன்னுடைய ஒளிரும் தன்மையினால் தங்கம்

அனைவரையும் கவர்தல் போன்று, குயிலின் பாட்டு திறத்தால் மற்றவர்களை வியக்க வைத்தது என்பதை,

> **"பாட்டு முடியும் வரை பாரறியேன் விண்ணறியேன்,**
> **கோட்டுப் பெரமரங்கள் கூடிநின்ற காவறியேன்!**
> **தன்னை யறியேன். தன்னைப் போல் எருதறியேன்**
> **பொன்னை நிகர்த்தக் குரல் பொங்கிவரும் இன்ப**
> **மொன்றே கண்டேன்"[9]**

இப்பாடலின் வாயிலாக இனிய இசையினால் யாரையும் அறியாது குயிலின் குரலினை மட்டுமே கண்டேன் என்று கவிஞர் கூறுவதன் வழி உணரமுடிகின்றது.

**சிலப்பதிகாரத்தில் இசையின் சிறப்பு**

இசையின் சிறப்பைச் சிலப்பதிகாரத்தில் செங்குட்டுவன் கண்ணகிப் படிமத்திற்குக் கல்கொணர இமயம் சென்று திரும்ப முப்பதிரண்டு திங்கள்களாயின அவனது பிரிவை ஆற்றாது துயருற்றிருந்த கோப்பெருந்தேவி வழிமேல் விழிவைத்துக் காத்திருக்கின்றாள், செங்குட்டுவன் திரும்பும் நாள் அறிவிக்கப் பெறுகின்றது. அதற்கு முதல் நாள் இரவு கோப்பெருந்தேவி நானிலப் பண்களைக் கேட்ட வண்ணம் உறங்காதிருப்பதையும், குறத்தியர் பாடிய குறிஞ்சிப் பாணியும், உழவரோதைப் பாணியும், கோவலர் ஊதும் குழலின் பாணியும், புன்னைகையின் அடியில் அஞ்சொற் கிளவியர் அந்தீம் பாணியும் அற்புதமாக பாடியதோடு மட்டுமல்லாமல்,

> **"வாகை தும்பை வடதிசைச் சூடிய**
> **வேக யானையின் வழியோ நீங்கெனத்**
> **திறம்திறம் பகர்ந்து சேணோங் கிதணத்துக்**
> **குறத்தியர் பாடிய குறிஞ்சிப் பாணியும்"[10]**

என்று சிற்வேல் செய்யும் கூனரும் குள்ளரம் அரசியிடம் சென்று அரசர் பெருமார் வந்துக் கொண்டு இருக்கிறார். அழுவதை விடு உன்னை அழகு செய்து கொள் உன் அழகு மலர்க் கூந்தல் அலங்காரம் பெறட்டும் என்று பாடிய குறிஞ்சிப் பாணியையும் அறியமுடிகின்றது.

இப்பாடலின் வாயிலாக குயில் பாட்டில் இசை பற்றி கூறுவத போன்றே சிலப்பதிகாரத்திலும் இளங்கோவடிகள் இசையின் சிறப்பை எடுத்து கூறுவதை பற்றி அறியமுடிகின்றது.

**குயிலின் மோகனப் பாட்டு**

குயிலின் பாட்டைக் கவிஞர் மோகனப் பாட்டு என்றுக் குறிப்பிடுகின்றார். இதற்குக் காரணம், வேடர் யாரும் வராத நாளில் கிளையில் அமர்ந்து ஆண் குயிலின் மேனி அனல் பெருக பாடியதை,

> **"வேடர் வாராத விருந்துத் திருநாளில்**
> **பேடைக் குயிலொன்று பெட்டிறவோர் வான்கிளையில்**
> **வீற்றிருந்தே ஆண்குயில்கள் மேனி புளகமுற**
> **ஆற்ற லழிவுபெற உள்ளத் தனல் பெருக"**[14]

என்ற பாடலின் வாயிலாக கவிஞர் குயிலின் பாடலை கேட்டு அநுபவித்தவர் என்று அறியலாம், அதனால் தான் அந்தக் குயிலை,

> **"பேரின்பம் பாட்டுடையாய்!**
> **ஏழுலகம் இன்பத்தீ ஏற்று திறனுடையாய்"**[15]

என்ற வரியின் வாயிலாக புகழ்ந்துரைப்பதின் வழி அறியமுடிகின்றது.

**இசையே சிறந்தது**

இன்னிசையால் களிபேருவகையடைந்த நிலையில் படைப்பின் விளங்காத புதிர்களையெல்லாம் எடுத்துக்காட்டி மகிழ்கின்றார். ஐம்பெரும் பூதங்கள் வட்ட உருளைப்போல் வானத்தில் சுழலும் பெரிய உருக் கொண்ட பலகோடி அண்டங்கள், நாள்தோறும் பிறந்து அழியும் அனந்த கோடி

உயிர்கள் போன்றவற்றின் படைப்பகளை எண்ணி வியக்கின்றார். இவை எல்லாவற்றையும் விடவும் சிறந்தது இசையே என்பதை,

**"வடதிசை மன்னர் மன்னெயின் முருக்கிக்**

**கவடி வித்திய கழுதையே ருழவன்**

**குடவர் கோமான் வந்தான் நாளைப்**

**படுநுகம் பூணாய் பகடே மன்னர்**

**அடித்தளை நீக்கும் வெள்ளணி யாமெனம்**

**தொடுப்பேர் உழவ ரோதைப் பாணியம்"**[11]

அன்று பகையரசர் காலில் பூட்டிய தலைகளை எல்லாம் அகற்றி அரசன் அவர்களுக்கு விடுதலை தருவான் உனக்கும் அன்று விடுதலை தான் எனவே எருதே! நீ நாளை நுகத்தடி பூண வேண்டியதில்லை என்று ஏருழவர் விதைத்துக் கொண்டே மகிழ்ந்து பாடும் மருதப்பாட்டும்,

**"முருகுவிரி தாமரை முழுமலர் தோயக்**

**குருகலர் தாழைக் கோட்டுமிசை யிருந்து**

**வில்லவன் வந்தான் வியன்பே ரிமயதுப்**

**பல்லான் நிரையொடு படர்குவிர் நீரெனக்**

**காவலன் ஆனிரை நீர்த்துறை ---------**

**கோவலர் ஊதுங் குழனின் பாணியும்"**[12]

அரசன் கொண்டு வரும் பசுக் கூட்டத்தை நீர்த் துறையில் நீராடிக் கொண்டு இடைக்குலத்தவர் குழல் ஊகிப் பாடும் முல்லைப் பாட்டும்,

**"வழங்குதொடி முன்கை மலர ஏந்தி**

**வானவன் வந்தான் வளரின் வனமுலை**

**தோள்நலம் உணீஇய தும்பை போந்தையொடு**

**வஞ்சி பாடுதும் மடவீர் யாமெனும்**

**அஞ்சொற் கிளவியர் அந்தீம் பாணியும்"**[13]

என்ற பாடலும்,

**“ஆனாலும் நின்றன் அதிசயங்கள் யாவிலுமே**

**கானா முதம்படைத்த காட்சிமிக விந்தையடா!**

**காட்டுநெடு வானம், கடலெல்லாம் விந்தையெனில்**

**பாட்டினைப்போல் ஆச்சரியம் பாரின்மிசை இல்லையடா!”[16]**

என்னும் இப்பாடலும் உணர்த்துவதைப் போல குயில் பாட்டும் ஒரு வித ஓசை நயத்தை நல்குகின்றது என்பதை அறியமுடிகின்றது.

**கோவலன், கண்ணகி இசை மயக்கம்**

கோவலனும் கண்ணகியும் கவுந்தியடிகளுடன் மதுரையை நோக்கிப் போகின்றனர்ளு காவிரியாற்றில் செல்லும் நீரின் ஒலி இவர்கள் காதில் படுகின்றது. இதைத் தவிர பல்வேறு ஒலிகளையும் செவிமடுத்து நடந்து செல்லும் களைப்பையும் மறந்து செல்கின்றனர் என்பதை,

**“கழனிச் செந்நெல் கரும்புசூழ் மருங்கின்**

**பழனத் தாமரைப் பைம்பூங் கானத்து,**

**கம்புள் கோழியும், கனைகுரல் நாரையும்”[17]**

என்றப் பாடலின் வாயிலாக இளங்கோவடிகள் இன்னொலிகளைக் கேட்டுக் கொண்டே கோவலனும் கண்ணகியும் கால் கடுக்கும் என மறைந்து சென்றனர் என்பதையும் அறியமுடிகின்றது.

**சங்க இலக்கியத்தில் இசை**

பெண்ணொருத்தி யாழிலே குறிஞ்சிப்பண்ணை இசைத்து, தினைப்புனத்தில் தீனிக்காக வந்த யானையைத் தூங்க செய்தாள் என்றத் தகவலை,

**“பெருவரை மருங்கில் குறிஞ்சி பாடக்,**

**குரலும் கொள்ளாது, நிலையினும் பெயராது,**

**படாஅப் பைங்கண் பாடு பெற்று ஒய்யென்**

**மறம் புகல் மழகளிறு உறங்கும் நாடன்”[18]**

இப்பாடலின் வாயிலாக இசை பற்றி செய்தி அகநானூற்றில் உள்ளது என்பதும் புலப்படுகின்றது.

**பதிற்றுப்பத்தில் இசை செய்தி**

எட்டுத்தொகை நூலான பதிற்றுப் பத்தின் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் இசைப் பற்றிய செய்தி உள்ளது என்பதை,

**“அட்டு ஆனானே குட்டுவன், அடு தொறும்**
**பெற்று ஆனாரே பரிசிலர் களிறே,**
**வரை மிசை இழிதரும் அருவியின், மாடத்து**
**வளிமுனை அவிர்வரும் கொடி நுடங்கு தெருவில்”**[19]

இவ்பாடலின் வாயிலாக சேரன் செங்குட்டுவன் பகைவரை அழித்து போரிடும் பொழுதெல்லாம், களிற்று யானைகளைப் பெற்று அவனின் போர்ச் சிறப்பைப் புகழ்ந்து பாடுவார்கள் பரிசில் மாக்கள் என்பதை அறியமுடிகின்றது.

**இசையின் உயர்வு**

குயிலே உன்னுடைய இந்த அதிசயப் படைப்பில் முதன்மையானது அமுதம் போன்ற இசைதான். காடு, வானம், கடல் எல்லாம் மிகவும் அதிசயமானவைதான் என்றாலும் இசையைப் போன்ற அதிசயம் ஏதும் இல்லை. ஐம்பூதங்கள் இணைந்து இயங்குவது இந்த உலகம் என்றாலும் பல்வேறு ஒலிக் கூட்டங்களைச் சேர்த்து இசைக்கின்ற இசைக்கு அவை ஈடாகாது என்பதை,

**“பூதங்கள் ஒத்துப் புதுமைதரல் விந்தையெனில்**
**நாதங்கள் சேரும் நயத்தினுக்கு நேராமோ?**
**ஆசைதரும் கோடி அதிசயங்கள் கண்டதிலே**
**ஓசைதரும் இன்பம் உவமையிலா இன்பமன்றோ!”**[20]

இப்பாடலின் வாயிலாக உலகில் நம் ஆசையைத் தூண்டுகின்ற அதிசயங்கள் கோடிக் கணக்கில் இருந்தாலும் இசையின் ஓசையில் எழும் இன்பம் உயர்வானது என்பது எடுத்துக்காட்டப்படுள்ளது.

**குயிலின் இசை**

சோலையில் சூழ்திருந்த பறவைகள் எல்லாம் காலைக் கடமைகளை மறந்திருக்கும் படியாக எங்கும் இனிய அமுதத்தைக் காற்றில் பரவ விட்டதுபோல், இனிய மெல்லிய மின்னலின் கவர்ச்சியோடும், வானத்தினின்றும் மிகுந்த அழகுடைய மோகினி போன்ற பெண் ஒருத்தி இந்தக் குயிலின் உருவம் எடுத்து வந்து தேன் போன்ற சுவையும் மயக்கமும் தருகின்ற இனிய இசையைப் பாடிக் கொண்டிருக்கின்ற விந்தைதனை,

**“சோலைப் பறவையெலாம் சூழ்ந்து பரவசமாய்க்**
**காலைக் கடனிற் கருத்தின்றிக் கேட்டிருக்க**
**இன்னமுதைக் காற்றினிடை எங்கும் கலந்தது போல்,**
**மின்னற் சுவைதான் மெலிதாய் மிகவினிதாய்**
**வந்து பரவுதல்போல், வானத்து மோகினியாள”**[21]

இப்பாடலின் வாயிலாக எந்த வேளையும் கவிதை பற்றிய சிந்தனையோடு மட்டுமே உள்ள ஒரு கவிப்பித்தனான கவிஞனின் பகல் நேரத்தில் தன்நிலை மறந்து குயிலின் இசையில் மயங்கினான் என்பதை உணரமுடிகிறது.

**குயிலின் ஓசை நயம்**

கன்னித் தன்மையுடையதான அழகிய அக்குயில் அம்மாஞ்சோலையில் பாடிய இனிய பாட்டின் ஓசையிலே மயங்கி நான் இம்மனித உருவம் நீங்கி அழகிய ஒரு குயிலின் உருவம் வாராதோ? அப்படிக் கிடைத்தால் இவ்வழகிய பெண் குயிலை எப்போதும் பிரியாமல், காதலுடன் கூடி மகிழ்வெய்தும் வாய்ப்புக் கிட்டாதோ?

இக்குயிலின் இனிய இசையைக் கேட்டப்படியே காலமெல்லாம் வாழ்ந்து என் உயிரையும் விட மாட்டேனோ? என்று பலவாறாகத் தனக்குள் எண்ணி ஏங்கும் படியாக அக்குயில் பாடியதை,

**"கன்னிக் குயிலொன்று காவிடத்தே பாடியதோர்**
**இன்னிசைப் பாட்டினிலே யானும் பரவசமாய்,**
**"மனிதவுரு நீங்கிக் குயிலுருவம் வாராதோ?**
**இனிதிக் குயிற்பேட்டை என்றும் பிரியாமல்**
**காதலித்துக் கூடிக் களியுடனே வாழோமோ?"**[22]

இப்பாடலின் வாயிலாக இன்று குயில் பாடிய இந்த இனிய இசையை இதுவரையில் தேவர்கள் கூடக் கேட்டிருக்க மாட்டார்கள் 'குக்கு' என்று அக்குயில் பாடிய பாடலைக் காணமுடிகின்றது.

**பொம்மலாட்டம்**

பாவை கூத்து என்பது இரண்டாயிரம் ஆண்டு கட்கு முன்னரே நம் தமிழகத்தில் இருந்துள்ளது. இதில் பொம்மையைக் கயிற்றில் கட்டி திரைக்குப் பின்னாலிருந்தோ அல்லது மேலிருந்தபடியோ ஆட்டி வைக்கும் விந்தை தெரிந்தவர் என்பது இலக்கியங்களில் அறியலாகும் செய்தி கூத்திலும் பாவைக் கூத்து இருந்ததாகச் செய்தி உள்ளது. அவ்வாறு தன் மனத்தின் வழிச்செல்லாமல் தானே தன் ஆவலின் மிகுதியில் கால்கள் சோலையை அடைந்தன என்பதை

**"ஆங்கு மறுநாள் விடிந்தவுடன்**
**வஞ்சனை நான் கூறவில்லை, மன்மதனார் விந்தையால்,**
**புந்திமனம் சித்தம் புலனொன்(று) அறியாமல்**
**விந்தைசெயும் சூத்திரத்தின் மேவுமொரு பொம்மையெனக்**
**காலிரண்டும் கொண்டு கடுகவும் நான் சோலையிலே**
**நீலி தனைக் காண வந்தேன்"**[23]

இப்பாடலின் வாயிலாக மன்மதனின் மாயையினால் என் அறிவும் மனமும் எண்ணமும் என் செய்வது என்று அறியாமல் கயிற்றில் ஆடும் பாவைபோல கால்கள் இரண்டும் நீலக்குயிலின் இசை கேட்கும் வழித்தேடி சென்றது என்பதை இப்பாடல் எடுத்துரைக்கின்றது.

**குயிலின் பாட்டு**

உலகம் இயங்கக் காரணம் ''பண்புடையார் பட்டுண்டுலகம்'' என்று கூறினாலும் பண்புடையர் என்பது அவர்களது ஒழுக்கம், ஒழுக்கத்தின் முதல் நிலை அன்பு, பாரதியார் குயிலின் வாயிலாகக் காதல், அருள், இன்பம், புகழ், உறுதி, கூடல், குழல் என்ற பொருள்களைப் பாடுவதாக அமைத்துள்ளதை,

**''காதல் காதல் காதல்**
**காதல் போயிற் காதல் போயிற்**
**சாதல் சாதல் சாதல்''**[24]

இவ்வரியின் வாயிலாக காதலை வேண்டி குயில் இசைத்துள்ளமையை அறியமுடிகின்றது.

**அருள்**

ஒளி என்பதனை வெளிச்சம் வெப்பம் என்ற இருபொருள் நிலைகளிலும் நாம் எடுத்துக் கொண்டோமேயானால் இவ்வுலகில் தோன்றிய உயிர்கள் வாழ அவசியமானது வெளிச்சம் - வெப்பம் உயிர் வாழ அவசியமான ஒளியைப் போன்றதுதான் அருள்நிலை என்பதை,

**''அருளே யாநல் லொளியேளு**
**ஒளிபோ மாயின், ஒளிபோ மாயின்,**
**இருளே, இருளே, இருளே''**[25]

இப்பாடலின் வாயிலாக இசையை அருள்நிலை என்ற ஒளியின் மூலம் எடுத்துக் கூறுவது சான்றோர் உணர்த்தும் உண்மை என்பதை அறியலாம்.

**இன்பம்**

இந்த உலகம் இன்பம், துன்பம் என்ற எதிரெதிர் தன்மைகளை இணைத்துச் செய்யப்பட்ட ஒன்றாகும். அவ்வகையில் இன்ப நிலையில் இருக்கும் போது இன்பமான இசையும் துன்ப நிலையில் இருக்கும் போது சோகப்பாடல் கேட்பதையும் காணலாம் என்பதை,

> **"இன்பம் இன்பம் இன்பம்**
> **இன்பத் திற்கோர் எல்லை காணில்**
> **துன்பம் துன்பம் துன்பம்"**[26]

என்ற இப்பாடலின் மூலம் இன்பம், துன்பம் இணைந்தது வாழ்க்கை. இவை எல்லாம் இன்பம் இவை எல்லாம் துன்பம் என்று இறைவன் பிரிக்கவில்லை என்பதை அறிவுறுத்தியுள்ளார்.

**புகழ்**

புகழெனின் உயிரையும் கொடுக்குவர் என்பது நம் சங்க இலக்கியம் கூறும் செய்தி ஆகவே புகழ் என்பதனை மனித சமுதாயம் தன் உயிரைவிடவும் மேலானதான மான உணர்ச்சியோடுத் தொடர்பு கொண்டு போற்றி வருகின்றது என்பதை,

> **"புகழே புகழே புகழே**
> **புகழுக் கேயோர் புரையுண் டாயின்**
> **இகழே இகழே இகழே"**[27]

இப்பாடலின் வாயிலாக நம் வாழ்க்கையை புகழுடையதாக அமைத்துக் கொள்ள வேண்டும் என்று பாரதி குயில்பாட்டில் உள்ள இசையின் மூலம் கூறுப்பட்டுள்ளது.

பதினெண் கீழ் கணக்கில் அற நூலான திருக்குறளில்,

**“தோன்றின் புகழொடு தோன்றுக அ.்.திலார்**

**தோன்றலின் தோன்றாமை நன்று”**[28]

என்ற குறளின் வாயிலாக ஒரு துறையில் முற்பட்டுத் தோன்றுவதானால் புகழோடு தோன்ற வேண்டும். அத்தகைய சிறப்பு இல்லாதவர் அங்குத் தோன்றுவதை விடத் தோன்றாமலிருப்பதே நல்லது என்று புகழின் சிறப்பை வள்ளுவர் சுட்டிக்காட்டியுள்ளார்.

**உறுதி**

உறுதி என்பது இருநிலையில் உள்ளது ஒன்று மன உறுதி, மற்றொன்று உடல் உறுதி, அதிலும் மனம் உறுதியாக இருந்தால் உடலில் வலிமை தானாக வந்துவிடும் என்பதை,

**“மனதி லுறுதி வேண்டும்,**

**வாக்கினி லேயினிமை வேண்டும்ளு**

**நினைவு நல்லது வேண்டும்,**

**நெருங்கின பொருள் கைப்பட வேண்டும்ளு”**[29]

இப்பாடலில் பாரதி மனதில் உறுதி வேண்டும், என்றும் வைரமுடைய நெஞ்சு வேண்டும், என்றும் பாடுகின்றார். அப்படிப்பட்ட உறுதியோடு இருந்தால் தான் நம்மை எதிர் கொண்டுவரும் தடைகளை நாமும்,

**“அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே**

**உச்சி மீது வானிடிந்து வீழுகின்ற போதிலும் அச்சமில்லை”**[30]

என்று எதிர்ப்புக் குரல் கொடுக்க முடியும். இல்லை என்றால் நாம் துவண்டு விடும் சமயங்களில் சில நேரம் மரணம்கூட நேரலாம் இதனையே,

**“உறுதி, உறுதி, உறுதி,**

**உறுதிக் கேயோர் உடைவுண் டாயின்**

**இறுதி, இறுதி, இறுதி!”**[31]

இவ்வரியின் வாயிலாக உறுதி இல்லையேல் இறுதி நேரும் என்று வலியுறுத்தியுள்ளார்.

**கூடல்**

அதிக இன்பம் தருவது கூடல் நிகழ்வு மட்டுமே. அது களவு நிலையானாலும் கற்பு நிலையானலும் சேர்ந்துப் பின் அவன் பிரிந்து சென்றால் அது அவளுக்கு மிகுந்த வருத்தத்தை ஏற்படுத்தும் என்பதை,

> **"கூடல், கூடல், கூடல்**
>
> **கூடிப் பின்னே குமரன் போயின்,**
>
> **வாடல், வாடல், வாடல்"**[32]

என்னும் இவ்வரிகள் உணர்த்துகின்றன.

**குழல்**

குழல் என்பதனையும் இரண்டு பொருள் நிலையில் கொள்ளலாம். இசைக் கருவியில் ஒன்று குழல், மற்றொன்று கூந்தல். அவ்வகையில் இசைக் கருவியாகிய புல்லாங்குழலுக்கு நல்ல மூங்கில் வேண்டும். மூங்கிலில் பிளவு அல்லது கீறல் இருந்தால் அதில் நல்ல குழல் செய்ய முடியாது. காற்று பிளவுப்பகுதிகளிலும் வெளிப்பட்டுச் சரியான இசையைத்தராமல் வீணாகி விடும் என்பதை,

> **"குழலே குழலே குழலே**
>
> **குழலிற் கீறல் கூடுங் காலை**
>
> **விழலே விழலே விழலே"**[33]

இவ்வரியின் மூலம் கூந்தல் பிளவுப்பட்டால் கூந்தல் வளர்நிலை காணாமல் உதிரும் இந்நிலைகளை ஒட்டியே குழல் வீணாகும் நிலையும் சுட்டப்படுகின்றது.

மேற்சொன்ன பகுதியில் எல்லாம் பாரதியார் குயிலின் வாயிலாகக் காதல் அருள், இன்பம், நாதம், தாளம், பண், புகழ், உறுதி, கூடல், குழல்

என்ற பொருள்களைப்பாடுவதாகவும் குயில் பொது அறிவுத்திறன் வாய்க்கப் பெற்றிருந்ததையும் அறியமுடிகின்றது.

### முடிவுரை

இவ்வியலின் வாயிலாக புதுக் கவிதையில் இசை, சங்க காலத்தில் உள்ள இசைப்பற்றிய செய்தி, குயிலின் பாட்டின் இசை, இயற்கையில் இசை, நம்மை இசைவிக்கும் இசைத் தோன்றும் இடங்கள் குறித்து இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. ந. சுப்புரெட்டியார் குயில்பாட்டு - ப.எ. - 17
2. குயில்பாட்டு மூலமும் உரையும் - ப.எ. - 9
3. மேலது - ப.எ. - 9
4. மேலது - ப.எ. - 9
5. ந. சுப்புரெட்டியார் குயில்பாட்டு - ப.எ. - 44
6. மேலது - ப.எ. - 44
7. மேலது - ப.எ. - 44
8. மேலது - ப.எ. - 53
9. சிலப்பதிகாரம் தெளிவுரை - ப.எ. - 45
10. மேலது - பா.எ. - 56
11 மேலது - பா.எ. - 290
12. மேலது - பா.எ. - 286
13. ந. சுப்புரெட்டியார் குயில்பாட்டு - ப.எ. - 52
14. மேலது - ப.எ. - 52
15. குயில்பாட்டு மூலமும் உரையும் - ப.எ. - 45
16. சிலப்பதிகாரம் தெளிவுரை - பா.எ. - 46
17. அகநானூறு - பா.எ. - 102
18. பதிற்றுப்பத்து (ஐந்தாம் பத்து) - பா.எ. - 47
19. குயில்பாட்டு மூலமும் உரையும் - ப.எ. - 45
20. மேலது - ப.எ. - 4
21. மேலது - ப.எ. - 5
22. மேலது - ப.எ. - 22
23. மேலது - ப.எ. - 6

24. மேலது - ப.எ. - 7

25. மேலது - ப.எ. - 8

26. மேலது - ப.எ. - 11

27. திருக்குறள் - கு.எ. - 236

28. பாரதியார் பாடல்கள் - ப.எ. - 398

29. மேலது - ப.எ. - 399

30. குயில்பாட்டு மூலமும் உரையும் - ப.எ. - 11

31. மேலது - ப.எ. - 12

32. மேலது - ப.எ. – 12

33. மேலது – ப.எ.11

# இயல் 3

# கவிஞரும் காதலும்

**முன்னுரை**

குயில்பாடும் இன்னிசை இன்னமுது காற்றில் கலந்து பரவுகின்றத. அங்கிருந்த கவிஞர் குயிலின் இன்னிசைப்பாட்டினிலே பரவசப்பட்டு காதற்களியிலே ஆழ்ந்து விடுகின்றார். தமிழ் இலக்கியங்களின் அகத்திணை இலக்கியங்களில் காதலை உயர்வாக கொண்டு வாழ்ந்தனர். அதில் எல்லா உயிரிலும் அன்பு கொள்வது போல் அழகிய மாஞ்சோலையில் பறவைகளும், ஆண்குயில்களும் மயங்கும் படியான தேவதையே குயிலாக வந்தது போன்ற பெண் குயிலின் பாடலைக் கேட்டு அதன் இசையில் மயங்கி அதன் மேல் காதல் கொள்கின்றார் கவிஞர் என்பதை ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

**ஐந்திணை ஐம்பதில் காதல்**

பதினெண் கீழ்கணக்கு நூல்களில் அக நூலான ஐந்திணை ஐம்பது என்ற நூலில் மனிதருக்கு அஃறிணை உயிர்கள் மூலம் காதலின் அறிவுரையை பாலை நிலத்தில் காதல் மிகுந்த ஆண் மானும் பெண் மானும் ஓடிக்களைத்து தாகம் தீர்க்க ஒரு சுனையில் ஒரு மான் நீர் அருந்தக் கூடிய அளவே நீர் உள்ளது. அதனால் இரண்டு மானும் நீர் அருந்துவது போல் பாவனை செய்ததை,

> **“சுனைவாய்ச் சிறுநீரை யெய்தாதென் றெண்ணிப்**
> **பிணைமா னினிதுண்ண வேண்டிக் கலைமாத்தன்**
> **கள்ளத்தி னூச்சுஞ் சுரமென்பர் காதல**
> **ருள்ளம் படர்ந்த நெறி”**[1]

என்ற பாடலின் வாயிலாக தங்கள் காதலினை இரு மான்களும் வெளிப்படுத்திய விதத்தை ஐந்திணை ஐம்பது சுட்டிக்காட்டுகின்றது.

ஐந்திணை ஐம்பது போன்றே குயில் பாட்டிலும் கவிஞர் தன் காதலை குயிலிடம் வெளிப்படுத்த குயிலும் ஒப்புக் கொள்வதை காணமுடிகின்றது.

**கவிஞரின் காதல்**

குயில் பாட்டில் குயிலானது கவிஞரைப் பிரிந்து சென்று விடும் அப்போது குயிலை எண்ணி கவிஞர் வருந்தினார். குயிலின் வார்த்தைகளைக் கேட்ட கவிஞருக்கு உள்ளத்திலும் உயிரிலும், காதிலும் குயில் கூறிய சொற்களைத் தவிர ஏதும் ஒலிக்க வில்லை என்ற நிலையில் இருந்தார். காதல் தான் வாழ்க்கையா! அத்தகைய காதல் இல்லையென்றால் சாதல் தான் உலக இயல்பு என்ற வார்த்தைகளையே பல்லவியாக மனம் என்னும் வீணையில் உடல் முழுவதும் ஒலிப்பது அன்றி வேறு ஒலியை அங்கு கேட்க முடியவில்லை என்பதை,

> **“சின்னக் குயிலிதனை செப்பியவப் போழ்தினிலே**
> **என்னைப் புதியதோர் இன்பச் சுரம்கவர**
> **உள்ளத்திடையும் உயிரிடையும் ஆங்கந்தப்**
> **பிள்ளைக் குயிலினதோர் பேச்சன்றி வேறற்றேன்**
> **காதலோ காதலினிக் காதல் கிடைத்திலதேல்**
> **சாதலோ சாதல் எனச் சற்றுமொரு பல்லவியென்**
> **உள்ளமாம் வீணைதனில் உள்ள வீ(டு) அத்தனையும்**
> **உள்ள ஒலிப்பதலால் வேறோர் ஒலியில்லை”[2]**

என்ற பாடலின் வாயிலாக சிந்தை மயங்கி திகைப்போடு நின்றிருந்த நேரத்தில கவிஞர் மீண்டும் அனைத்து பறவைகளும் சோலையில் ஒலி எழுப்பி நின்றன நீலக் குயில் ஏக்கத்துடன் கவிஞரிடம் பேசியதை என்பதை,

> **“சித்தம் மயங்கித் திகைப்பொடுநான் நின்றிடவும்**
> **அத்தருணத் தேபறவை யத்தனையும் தாம்திரும்பிச்**
> **சோலைக் கிளையிலெல்லாம் தோன்றியொலித்தனவால்,**
> **நீலக்குயிலும் நெடிதுயிர்த் தாங்(கு) இ∴துரைக்கும்**
> **காதல் வழிதான் கரடு முரடா மென்பர்ளு”[3]**

இப்பாடலின் வாயிலாக காதலின் பாதை மிகவும் கரடு முரடானது என்பார்கள், ஒளி பொருந்திய கண்களை உடையவர்களே துன்பத்தில் இருந்த என்னை காக்க மரக்களம் போன்று வந்தீர், கவிஞரே என் எண்ணத்தைக் கவர்ந்து கொண்டு செல்கின்றீர் ஆதலால் நான்காம் நாள் வர வேண்டும், வரவில்லை என்றால் உயிரையே விட்டு விடுவேன். என எண்ணத்தை கவர்ந்தவரே சென்று வாருங்கள் என்று தன் வருத்தத்தை கூறுவதை காணமுடிகின்றது.

**குயிலின் காதல்**

குயில் மிகவும் விசித்திரமான தன்மை கொண்டது மானிடர் காதல் கொள்வது போல் குயிலும் காதல் கொண்டு எனக்கு தேவை காதல் அது இல்லாமல் போனதால் என் மனம் தவிக்கின்றது என,

> **“மாயக் குயிலதுதான் மானுடன் பேச்சினிலோர்**
>
> **மாயச்சொல் கூற மனந்தீ யுறநின்றேன்ளு**
>
> **“காதலை வேண்டிக் கரைகின்றேன், இல்லையெனில்**
>
> **சாதலை வேண்டித் தவிக்கின்றேன்” என்றதுவால்**
>
> **வானத்துப் புள்ளெல்லாம் மையலுறப் பாடுகிறாய்ளு”[4]**

என்ற பாடலின் வாயிலாக வானில் தவழும் பறவைகள் அனைத்தும் மயங்கும் படியான இனிய இசையுடன் பாடுகிறாய். உலகில் உள்ள மற்ற பறவைகளினின்றும் நீ தனித்தன்மை பெற்று சிறந்துள்ளாய். ஆனால் உனக்குரிய காதலனை நீ அடையாமல் இருப்பதற்கு காரணம் என்ன? என்று பாரதியார் எடுத்துக் கூறுவதை அறியமுடிகின்றது.

**கவிஞரின் காதல் வேதனை**

கவிஞரின் சிந்தையை விட்டுக் காதல் குயிலின் நினைவு நீங்கவில்லை வியப்பில் நின்றபடி நான் கண்ட இந்தக் காட்சிகளெல்லாம் கனவா, நினைவா என்று தெரியவில்லை. மன்மதனின் அம்புகள் மனதில் தைத்தன மரக்கிளையில் நின்ற குயிலின் உருவம் உலகில் உள்ள அனைத்து

உருவங்களிலும் தெரிந்தது. கவிஞருக்கு இத்தகைய காதல் மனத்தோடு தன் வீட்டினை அடைந்தும் மனம் ஒரு நிலைப்படவில்லை. எங்கெங்கோ அலைந்தது ஒரு நாளைக் கழிப்பதற்குள் அவர் பெரும்பாடு பட்ட நிலையினை. தாளம் படுமொ? தறிபடுமோ? யார்தான் படுவார்களோ என்பதை,

**"கண்டதொரு காட்சி கனவு நன(வு) என்றறியேன்,**
**எண்ணுதலும் செய்யேன் இருபதுபேய் கொண்டவன் போல்**
**கண்ணும் முகமும் களியேறக் காமானார்**
**அம்பு நுனிகள் அகத்தே அமிழ்ந்திருக்கக்**
**நாளொன்று போவதற்கு நான்பட்ட பாடனைத்தும்**
**தாளம் படுமோ? தறிபடுமோ? யார் பாடுவார்?"[5]**

என்ற பாடலின் வாயிலாக ஒரு நாள் கடந்தது. இன்றைய பொழுதில் நானும், என் உயிரும், என்னை விட்டு நீங்காமல் சிலை வடிவாய் நின்ற மன்மதனும் மாயக் குயிலின் இனிய பாடலும் என்னோடு நிழலாக நின்றது என்பதை காணமுடிகின்றது.

**கவிஞர் குயிலை தேடல்**

சோலையை சென்றடைந்த வழியில் கண்ட காட்சிகள் எதுவும் நினைவில் இல்லை. சோலையில் சென்று பார்த்த போதும் காலைச் சூரியனின் சிவந்த ஒளிபட்டுப் பச்சை மரங்கள் எல்லாம் பளபள வென்று மின்னின தனியே அக்குயிலைக் கண்டு என் உள்ளத்தில் உள்ள ஆசையை உணர்ந்தது போல் அங்கிருந்த பறவைகள் அனைத்தும் வேறெங்கோ சென்றிருந்தன இதனையே,

**"நீண்ட வழியினிலே**
**நின்ற பொருள் கண்ட நினைவில்லை, சோலையிடைச்**
**சென்றுநான் பார்க்கையிலே செஞ்ஞாயிற் றொண்கதிரால்**
**பச்சைமர மெல்லாம் பளபளென, என்னுளத்தின்**
**இச்சையுணர்ந்தன போல் ஈண்டும் பறவையெல்லாம்**
**வேறொங்கோ போயிருப்ப, வெம்மைக் கொடுங்காதல்"[6]**

இப்பாடலின் வாயிலாக மாயச் சிறுகுயிலைக் காண வேண்டும் என்ற அளவு கடந்த ஆசையுடன் அந்தச் சோலைகளின் எல்லாத் திசைகளிலும் உள்ள மரக் கிளைகளிளெல்லாம் தேடிநின்றன.

**கவிஞரின் அதிர்ச்சி**

குயிலைக் காண வேண்டிச் சோலையில் தேடி நின்ற கவிஞர் நேற்றுக் கண்ட மரத்தில் இன்று குயில் இல்லை சுற்றிலும் பார்த்துத் துடிப்போடு தேடி வருகையில் அவர் கண்ட காட்சி மிகுந்த அதிர்ச்சியைத் தந்தது. ஆதனால் வஞ்சகமே, பெண்மையே, உடலற்ற தன்மையனான மன்மதனே, இதயமே, முன்னை விதியின் நெறியே, பாழான உலகமே கண்ணில் நான் கண்ட காட்சியை நான் என்னவென்று கூறுவேன். பெண்ணிடத்தில் மயக்கம் கொண்டு அறிவை இழந்து பைத்தியமானவர்களே கேளுங்கள். காதல் மிகவும் உயர்வானது என்றெல்லாம் போற்றும் கவிஞர்களே கேளுங்கள், மிகவும் ஆற்றலுடைய விதியாகிய ஊழ்வினையே நீயும் கேட்பாயாகளூ என்றுக் கூறுவதாக,

> **“மற்றைநாட் கண்ட மரத்தே குயிலில்லை**
> **சுற்றுமுற்றும் பார்த்துத் துடித்து வருகையிலே,**
> **வஞ்சனையே! பெண்மையே! மன்மதனாம் பொய்த்தேவே!**
> **நெஞ்சகமே! தொல்விதியின் நீதியே! பாழுலகே!**
> **கண்ணிலே நான் கண்ட காட்சிதனை என்னுரைப்பேன்!”[7]**

என்ற பாடலின் வாயிலாக விந்தையான குயில் ஒரு மரக்கிளையில் அமர்ந்திருந்தது. அதனுடைய கண்களில் கண்ணீர் பெருகிய படியும் சிறிய உடல் விம்மும் படியும் அழுது துயரமான சொற்களை அங்கு ஓர் ஆண் குரங்கிடம் கூறி இரங்கும் நிலையைக் கண்டு கவிஞர் அதிர்ச்சி அடைவதை காணமுடிகின்றது.

**கவிஞர் சினத்தை மறைத்தல்**

தான் விரும்பும் குயிலினை ஓர் ஆண் குரங்குடன் பார்த்த நேரத்தில் தான் செய்கிற செயல் அத்தகையது என்ற தெளிவில்லாமல் நன்மையெது தீமையெது என்றும் ஆராய்ந்து பாராமல் குயிலும் குரங்கும் ஒன்றாக இருந்த காட்சியினைக் கண்ட மறுகணமே அவர்கள் இருவரையும் வெட்டி விட எண்ணித் தன் உடைவாளினை கையில் எடுத்தார் என்பதனை,

**"தீதேது? நன்றேது? செய்கைத் தெளிவேது?**
**அந்தக் கணமே அதையும் குரங்கினையும்**
**சிந்தக் கருதிஉடை வாளிற்கை சேர்த்தேன்**
**கொன்றுவிடு முன்னே, குயிலுரைக்கும் வார்த்தைகளை**
**நின்றுசற்றே கேட்பதற்(கு) என் நெஞ்சம் விரும்பிடவும்**
**ஆங்கவற்றின் கண்ணில் அகப்படாவா(று) அருகே**
**ஓங்கு மரத்தின் பால் ஒளிந்து நின்று கேட்கையில்"[8]**

இப்பாடலின் வாயிலாக குயில் பேசுவதை, கவிஞர் மறைந்து நின்று கேட்டார் என்பதை உணரமுடிகின்றது.

**கவிஞரின் வெறுப்புணர்வு**

காதல், காதல், காதல் போயின் சாதல் என்ற பொருளமைந்த பாடலை இழிந்த தன்மையுடைய குயில் பாடுவதை,

**"காதல் காதல் காதல்**
**காதல் போயிற் காதல் போயிற்**
**சாதல் சாதல் சாதல்,**
**நீசக் குயிலும் நெருப்புச் சுவைக்குரலில்**
**ஆசைததும்பி அமுதூறப் பாடியதே"[9]**

என்ற பாடலின் குயிலை மாயக்குயிலென்றும், விசித்திரக் குயிலென்றும் காதலினால் பேசிய கவிஞர் இன்று தனக்குத் துரோகம் இழைத்துவிட்டது என்ற உணர்வினால் நீசக்குயில் என்று கூறுவதைக் காண முடிகின்றது.

**கவிஞரும், குரங்கும்**

குரங்கின் காதல் மொழிகள் கவிஞரின் மனதை மிகவும் புண்படுத்தியது. அதனால் அந்தக் குரங்கினைக் கொல்ல வேண்டும் என்ற எண்ணத்துடன் கையில் உள்ள வாளினை குரங்கின் மேல் வீசினார். ஆனால் இது எல்லாம் கனவா? நனவா? அல்லது தெய்வச்செயலோ? அந்தச் சிறிய குரங்கு என்வாள் வீச்சிற்குத் தப்பி முகம் சுளித்தவாறு ஓடி மறைந்தது. அதே நேரத்தில் அந்த மாயக் குயிலும் மறைந்து, அடுத்து என்ன செய்வது என்று தெரியாது தடுமாறி குயில் செல்லும் இடங்களில் எல்லாம் தேடியும் குயில் கிடைக்கவில்லை என்பதை,

> **“என்றுபல பேசுவதும் என்னுயிரைப் புண்செயவே,**
> **கொன்றுவிட எண்ணிக் குரங்கின்மேல், வீசினேன்**
> **கைவாளை யாங்கே, கனவோ? நனவுகொலோ?**
> **மேலைச் செயலறியா வெள்ளறிவிற் பேதையேன்**
> **தட்டுத் தடுமாறிச் சார்பனைத்தும் தேடியுமே**
> **குட்டிப் பிசாசும் குயிலையெங்கும் காணவில்லை”**[10]

இப்பாடலின் வாயிலாக கவிஞன் ஒரு பொருளின் மீது ஆசை வைத்தால் அடையும் வரை நம் ஆசை அடங்காது அதனை தேடி அலையும் அவ்வாறு கவிஞரும் குயிலினைத் தேடியலைவதை இப்பாடல் சுட்டிக்காட்டுகின்றது.

**கவிஞரும் மாடும்**

குயிலானது காளையின் மீது காதல் கொண்டதை அறிந்த கவிஞர் காளையை வெட்டி வீழ்த்த வாளை எடுத்தார். காளையும் தப்பி குயிலும் ஓடி மறைந்தது. அங்குள்ள மற்ற பறவைகளையெல்லாம் முன்பு இருந்ததைப் போன்று மரக் கிளையில் அமர்ந்து ஒலி எழுப்பின. காதல் கொண்ட நானும் குயிலைத் தேடி வீடு வந்து சேர்ந்தேன் என்பதை,

> **“செத்தைக் குயில் புரிந்த தெய்விகத்தீம் பாட்டெனும் ஓர்**
> **வித்தை முடிந்தவுடன் மீட்டுமறி(வு) எய்திநான்**

**கையினில் வாளெடுத்துக் காளையின்மேல் வீசினேன்"**

**வீணிலே தேடிய பின்வீடு வந்து சேர்ந்து விட்டேன்"[11]**

என்ற பாடலின் வாயிலாக குயில் இனிய காதல் கதைகளைச் கூறி நெஞ்சினை உருகச் செய்தது. எதற்கும் பறி கொடுக்காத என் மனதை குயிலுக்கு கொடுத்தேன், ஆனால் அந்த குயில் குரங்கு, மாடு மீது ஆசைக் கொண்டு இருவரையும் எனக்கு எதிராக அமைந்தது போல் கொடுமை எல்லாம் எண்ணி தூங்க ஆரபித்தார் கவிஞர் என்பதை அறியமுடிகின்றது.

**நான்காம் நாள்**

உயர்ந்த காதலைக் காட்டி என்னை ஏமாற்றியக் குயில் வரச் சொன்ன நான்காம் நாள் இன்றுதான் என் வீட்டின் மாடியில் நடந்ததை எல்லாம் அமர்ந்திருந்த போது வானில் ஒரு கரும் பறவையைக் கண்டேன் என்பதை,

**"நான்காம் நாள் என்னை நயவஞ் சனைபுரிந்து**

**வான்காதல் காட்டி மயக்கிச் சதி செய்த**

**பொய்மைக் குயிலென்னைப் போந்திடவே கூறியநாள்**

**ஆங்கதனை விட்டுப் பிரிவதற்கும் ஆகவில்லைஞூ**

**ஓங்கம் திகைப்பில் உயர்மாடம் விட்டுநான்**

**வீதியிலே வந்து நின்றேன்"[12]**

இப்பாடலின் வாயிலாக அப்பறவை நம்முடையக் குயிலாக இருக்கமா என்று சரியாக அறிய முடியாமல் திகைத்து நின்றார் என்பதை,

**"மேற்றிசையில் அவ்வுருவம்**

**சோதிக் கடலிலே தோன்றுகரும் புள்ளியெனக்**

**காணுதலும் சற்றே கடுகி யருகேபோய்,**

**யான் நிலத்தே சென்றேன்"[13]**

என்னும் வரியின் வாயிலாக தெருவில் நின்றபழ மேற்குத் திசையைப் பார்த்து குயிலை கவிஞர் அதன் அருகில் செல்ல நடந்தான், தான் நடந்தால் நடந்தும்

நிற்கும் போது நின்ற படியும் அப்பறவை பறந்து சென்ற திசையில் தானும் சென்றேன் என்று கவிஞர் கூறுவதை காணமுடிகின்றது.

**கவிஞரின் கோப மொழிகள்**

குயிலானது மீண்டும் மாஞ்சோலையை வந்து அடைந்தது ஒரு கிளையில் அமர்ந்து பழையப்படி பொய்யான காதல் பாடலைப் பாடிக் கொண்டிருப்பதைக் கண்ட கவிஞர் மனதில் கோபத்துடன் அதன் எதிரில் சென்று ஏமாற்றம் குணம் கொண்ட குயிலே! உன்னைப் பற்றி புரிந்து கொள்ள முடியாதத் தன்மையான பொய்யின் வடிவமே ஆசை கொண்ட குரங்கினையும் அன்பு நிறைந்த உன்னை எண்ணி நீ பாடும் இந்த இழிவான உன் காதல் பாடலைக் கேட்பதற்காகவே என்னை அங்கிருந்து இங்கு அழைத்து வந்தாய் போலும் என்று கோபத்துடன் ஏதேதோ பேசுகின்றார்.

**“இறுதியில் முன்பு நாம்**
**கூறியுள்ள மாஞ்சோலை தன்னைக் குறுகியந்த**
**ஊறிலாப் புள்ளும் அதன் உள்ளே மறைந்தது வால்**
**மாஞ்சோலைக் குள்ளே மதியிலிநான் சென்றாங்கே**
**ஆஞ்சோதி வெள்ளம் அலையுமொரு கொம்பரின்மேல்**
**சின்னக் கருங்குயிலி செவ்வனே வீற்றிருந்து,”**[14]

என்ற பாடலின் வாயிலாக தனக்கு துரோகம் செய்த குயிலைக் கொன்று விட வேண்டும் என்று மனதில் முடிவு செய்தார் ஆனால் உடனடியாக அவர் மனதில் இரக்கம் ஏற்பட அக்குயிலை கொல்லும் செயலைச் செய்யாமல் கைவிட்டார் என்பதை உணரமுடிகின்றது.

**குயிலும் கவிஞரும்**

குயில் கவிஞரை பார்த்து தலைவனே என் ஆசைக்குரியவனே, ஏழையாகிய என்னை இந்த உலகில் வாழ வைக்க உங்கள் உள்ளம் விரும்புகின்றதா? அல்லது என்னைக் கொன்று விட வேண்டும் என்று எண்ணுகின்றீர்களா ஏதாவது ஒரு சொல்லை கூறுங்கள்

**“ஈங்கிதற்குள்,**

**வஞ்சக் குயிலி மனத்தை இரும்பாக்கி**

**கண்ணிலே பொய்ந்நீர் கடகடெனத் தானூற்றப்**

**பண்ணிசைபோல் இன்குரலால் பரவியது கூறிடுமால்**

**ஐயனே என்னுயிரின் ஆசையே ஏழையென**

**வையமிசை வைக்கத் திருவுளமோ? மற்(று) எனையே**

**கொன்றுவிடச் சித்தமோ? கூறீர் ஒரு மொழியில்**

**அன்றில் சிறுபறவை ஆண்பிரிய வாழாதுளு”**[15]

இப்பாடலின் வாயிலாக கவிஞரைப் பிரிந்தால் அக்கணமே தீயில் விழுந்து நான் அழிந்து போகும் நிலையிலும் எக்கதி ஏற்பட்டாலும் சரி என்று குயில் கவிஞரிடம் கூறுவதை,

**கவிஞரின் மனம்**

கவிஞரின் மனம் குயிலியைக் கொல்ல விரும்பவில்லை பெண் என்றால் பேய் கூட இரக்கம் காட்டும் என்பார்கள், ஆனால் பாவம் பேய்களே துன்பங்களை தந்து உள்ளது இந்த குயிலினை மானிடனாகிய நான் கொல்வதா என்று விட்டுவிட்டார்

**“கொன்றுவிட மனந்தான் கொள்ளுமோ? பெண்ணென்றால்**

**பேயும் கிரங்காதோ? பேய்கள் இரக்கமின்றி**

**முாயமிழைத் தால் அதனை மானிடனும் கொள்ளுவதோ**

**காதலிலே ஐயம் கலந்தாளும் நிற்பதுண்டோ?**

**மாதர் அன்பு கூறில் மனமிளகார் இங்குளரோ?”**[16]

என்ற வரியின் வாயிலாக கவிஞர் காதலில் சந்தேகம் ஏற்பட்டால் அந்தக் காதல் நிலைக்காது என்கின்றார்.

**கவிஞர் கண்ட அதிசயம்**

கவிஞர் பல நினைவுகளோடு தன் கையிலிருந்து அந்தக் குயிலைக் குனிந்து பார்த்த போது முன்னர் தோன்றிய அன்பை விடவும் அதிகமான அன்பு அக்குயிலிடத்தில் தோன்றிட அதனை முத்தமிட்டார். முத்தமிட்டு நிமிர்வதற்குள் அங்கு ஒரு அதிசயம் நிகழ்ந்தது. அவர் கையில் இருந்த பெண் குயிலைக் காணவில்லை. பெண் உருவில் எதிரில் நின்றாள் மிகந்த மகிழ்ச்சியோடு நேராகப் பார்க்காமல் என்னை ஓரக்கண்களால் சிறுநேரம் மட்டுமே பார்த்து மீண்டும் தலைகுனிந்து நின்றாள் என்பதை,

> **"அன்புடனே யானும் அருங்குயிலைக் கைக்கொண்டு**
> **முன்புவைத்து நோக்கிய பின் மூண்டுவரும் இன்பவெறி**
> **கொண்டதனை முத்தமிட்டேனளு கோகிலத்தைக் காணவில்லை,**
> **விண்டுரைக்க மாட்டாத விந்தையடா! விந்தையா!**
> **எற்றே தமிழில் இசைத்திடுவேன்?"**[17]

இப்பாடலின் வாயிலாக தெய்வமே இவள் அழகை என்னவென்று நான் இனிய தமிழில் இசைத்திடுவேன் என்பதை கவிஞர் கூறுவதை காணமுடிகின்றது.

**பெண்ணின் அழகு தோற்றம்**

இந்த பூமியில் நிற்கும் ஒரு மின்னல் கொடியைப் போன்று அமைந்த அழகிய பெண்களின் அரசி போன்றவளின் உடல் அழகும், முக அமைப்பும், தேனைவிட இனிய தன்மை உடையவளை,

> **"பெண்ணவளைக் கண்டு பெருங்களிகொண்(டு) அங்ஙனே**
> **நண்ணித் தழுவி நறுங்கள் ளிதழினையே**
> **முத்தமிட்டு முத்தமிட்டு மோகனப் பெருமயக்கில்**
> **சித்தம் மயங்கிச் சில போழ்(து) இருந்த பின்னே"**[18]

என்ற பாடலின் வாயிலாக பிரமனால் செய்யப்பட்ட பெண் உருவம் அவளைக் கண்டு மிகுந்த காதல் கொண்டேன் என்று கவிஞர் உரைப்பதைக் காணமுடிகின்றது.

**கவிஞரின் கனவு கலைதல்**

பின்னர் பக்கத்தில் இருந்த அந்த அழகிய பெண்ணும் சோலைகளும் சட்டென்று மறைந்து விட்டது. கவிஞர் அதனைக் கண்டு 'ஓ' வென்று கதறி அழுது விழுந்தார் என்பதை,

> **"பக்கத் திருந்தமணிப் பாவையுடன் சோலையெலாம்**
> **"ஒக்க மறைந்திடலும் ஓகோ! எனக்கதறி**
> **வீழ்ந்தேன், பிறகு விழி திறந்து பார்க்கையிலே**
> **சூழ்ந்திருக்கும் பண்டைச் சுவடி, எழுதுகோல்,**
> **பத்தரிக்கைக் கூட்டம், பழம்பாய் வரிசையெல்லாம்**
> **ஒத்திருக்க 'நாம் வீட்டில் உள்ளோம்' என வுணர்ந்தேன்"**[19]

இப்பாடலின் வாயிலாக கவிஞர் சோலை, குயில், காதல் - சொன்ன கதை ஆகிய அனைத்தும் அந்த மலை மற்றும் சோலைகளைக் கண்ட அழகு மயக்கத்தில் இருந்த எனக்குத் தோன்றிய ஒரு கற்பனை என்பதை கவிஞர் கூறுவதை காணமுடிகின்றது.

**முடிவுரை**

கவிஞர் குயில் மீது கொண்ட காதலும், குயில் மாடு குரங்கு போன்ற பிற உயிர்களின் மீது கொண்ட காதலையும், கவிஞர் கண்ட போது கோபம் கொள்வதும், பிறகு அவர் கண்ட அனைத்தும் கனவு என்பதையும் இவ்வியலின் வாயிலாக அறியமுடிகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. பதினெண்கீழ்கணக்கு நூல்கள் மூலமும் தெளிவுரையும் - ப.எ. - 372
2. குயில்பாட்டு மூலமும் உரையும் - ப.எ. - 19
3. மேலது - ப.எ. – 19
4. மேலது - ப.எ. – 14
5. மேலது - ப.எ. – 21
6. மேலது - ப.எ. – 23
7. மேலது - ப.எ. – 24
8. மேலது - ப.எ. – 25
9. மேலது - ப.எ. – 29
10. மேலது - ப.எ. – 31
11 மேலது - ப.எ. – 46
12. மேலது - ப.எ. – 48
13. மேலது - ப.எ. – 49
14. மேலது - ப.எ. – 49
15. மேலது - ப.எ. – 90
16. மேலது - ப.எ. – 51
17. மேலது - ப.எ. – 52
18. மேலது - ப.எ. – 74
19. மேலது - ப.எ. – 75

# இயல் 4

# குயில் பாட்டில் உள்ளுறை

**முன்னுரை**

சங்க இலக்கியத்தில் சங்க காலப் புலவர்கள். அக உணர்வை மறைமுகமாகவும் குறிப்பாகவும் உணர்த்த உள்ளுறை உவமை என்னும் இலக்கிய உத்தியை பயன்படுத்தி, மிகச் சிறந்தப்பாடல்களை பாடியுள்ளார். அதேப் போன்றே குயில் பாட்டும் கற்பனையில் எழுந்த வேதாந்தப் பொருள் உள்ளுறையாக அமைந்துள்ளது என்பதை இவ்வியலின் நோக்கமாகும்.

**உள்ளுறையும் தத்துவமும்**

ஒரு பொருளை வைத்து இன்னொரு பொருளுடன் ஒப்பிடுவது. அது உயிருள்ளதாக இருக்கலாம், உயிரற்றதாக இருக்கலாம். குயிலின் கதை முடிந்த பிறகு குயில் பாட்டின் இறுதியில் கவிஞர் மூன்று அடிகளில்,

**“ஆன்ற தமிழ் புலவீர் கற்பனையே ஆனாலும்**
**வேதாந்தமாக விரித்துப் பொருள் உரைக்க**
**யாதானும் சற்றே இடமிருந்தாற் கூறீரோ!”**[1]

என்ற வரிகள் வேதாந்த உள்ளுறையையும், சித்தாந்த உள்ளுறையையும் எடுத்துரைத்துள்ளார்.

| வேதாந்த குறியீடுகள் | | குயில்பாட்டில் |
|---|---|---|
| இறைவன் | - | குயில் |
| மாயை | - | குரங்கு, மாடுமாகவும் |
| அறிவு என்னும்(ஞானம்) | - | வாள் |

வேதாந்த நெறிப்படி இறைவனும் உயிரும் வேறு வேறு அல்ல இரண்டையும் வேறு வேறாகக் காட்டுவது மாயையின் செயல் இந்த மாயை பக்தி, ஞான, கர்ம யோகங்களால் விலகும். இதன்படி குயில் நாதன் வடிவான இறைவனின் குறியீடு என்பது விளங்கும். கவிஞன் பாட்டின் பொருண்மை

எனில், குயில் அப்பாட்டின் நாதம் இரண்டும் ஒன்று படத்தடையாயிருப்பது மாயை. இதில் மாயையாக குரங்கும், மாடும் பொய்த் தோற்றங்களைப் படைக்கின்றது. அறிவு என்ற வாளின் வீச்சிலே பொய்த் தோற்றம் கலைகிறது என்பதை அறியமுடிகின்றது.

**மாயை**

பாரதியார் தெய்வப் பாடல்களில் மாயைக் குறித்து பாடியுள்ளார் என்பதை,

> **“உண்மை யறிந்தவர் தீயின் முன்**
> **கணிப்பாரோ?**
> **மாயையே – மனத்**
> **திண்மையுள்ளாரை நீ செய்வது**
> **மொன்றுண்டோ! – மாயையே!”[2]**

என்ற பாடலின் வாயிலாக பொய்க்காட்சி, புலனின்பம் ஆகியவற்றைத் தாண்டி உயிர் இறைவனைச் சேர்தலை அறியமுடிகின்றது.

| தத்துவ உள்ளுறை | | குயின் பாட்டின் |
|---|---|---|
| குயில் | - | சீவான்மா (உயிர்) |
| கவிஞன் | - | பரமாத்மா (கடவுள்) |
| குரங்கு | - | மனம் |
| மாடு | - | ஐம்பொறி |
| ஞானம் (மெய்யறிவு) | - | உடைவாள் |
| ஏனைய பறவைகள் | - | உலகியல் |
| சோலை | - | பிரபஞ்சம் |
| நான்கு நாள் | - | சீவன் பக்குவம் |

என்பதன் வாயிலாக குயில் - சீவான்மாவாக, கவிஞன் - பரமாத்மா, குரங்கு - மனம், மாடு - ஐம்பொறி, உடைவாள் - ஞானம், ஏனைய பறவைகள் - உலகியல், சோலை - பிரபஞ்சம், நான்கு நாள் - சீவான்மா பக்குவம்

பெறுவதற்குரிய காலம் என்னும் வகையில் தத்துவம் அடங்கியிருப்பதனை உணரமுடிகின்றது.

**சித்தாந்த உள்ளுறை**

" ஆணவம் கர்மம் மாயை என்ற மும்மலங்களில் காதலினை மாயை என்றே கூறலாம் என்பதற்கு எடுத்துக்காட்டாக,

> **"ஆணவம் கர்மம் மாயை என்ற**
> **மும்மலங்களில் காதலை மாயா**
> **சக்தியாகவும் ஆவணம், கன்மம்,**
> **பொருத்த முடைத்தாம்"[3]**

என்ற பாடலின் வழி காதலை மும்மலங்களுடன் ஒப்பிட்டுள்ளார்.

| சைவ சித்தாந்த நோக்கு | | குயில்பாட்டு |
|---|---|---|
| மாயை | - | காதல் |
| ஆணவம் | - | மாடன் |
| கன்மம் | - | குரங்கு |
| பசு | - | குயில் |
| பதி | - | சேர இளவரசன் |

என்றும் குறிப்பிட்டுள்ளார்.

**கற்பனை வீச்சு**

குயில்பாட்டு எல்லா எல்லைகளையும் தாண்டிச் செல்கிறது குயில் குரங்கைப் பாராட்டுகிறது என்பதை,

> **"வேகமுறத் தாவுகையில் வீசி எழுவதற்கே**
> **தெய்வம் கொடுத்த திருவாலைப் போலாமோ?**
> **சைவசுத்த போசனமும், சாதுரியப்**
> **பார்வைகளும்**
> **வானரர்போற் சாதியொன்று மண்ணுலகின்**

**மீதுளதோ?"[4]**

இப்பாடலின் வாயிலாக கற்பனையாக குரங்கின் வால் திரு என்ற அடைமொழி பெறுகின்றதை காணமுடிகின்றது.

**இருளும் ஒளியும்**

காலைப் பொழுதில் இளவெயிலானது மேகத்தில் பல நிறங்களை கொண்டுள்ளது என்பதை கற்பனையாக,

**"தங்கம் உருக்கித் தழல் குறைத்துத் தேனாக்கி**

**எங்கும் பரப்பியதோர் இங்கிதமோ?"[5]**

என்ற வரியின் வாயிலாக காலை நேரத்தில் சூரியனின் வெயிலால் மேகங்கள் பல நிறமாக காட்சித் தருவதை என்று சித்தரித்துள்ளதன் வழி உணரமுடிகின்றது.

**இறைவனின் தன்மை**

குயில்பாட்டு ஒரு வேதாந்தம் உரைக்கும் நூலாகும். புல இடங்களில் இறைவனின் தன்மைகளாக உள்ள செய்திகளையெல்லாம் மிக அழகாகவும் செறிவாகவும் கூறுகின்றார். இறைவன் எங்கும் நிறைந்துள்ளார் இறைவன் என்பதனை பாரதியார் கூறும்பொழுது,

**"கொம்புக் குயிலுருவம் கோடிபல கோடியாய்**

**ஒன்றேயதுவாய் உலகமெல்லாம் தோற்றமுறச்**

**சென்றே மனை போந்து"[6]**

இப்பாடலின் வாயிலாக இறைவன் ஓர் உருவம் ஒரு நாமம் என்று இல்லாமல் எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்துள்ளார் என்கின்றார்.

**"தூணிலும் இருப்பான் துரும்பிலும் இருப்பான்"[7]**

என்று கூறுவது போலவே இத்தகைய சிந்தனையை ஒட்டியே இறைவன் எங்குமுள்ள தன்மையைக் கவிஞர் காதல் வாயிலாக உணர்த்தியுள்ளார் என்பதை அறியமுடிகின்றது.

**ஒளிவடிவான இறைவன்**

உலகின் மூலப் பொருளான தனித் தன்மை பொருந்தியவனான இறைவனை எண்ணித் தனித்து தவம் செய்யும் சான்றோர்கள் அவ்விறைவனின் அருளே ஒளியென்று கூறுவதை, உள்ளுறையாக

**"படைப்புக் கடவுளே! நான் முகனே,**
**பண்டே உலகு படைத்தனை நீ என்கின்றார்**
**நீரைப் படைத்து நிலத்தைத் திரட்டி வைத்தாய்,**
**நீரைப் பழைய நெருப்பிற் குளிர்வித்தாய்,**
**காற்றை முன்னே ஊதினாய் காணரிய வானவெளி**
**தோற்றுவித்தாய், நின்றன் தொழில் வலிமை யாரறிவார்"[8]**

இப்பாடலின் வாயிலாக ஒவ்வொரு பொருளின் இயக்கத்திற்கும் வெப்பம் குறிப்பிட்ட அளவு தேவைப்படுகின்றது. அத்தகைய வெப்பத்தினையே தன் இயல்பாகக் கொண்டுள்ள நிலையினையே நாம் ஒளிவடிவமாகக் காண்கின்றோம் என்பதை அறியமுடிகின்றது. குயில் பாட்டின் பல இடங்களில் இறைவன் இயல்புகளை அறிந்து கொள்ளும் ஆற்றல் யாவர்க்கும் இல்லை என்கின்றார்.

**பாட்டின் உள்ளுறை**

குயில் பாட்டு கதையை பாரதியார் பகலில் தோன்றிய நெடிய கனவு என்று குறிப்பிடுவதை,

**"பட்டப் பகலிலே தோன்றும் நெட்டைக்கனவு"**
**"சோலை குயில் காதல் சொன்னகதை அத்தனையும்**
**மாலை யழகின் மயக்கத்தால் உள்ளதே**
**தோன்றியதோர் கற்பனையின் சூழ்ச்சி என்றே கண்டு கொண்டேன்"[9]**

என்ற வரியின் வாயிலாக குயில் பாட்டு ஒரு கனவில் எழுந்த கற்பனை கதை அவற்றை வேதாந்த முறைப்படி உள்ளுறை ஆக்கி பாடுவதே கவிஞரின் விருப்பம் என்பதை,

**"ஆன்றே தமிழ் புலவீர் கற்பனையே யானாலும்**

**வேதாந்த மாக விரித்துப் பொருளுரைக்க**

**யாதானும் சற்றே இடமிருந்தாற் கூறீரோ"[10]**

என்ற வரியின் வாயிலாக பாட்டை ஒரு புதிர்! என்கிறார். புதிர் போட்டு முடிப்பதுபோல், கற்பனைக் காவியத்திற்கு வேதாந்தப் பொருள் இருக்க வேண்டும். வேதாந்தப் பொருளே **'உள்ளுறை'** யானது ஆன்மிக பொருளாக அமைந்துள்ளமையினை உணரமுடிகின்றது.

**உள்ளுறை**

குயில் குரங்கினிடம் காதல் மொழி பேசும் போது, குரங்கே மனிதரை விட மேலானதாக உள்ளுறைக் கூறப்படுவதை,

**"பாகையிலே வாலிருக்கப் பார்த்ததுண்டு**

**கந்தைபோல்,**

**வேகமுறத் தாவுகையில் வீசி எழுவதற்கே**

**தெய்வங் கொடுத்த திருவாலைப் போலாமோ?**

**சைவசுத்த போசனமும் சாதுரியப் பார்வைகளும்**

**வானரர் போற் சாதியொன்று மண்ணுலகின் மீதுளதோ?"[11]**

இவ்வரியின் வாயிலாக மனிதர்களின் காதலை விட குரங்கின் காதல் உயர்ந்தது என உள்ளுறை எடுத்துரைக்கின்றது.

**ஒளியைப் போற்றல்**

இறைவனே ஒளியின் வடிவம் என்பதை,

**"பண்ணில் இனிய பாடலோடு பாயும்**

**ஒளியெலாம்**

**பாரில் எம்மை உரிமைகொண்டு பற்றி**

**நிற்கவே"**[12]

என்ற பாடலின் வாயிலாக வீசும் காற்றில், நெருப்பில், வெளியில் என எல்லா இடங்களிலும் இறைவனே ஒளி, ஒலி வடிவாகவும் வணங்கும் வழக்கம் குயில் பாட்டின் உள்ளுறையாக அமைந்துள்ளது.

**முடிவுரை**

பாரதியாருக்கு தோன்றிய நெடிய கனவின் வெளிப்பாடே குயில்பாட்டு அதில் குயில்பாட்டை உள்ளுறை தத்துவமாகவும் தெய்வம் குறித்த மாயையும், சித்தாந்த கருத்தையும் கற்பனை நயத்தையும், ஒளி வடிவமான இறைவன் பற்றிய செய்தியையும் இவ்வியலின் வாயிலாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. ந. சுப்புரெட்டியார் குயில்பாட்டு - ப.எ. – 60
2. பாரதியார் கவிதைகள் (மாயைப் பழித்தல்) - ப.எ. - 1
3. பாரதியார் வரலாறும் கவிதையும் - ப.எ. – 110
4. குயில்பாட்டு மூலமும் உரையும் - ப.எ. – 28
5. மேலது - ப.எ. – 35
6. ந. சுப்புரெட்டியாா குயில்பாட்டு - ப.எ. – 47
7. குயில்பாட்டு மூலமும் உரையும் - ப.எ. – 43
8. ந. சுப்புரெட்டியாா குயில்பாட்டு - ப.எ. – 59
9. மேலது - ப.எ. – 60
10. குயில்பாட்டு மூலமும் உரையும் - ப.எ. – 28
11. மேலது - ப.எ. – 32
12. மேலது – ப.எ. - 20

## முடிவுரை

பாரதியாரின் கவிதையில் குயில் பாட்டு மிகவும் விந்தையானது. உயிருள்ள குயில்களுக்கும் உணர்வுண்டு என்பதை மிகவும் அழகாக எளிமையாக பதிவுசெய்துள்ள பாரதியின் புலமையை, ந.சுப்புரெட்டியார் ஆழமாக கூர்ந்து நோக்கியுள்ளமையை இவ்ஆய்வின் வாயிலாக உணரமுடிகின்றது.

குயிலும் காதலும் என்னும் முதல் இயலின் வாயிலாக மானுட காதல் போல் மற்ற உயிர்கள் இடத்தும் அன்பு உணர்வு மேலோங்கியிருந்தமையை அறிய முடிகின்றது.

“இசை கேட்டால் புவி அசைந்தாடும்” இசை இவ்வுலகை மட்டுமின்றி இறைவனையே சுட்டி இழுக்கவல்லது. அப்படியிருக்க சாதாரண மனிதர்கள் இதை அவ்வளவு எளிதாகக் கடந்து செல்ல இயலாது என்பதினை குயில் பாட்டின் இசைநயம் என்ற இவ்வியல் சுட்டியுள்ளதன் வழி உணரமுடிகின்றது.

காதல் நிலைப்பட்ட மனது பலநிலைகளிலும் துன்பம் ஏற்பட்டதனால் அவதிப்படுகின்றது. எங்கும் குயிலின் உருவம் காண்பதால் நான் பட்ட பாட்டினை தாளம் படுமோ? தறிபடுமோ? யார் தான் படுவார்களோ என்று கூறுவதன் வாயிலாக கவிஞரின் காதல் உள்ளத்தை மூன்றாம் இயலின் வாயிலாக அறியமுடிகின்றது.

குயில்பாட்டில் பொதிந்துள்ள உள்ளுறையை நான்காம் இயலின் வழி இனம் காணமுடிகின்றது.

ஆன்மா உண்மையினையும் அழகினையும் நாடிச்செல்லும் துணிவினைக் குயில்பாட்டில் காண்கின்றோம். கவிதை கவிதைக்காகவே கனிகின்ற போக்கு தென்படுகின்றது. அறிவுரை என்பது இல்லை என்ற உத்தியினை இவ்வாய்வு உணர்த்த முற்படுகின்றது.

# துணை நூற்பட்டியல்

**முதன்மை ஆதாரம்**

**1. சுப்புரெட்டியார்.ந** - குயில்பாட்டு - ஒரு மதிப்பீடு
(பாரதியார் நூற்றாண்டு வெளியீடு)
சுப்புரெட்டியார்.ந 100
13/5 அண்ணா நகர்
சென்னை - 600 040
முதற் பதிப்பு - 1982

**துணைமை ஆதாரங்கள்**

2. **இராசகோபாலன்** - கண்ணன் என் கவி
பூங்கொடிப் பதிப்பகம்
மயிலாப்பூர்
சென்னை - 600 004.
முதற் பதிப்பு - ஜூலை 1981

**3.சிவஞானம் ம.பொ.** - பாரதியார் பற்றி ம.பொ.சி. பேருரை
பெருமாய் புத்தகாலயம்
5 ஸ்ரீ பாலகணேஷ், அப்பார்ட் மெண்ட்,
மேற்கு மாம்பலம்,
சென்னை - 600 033.
முதற் பதிப்பு - 2010.

4. **சுப்பிரமணிய பாரதியார்** - சுப்பிரமணிய பாரதியார் கவிதைகள்
(வானவில் பிரசுரம், சென்னை - 36)
முதற் பதிப்பு - 1980.

**5. துரைசாமி பிள்ளை. சு** - பதிற்றுப்பத்து மூலமும் உரையும்
சாரதா பதிப்பகம்
கிருஷ்ணாபுரம்தெரு,
ராயப்பேட்டை, சென்னை - 14,
முதற் பதிப்பு - டிசம்பர் 2008.

**6. புலியூர்க் கேசிகன்** - அகநானூறு
தெளிவுரை
பாரி நிலையம்
சென்னை
முதற் பதிப்பு - 1960

**7. மாணிக்கவாசகன். ஞா** - சிலப்பதிகாரம் தெளிவுரை
உமா பதிப்பகம்
பவளக்காரத் தெரு,
மண்ணடி, சென்னை - 600 001
பத்தாம் பதிப்பு – ஜனவரி 2019.

**8. டாக்டர் வரதராசனா். மு** - திருக்குறள் தெளிவுரை
முதற் பதிப்பு - மே 1959.

**9. கழக வெளியீடு** - குறுந்தொகை மூலமும் உரையும்
முல்லை நிலையம்
9 பாரதி நகர் முதல் தெரு, தி. நகர்,
சென்னை - 17
முதற் பதிப்பு - ஜுன் 2000.

**10. நாராயணவேலுப்பிள்ளை.எம்** - பதினெண் கீழ்கணக்கு நூல்கள்
நர்மதா பதிப்பகம்
தியாகராய நகர், சென்னை - 17.

# NSR100
# KAMATCHI AMMAL
# FELLOWSHIP

## MA Students in Tamil

Fellowship



Awarded to :

## ப விஜயலட்சுமி

(பதிவு எண்: 20201006)

காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
திருச்சிராப்பள்ளி ~ 620 018

உதவித்தொகையும், நூலைத் தேர்ந்தெடுக்க ஆலோசனையும்,
தேர்ந்தெடுக்கப்பெற்ற நூலும் வழங்கப்பெற்றன.

ஆய்வேட்டின் தலைப்பு: புதிய பார்வையில் மூவர் தேவாரம்

பேராசிரியரின் நூல்: *மூவர் தேவாரம் – புதிய பார்வை*

பல்கலைக்கழகம்: பாரதிதாசன்

நெறியாளர்: முனைவர் வி கவிதா

பட்டம்: முதுகலை (தமிழ்)

வருடம்: 2020–2022



*www.nasubbureddiar100.in*

# புதிய பார்வையில் மூவர் தேவாரம்

திருச்சிராப்பள்ளி, காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
முதுகலைத் தமிழ் இலக்கியப் பட்டத்திற்காக அளிக்கப்பெறும் திட்டக்கட்டுரை.


**ஆய்வாளர்**

**ப. விஜயலட்சுமி**

பதிவு எண் : 20201006

**நெறியாளர்**

**முனைவர். வி. கவிதா, எம்.ஏ., எம்.பில்., பி.எட்., பி.எச்.டி**

இணைப்பேராசிரியர்

தமிழாய்வுத்துறை

காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)






**காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

(தேசியத் தர நிர்ணய மறுமதிப்பீட்டில் மூன்றாம் சுற்று “A” தகுதி பெற்றது)

திருச்சிராப்பள்ளி - 620 018

மார்ச் - 2022

## நன்றியுரை

புதிய பார்வையில் மூவர் தேவாரம் என்ற தலைப்பில் இத்திட்டக்கட்டுரை எழுதவாய்ப்பளித்த காவேரி மகளிர் கல்லூரி(தன்னாட்சி)க்கு முதற்கண் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். முதுகலைத் தமிழ் இலக்கியம் பயில எனக்கு வாய்ப்பளித்த காவேரி மகளிர் கல்லூரி ரெட்டி கல்வி அறக்கட்டளையினருக்கும், எம்மை வழிநடத்தும் எம் கல்லூரி முதல்வர் முனைவர் வெ.சுஜாதா அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாய்வுக் கட்டுரை சிறப்பாக அமையும் நோக்கில் ஆய்வு தொடர்பான கருத்துக்களை வழங்கி என்னை வழிநடத்தி, கட்டுரையைச் செம்மைப்படுத்திய எம் நெறியாளர், பேராசிரியர் முனைவர் வி.கவிதா அவர்களுக்கு எனது நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

ந. சுப்புரெட்டியார் அவர்களின் படைப்பில் ஆய்வு செய்ய வாய்ப்பளித்து, காமாட்சி அம்மாள் உதவித்தொகை நல்கிய ந.சுப்புரெட்டியார் நூற்றாண்டு நினைவு அறக்கட்டளையினருக்கும் எம் நெஞ்சார்ந்த நன்றியினை சமர்ப்பிக்கின்றேன்.

ஆய்வுக்கு உதவி ஊக்கம் அளித்த தமிழாய்வுத்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் என் நன்றி.

என் குடும்ப உறுப்பினர் அனைவருக்கும் நன்றி.ஆய்வு தொடர்பான அனைத்து நூல்களையும் தந்து உதவிய கல்லூரி நூலகத்திற்கும் துறை நூலகத்திற்கும் துணை நின்ற தோழிகளுக்கும் நன்றி.

ஆய்வாளர் கையொப்பம்

ப.விஜயலட்சுமி

## பொருளடக்கம்

# முன்னுரை

தமிழ்நாடு திருச்சி மாவட்டம் பெரகம்பி என்ற ஊரில் எளிய வேளாண்மைக் குடும்பத்தில் பிறந்தவர். டாக்டர் ந.சுப்புரெட்டியார் திருச்சி சூசையப்பர் கல்லூரியில் முதுகலைப் பட்டமும் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டம் பெற்றவர்

திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் 1960இல் துறையை நிறுவி 17 ஆண்டுகள் பணியாற்றினார். தமிழறிஞர், எழுத்தாளர், பேராசிரியர் என, பன்முகம் கொண்ட இவரது 135 நூல்களையும் தமிழக அரசு தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சித் துறையின் கீழ் 2008,2009 ஆம் ஆண்டில் நாட்டுடையாக்கியது.

சுப்புரெட்டியார் அவர்கள் திரு.வி.க விருது, திருக்குறள் விருது, டாக்டர் இராதாகிருஷ்ணன் விருது, கலைமாமணி விருது போன்ற விருதுகளைப் பெற்றுள்ளார்.

இவர் இயற்றிய நூல்களுள் ஒன்றான மூவர் தேவாரம்-புதிய பார்வை என்ற நூலில், பேராசிரியர் மூவர் தேவாரத்தை ஆய்ந்து உள்ள விதத்தினை எடுத்துரைப்பதே இக்கட்டுரையின் நோக்கமாக அமைகிறது.

தேவாரம் பாடிய மூவரின் வரலாறு மற்றும் அவர்கள் இயற்றிய அற்புதச்செயல்கள் ஆகியவற்றை மட்டுமன்றி தேவாரப் பாடல்களின் பண் அமைப்புபற்றியும் ஆய்ந்து உள்ளமை நோக்கத்தக்கது.

**ஆய்வுத் தலைப்பு**

புதிய பார்வையில் மூவர் தேவாரம் என்பது இவ்வாய்வுத் தலைப்பு ஆகும்.

**ஆய்வு நோக்கம்**

ந.சுப்புரெட்டியாரது " மூவர் தேவாரம் புதிய பார்வை " என்னும் நூல் வாயிலாக தேவாரத்தைப் புதிய நோக்கில் பேராசிரியர் ஆராய்ந்துள்ளார் என்பதை எடுத்துரைப்பது இவ்வாய்வின் நோக்கமாகும்

**ஆய்வு கருதுகோள்**

தேவாரத்தை புதிய நோக்கில் அமைந்துள்ள பேராசிரியரின் நோக்கத்தை எடுத்துரைப்பது இவ்வாய்வின் கருதுகோள் ஆகும்

**ஆய்வு எல்லை**

ந. சுப்புரெட்டியாரின் மூவர் தேவாரம்- புதிய பார்வை என்னும் நூல் இவ்வாய்வு எல்லையாக அமைகின்றது.

**ஆய்வுமுறை**

இவ்வாய்வு பகுப்பு மற்றும் விளக்கமுறை ஆய்வாக அமைகின்றது.

**ஆய்வுப் பகுப்பு**

முன்னுரை, முடிவுரை நீங்கலாக மூன்று இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது

அவை

இயல்-1 திருமுறைகள் தொகுப்பு முறை

இயல்-2 மூவர் முதலிகள்

இயல்-3 பண்சுமந்த தேவார

**இயல்-1**

திருமுறைகளைத் தொகுத்த வரலாறு, தேவாரம். தேவபாணி சொல் விளக்கம். வரலாறு போன்ற செய்திகள் முதல் இயலில் இடம்பெற்றுள்ளன

**இயல்-2**

தேவாரம் பாடிய மூவரின் வாழ்க்கை வரலாறு, அவர்கள் பாடிய பதிகங்கள், அற்புதச் செயல்கள் ஆகியவை இவ்வியலில் எடுத்துரைக்கப் பட்டுள்ளன

**இயல்-3**

தேவாரப் பாடல்களின் அமைப்பு முறை, கட்டளை ,யாப்பு முறை ஆகியவை இதில் கூறப்பட்டுள்ளன

**முதன்மை ஆதாரம்**

ந.சுப்பு ரெட்டியாரின் மூவர் தேவாரம் புதிய பார்வை என்ற நூல் முதன்மை ஆதாரம் ஆகும்.

**துணைமை ஆதாரம்**

மூவர் தேவாரம் பற்றிக் கூறும் நூல்கள் துணைமை ஆதாரங்களாக எடுத்துக்கொள்ளப்படுகின்றன

# இயல் 1

## திருமுறைகள் தொகுப்பு முறை

சைவத்தில் ஆழமான அறிவு கொண்ட பேராசிரியர்,பன்னிரு திருமுறைகளை தொகுத்த வரலாற்றினை“ மறைந்த நிலையும் தொகுப்பு முறையும் “என்ற தலைப்பில் எடுத்துரைக்கின்றார். இராசராசசோழன் தேவாரப் பதிகங்களை, சிவனடியார்கள் பாடக் கேட்டு மெய் சிலிர்த்து அப்பாடல்களைத் தேடும் முயற்சியில் ஈடுபடுகிறான். அப்பொழுது நம்பியாண்டார் நம்பியைப் பற்றி கேள்வியுறுகிறார். நம்பியாண்டார் நம்பி, தந்தை இல்லாத வேளையில் பிள்ளையாருக்கு திரு அமுது செய்வித்ததையும் அவரைப் பொல்லாப் பிள்ளையார் ஆட்கொண்ட வரலாறும் கூறப்படுகிறது. நம்பியைப் பற்றி அறிந்த மன்னன் அவரிடம் தேவாரப் பதிகங்களை தொகுக்க வேண்டுகிறான். நம்பி மன்னன் வேண்டுகோளுக்கிணங்க **”தேவாரத் திருமுறைகள் இருக்குமிடத்தையும் திருத்தொண்டர்களுடைய வரலாறுகளையும் அடியேனுக்கு அருளிச் செய்தல் வேண்டும்”1**

என்று வேண்ட, பிள்ளையாரும் தில்லையில் தேவாரத் திருமுறைகள் பூட்டப் பெற்றுள்ளதை தெரிவிக்கிறார் .தில்லை வாழ் அந்தணர்களின் நிபந்தனைக்கிணங்க தேவார மூவரின் திருமேனிகளை செய்து அறையைத் திறக்க ஏற்பாடு செய்து தேவாரப் பதிகங்களைப் பெறுகின்றனர். ஏடுகள் கரையான் புற்றால் சிதைந்து கிடக்கக் கண்டு வருந்தும் பொழுதுதேவாரப் பதிகங்களிலே இக்காலத்திற்கு வேண்டுவனவற்றை மாத்திரம் வைத்துவிட்டு மற்றவற்றைச் செல்லரிக்கச் செய்தோம் என்ற அசரீரி கேட்டு இறைவன் சித்தம் அதுவே ஆயின் அப்படியே ஏற்றுக்கொள்வோம் என்று மன்னன் தெளிந்து, நம்பியாண்டார் நம்பியை தமக்கு கிடைத்த திருப்பதிகங்களை,

தொகுத்துத் தருமாறு வேண்டிக் கொண்டான். சம்பந்தரது பதிகங்களை முதல் மூன்று திருமுறைகளாக அப்பர் சுவாமிகள் பதிகங்கள் நான்கு ஐந்து ஆறு திருமுறைகளாகவும் சுந்தரமூர்த்திநாயனார் பதிகங்கள் ஏழாம் திருமுறையாகவும் தொகுத்தார்.

தேவாரப் பதிகங்களுக்குரிய பண் முறையினை அறிந்து இசையுடன் பாடுவதற்காக திருநீலகண்ட யாழ்ப்பாணர் பிறந்த திரு எருக்கத்தம்புலியூர் என்ற தலத்திற்கு வந்து அங்குள்ள இறைவனை வேண்ட திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபில் பிறந்த பாடினி ஒருவருக்கு இசைத்திறன் உள்ளதாக இறைவன் வாயிலாக அறிந்து கொள்கின்றனர். அவரை தில்லைக்கு அழைத்துச் சென்று தேவாரப் பதிகங்களுக்கு பண் வகுக்கச் செய்தனர். இப்பண்களுக்குரிய கட்டளைகள் வரையறுக்கப்பட்டன. இந்த இசை மரபு இன்று வரையில் தேவாரத் திருப்பதிகங்கள் பாட, பின்பற்றப்பட்டு வருகிறது

**“திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபில் வந்த இறையருள் பெற்ற பெண் ஒருவர் ,பண்முறை கண்டு இசையமைத்தார். சோழர்கள் திருமுறைகள் அழியாது இருக்க அவற்றைச் செப்புப் பட்டயங்களில் பொறித்துப் பாதுகாத்தனர்.”2**

சைவத்தையும் வைணவத்தையும் இரு கண்களாகப் போற்றுபவர் சுப்புரெட்டியார் என்பது, இந்த நூலில் திருமுறைகள் தொகுப்பு முறை பற்றிப் பேசுகையில் நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தினை நாதமுனிகள் எவ்வாறு தொகுத்துள்ளார் என்று விளக்கமாக எடுத்து உரைப்பதன் வாயிலாக அறிய முடிகிறது. தேவாரத் திருப்பதிகங்களை தொகுக்கையில் அவற்றைப் பாடிய ஆசிரியர்களின் குலம், வயது ஆகியவற்றை கருதாது அவர்கள் வீடுபேறு அடைந்த நிலையினை எண்ணி தொகுக்கப்பட்டுள்ளது என்ற செய்தியை ஆசிரியர் கூறுகிறார்.

”திருஞானசம்பந்தரே முதன்முதலாக தோடுடைய செவியன் என இறைவனைப் பாடியமையாலும் இறைவன் திருவடியில் அவரே முதலில் கலந்தவர் ஆதலாலும் அவரது திருப்பதிகங்கள் முதல் மூன்று திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ளன என்றும் திருஞானசம்பந்தர் திருநல்லூர்ப் பெருமணத்தில் இறைவனடியில் கலந்த பின்னரே, திருப்புகலூரில் அப்பர் இறைவனடியை கலந்தாராதலால் அவரது பாடல்கள் திருஞானசம்பந்தர் அருளிய திருமுறைகளையடுத்து நான்கு முதல் ஆறு வரையுள்ள திருமுறைகளாகவும் இருவருக்கும் காலத்தால் பிற்பட்ட சுந்தரர் தேவாரம் அவற்றிற்கு பின்னர் ஏழாம் திருமுறையாகவும் வகுக்கப் பெற்றன என்றும் தேவார ஆசிரியர் மூவரும் ஒருவர் பின் ஒருவராக சிவபதம் அடைந்த கால முறையே இத்தகைய வரிசைமுறைக்குக் காரணமாகும் என்றும் அறிஞர் கூறுவர். ”3

என்ற கருத்து ஆசிரியரின் கூற்றிற்கு வலிமை சேர்ப்பதாக அமைகிறது. தேவாரப் பாடல்களில் தொகையினை பட்டியல் வடிவத்தில் தருகிறார், ஆசிரியர். “தேவாரம் “ எனும் பெயர் எப்பொழுது வழங்கத் தொடங்கியது என்ற வரலாற்றையும் ஆராய்ந்துள்ளார் ஆசிரியர்.

**“மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும்**
**தேவாரம் செய்த திருப்பாட்டும்”4**

இரட்டையர்கள் பாடிய ஏகாம்பரநாதர் உலாவில்தான் “தேவாரம் செய்த திருப்பாட்டு“ என்ற சொல் முதன் முதலில் இடம்பெறுகின்றது ஆனால் இங்கு தேவாரம் செய்த என்று வினை நிலையில் வைத்து கூறப்பட்டதால் திருப்பாட்டு என்பது மூவர் பாடிய பாடல்களையும் தேவாரம் செய்த என்ற சொல் அவர்கள் பாடிய தொழிலையும் குறிப்பதாகக் கொள்ள வேண்டியதாகிறது.

ஆனால் முதன்முதலில் திருப்பதிகங்களை தேவாரம் என்ற பெயரால் வழங்கியவர் எல்லப்பநாவலர், இதனை

**"வாய்மை வைத்த சீர்திருத்**
**தேவார மும்திரு வாசகமும்**
**உய்வைத் தரஞ்செய்தநால்வர்**
**பொற்றாள் உயிர்த் துணையே" 5**

என்ற திருவருணைக் கலம்பகத்தின் காப்புச் செய்யுளின் வாயிலாக அறியலாம். கிபி 11ஆம் நூற்றாண்டுக்கு முன்னர் தேவாரம் எனும் சொல் வழிபாடு என்ற பொருளில் வழங்கியதாகக் கூறும் ஆசிரியர் மேலும் "தே" என்பது தெய்வம் என்னும் பொருளைக் குறித்து வழங்கும் ஓரெழுத்தொரு மொழி. "வாரம்" என்பது இசையின் கூறுபாட்டினைக் குறித்து வழங்கும் தமிழ்ச் சொல். வாரமாவது முதல் நடை, வாரம், கூடை, திரள் என்னும் இசை இயக்கம் நான்கனுள் ஒன்று"6 என சொல்லாராய்ச்சி செய்கிறார். சிவனைப் பாடும் பாடல்கள் தேவாரம் என்று வழங்குவதைப் போல திருமாலைப் பாடுவது தேவபாணி எனப்படும். இத் தேவபாணி என்ற சொல்லுக்கான விளக்கமாக "தெய்வத்தை முன்னிலையில் வைத்துப் பரவிய பாடலே தேவபாணி என வழங்கும் சிறப்புடையதாகும்" 7

என்று உரைக்கிறார். மேலும் பல சான்றுகள் தந்து தேவபாணி என்னும் பெயரை ஒட்டியே தேவாரம் என்ற பெயர் வழங்கியிருக்க வேண்டும் என்ற கூற்றை முன்வைக்கிறார்

**சான்றெண் விளக்கம்**

1. மூவர் தேவாரம் புதிய பார்வை ப.எண் 6
2. சைவமும் தமிழும் ப .எண் 25
3. சைவ சமயம் வரலாற்றுப் பார்வை ப .எண் 27
4. மூவர் தேவாரம் புதிய பார்வை ப.எண் 14.
5. மேலது ப.எண் 15
6. மேலது ப.எண்17
7. மேலது ப.எண்19

# இயல் 2

## மூவர்முதலிகள்

சைவ சமயத்தின் இலக்கியமான பன்னிரு திருமுறைகளுள் முதல் ஏழு திருமுறைகளை தேவாரம் என்பர்.

தேவார மூவர் என்பது தேவாரத்தினைப் பாடிய மூன்று நபர்களைக் குறிப்பிடும் சைவசமயச்சொல்லாக்கமாகும். இவர்களை மூவர், மூவர்முதலிகள் என்றும் அழைக்கின்றனர். இவர்கள் பாடிய தேவாரத் தொகுப்பு மூவர் தேவாரம் எனப்படும்

**திருஞானசம்பந்தர்:**

**"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்**
**பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத**
**சீதவள வயற்புகலித் திருஞானசம்பந்தர்**
**பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்"**

பெரியபுராணம்

தமிழ் பக்தி இலக்கிய மரபில் பல்வேறு புதிய சொல் நெறிகளை உருவாக்கியவர். இவர் பாடிய பாடல்கள் முதல் மூன்று திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டுள்ளன.

"திருஞானசம்பந்தர் அருளிய பதிகங்களுள் இன்று நமக்குக் கிடைத்துள்ளவை 384பதிகங்கள்.பாடல் தொகை 4158. இவற்றுள் முதல் திருமுறையுள் 136பதிகங்களும்,1469பாடல்களும் இடம் பெற்றுள்ளன. 96 தலங்கள் இத்திருமுறையில் தேவாரப் பாடல் பெற்றுச் சிறந்துள்ளன. நட்டப்பாடை(22), தக்காரகம் (24), பழந்தக்கராகம் (8), தக்கேசி (12), குறிஞ்சி

(24), வியாழக்குறிஞ்சி (25), மேகராகக்குறிஞ்சி(7), ஆகிய 7பண்களும் யாழ் மூரி என்ற ஒருபதிகமும் முதல் திருமுறையுள் இடம் பெற்றுள்ளன.”1

பண், தாளம் ஒழுங்கை உடைய இசைப்பாடலாக இவை உள்ளன. தமிழ் மரபில் தேவார மூவரின் எண்ணற்ற திருத்தலங்கள் இலக்கிய வகைகள் யாப்பு வகைகள் பண் வகை சந்த வகை என்பனவற்றில் தன் பாடல்களை பாடியவர் இவர்.

“தமிழிலக்கிய மரபில் மிகுதியான சோதனை முயற்சிகளில் புதுசெய்து இவர் பாடியதால் இவர் பாடல்களைச் சேக்கிழார் மூல இலக்கியம் என்று குறிப்பிடுகிறார்.”2

**திருவவதாரம்**

சோழவள நாட்டிலே, தஞ்சை மாவட்டத்திலே, சீர்காழிப் பதியிலே, அந்தணர் மரபிலே, கவுணியர் குலத்திலே சிவபாத இருதயரும் பகவதி அம்மையாரும் வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறை விளங்க இல்லறம் நடத்தி வந்தனர். அவ்விருவரது பெருந்தவத்தால் கிபி 7ஆம் நூற்றாண்டில் அவ்விருவருக்கும் மகவாய்த் தோன்றினார். திருஞானசம்பந்தர். அவதரித்த நாளோ சிவபெருமானுக்கு உகந்த திருவாதிரைத் திருநாள்.

**ஞானப்பால் உண்டமை**

ஞானசம்பந்தப் பிள்ளையார் மூன்றாண்டு நிறையப் பெற்றார். நீராடச் சென்ற தந்தையாருடன் தாமும் திருக்குளம் சார்ந்தார். சிவபாத இருதயர் மைந்தனைக் கரையில் அமரச் செய்து நீருள் மூழ்கி அகமருடன ஜெபம் செய்தார். தந்தையைக் காணாமையாலும், முன்னைத்தவம் தலைக்கூடியதாலும் திருத்தோணிச் சிகரம் பார்த்து ”அம்மே! அப்பா!” என்று அழைத்தருளி அழுதருளினார். திருத்தோணிபுரப்பெருமான் உமாதேவியாரோடு விடை மீதமர்ந்து திருகாட்சி கொடுத்தனர்.“உவமையிலாக் கலைஞானமும்

உணர்வரியா மெய்ஞ்ஞானமும் கலந்த திருமுலைப்பால் ஊட்டுவாயாக“ எனப் பெருமான் பணித்தார். அப்படியே பெருமாட்டியும் “எண்ணரிய சிவஞானத்து இன்னமுதம் குழைத்தருளி உண் அடிசில்“ என ஊட்டினார். ஞானம் உண்ட பிள்ளையார் சிவஞானச் செல்வராய்த் திகழ்ந்தார். நீராடிய சிவபாத இருதயர், பால்வழிய நின்ற பிள்ளையைப் பார்த்து யார் கொடுத்த எச்சிற்பாலை உண்டாய் எனக் கோல்கொண்டோங்கினார். உடனே ஞானசம்பந்தர் தனக்குப் பால் கொடுத்த பரம்பொருளை அடையாளங்களுடன் சுட்டித் ”தோடுடைய செவியன்” என்ற திருப்பதிகம் பாடினார்.

**பொற்றாளமும் முத்துச் சிவிகையும் பெறல்**

சிலநாள் கழித்துத் திருக்கோலக்காவிற்கு எழுந்தருளினார். கையினால் தாளம் இட்டு ”மடையில் வாளை” என்ற திருப்பதிகம் பாடினார். பாட்டிற்கு உருகும் பரமன் கை நோவுமென்று ஐந்தெழுத்து வரையப்பெற்ற பொற்றாளம் அளித்தருளினார். இவர் பெருமை கேட்ட மக்கள் தங்கள் தங்கள் ஊருக்கு எழுந்தருள வேண்டினர். முதலில் தமது தாய் பிறந்த ஊராகிய திருநனிபள்ளி சார்ந்தார். பிள்ளையார் பெருமையைக் கேள்வியுற்ற திருநீலக்கண்ட யாழ்ப்பாணர், தமது மனைவியோடும் சீர்காழிக்கு வந்து தரிசித்தார். அவரது பாடல்களுக்குத் தாம் யாழ்வாசித்தார். அது முதல் பிள்ளையாருடனிருந்து பிள்ளையார் பாடல்களை எல்லாம் யாழில் அமைத்து வாசித்து வரலானார். திருஞானசம்பந்தர், சிதம்பரம் முதலிய பல தலங்களையும் தரிசித்து நடுநாட்டில் உள்ள திருநெல்வாயிலரத்துறை சார்ந்தார். களைப்பினால் மாறன்பாடியில் அமர்ந்து அன்றிரவு நித்திரை செய்தார்.அரசுத்துறைப் பெருமான் முத்துச்சிவிகை, முத்துக்குடை, சின்னம் முதலியவற்றை அருளினார். அருளவே இறையருள் பெற்ற ஞானசம்பந்தர் ”எந்தை ஈசன் எம்பெருமான்” என்ற திருப்பதிகம் பாடிப் பரவினார்.

**உபநயனம்**

பிறகு உபநயனப் பருவத்தில் உலகியலுக்கேற்ப ஞானசம்பந்தருக்கு உபநயனம் நடைபெற்றது. ஓதாதே வேதம் உணர்ந்த உயர்ஞானசம்பந்தர், அங்கு வந்திருந்த மறையோர் கட்கு உள்ள ஐயங்களை அகற்றி வேத முடிவாகிய ஐந்தெழுத்தின் பெருமையைத் ”துஞ்சலும் துஞ்சலிலாத போழ்தினும்” என்ற திருப்பதிகம் பாடி விளக்கி அருளினார்.

**முத்துப் பந்தல் பெறல்**

திருஞானசம்பந்தரது பெருமையைக் கேள்வியுற்ற நாவுக்கரசர், ஞானசம்பந்தரைக் காண்பதற்குச் சீர்காழிக்கு எழுந்தருளினார். பிள்ளையாரும் அவரை எதிர்கொண்டழைத்தார். இருவரும் அருட்கடலும் அன்புகடலும் ஆம் எனத் திகழ்ந்தனர். பின்னர் ஞானசம்பந்தர் திருப்பாச்சிலாச்சிரமம் பணிந்து கொல்லிமழவன் மகளைப் பிடித்து நின்ற முயலகன் என்னும் நோயைப் போக்கினார். திருச்செங்கோடு என வழங்கும் திருக்கொடி மாடச் செங்குன்றூர் சென்றபோது அடியவர்களை விஷஜுரம் பற்றியது. திருநீலகண்டத் திருப்பதிகம் பாடி அவ்விஷ நோயைப் போக்கினார். பிள்ளையார்பட்டிச்சாரத்தை அடைந்தபோது வெயில் மிகுதியாயிருந்ததால் திருவருளால் சிவபூதம் ஒன்று முத்துப்பந்தல் கொடுத்தது.

**பிற அற்புதங்கள்**

பிறகு திருவாவடு துறை சார்ந்தார். தந்தையார் வேள்வி செய்வதற்கு பொருள் வேண்டினார். ஆவடுதுறை அரனை ”இடரினும் தளரினும்” என்ற பதிகத்தைப் பாடிப் போற்றினார்.பொற்கிளி பெற்றுச் சிவபாத இருதயரிடம் “தீதுநீங்கநல்வேள்வி செய்க“ எனக் கொடுத்தார். திருநீலகண்ட யாழ்ப்பாணரின் தாய் பிறந்த ஊராகிய தருமபுரம் சென்று தரிசித்தார். “மாதர்மடப்பிடியும்“ என்ற பதிகத்தால் பதிக இசை யாழிலடங்காமையை விளங்கியருளினார். திருமருகல் சேர்ந்தார். கணவனாக வர இருந்த வணிகன்

விஷம் தீண்டி இறந்ததால் கதறி அழுதாள் ஒரு நங்கை. அந்நங்கையின் துயரைத் துடைக்க எண்ணிச் ”சடையாய் எனுமால்” என்ற திருப்பதிகம் பாடி வணிகனை உயிர்பெற்று எழச்செய்தார். பிறகு திருசெங்காட்டங்குடி, திருப்புகலூர் தரிசித்தார். திருநாவுக்கரசரைக் கண்டு அவர் வாயிலாக ஆரூரில் நிகழ்ந்த ஆதிரை சிறப்பைக் கேட்டு ஆரூரானைத் தொழுதார். பிறகு அப்பரும் சம்பந்தரும் திருவீழிமிழலை சேர்ந்தனர். அவ்வூர்பெருமான் தோணியப்பரைப் போல் காட்சி தந்தனர். அதுக்கண்ட இருவரும் அவ்வூரிலேயே சிலநாள் தங்கினர். அப்பொழுது நாட்டில் பஞ்சம் உண்டாயிற்று.

பரமன் அளித்த படிக்காசு கொண்டு இருவரும் ஆயிரக்கணக்கான அடியார்களுக்குப் பறை சாற்றிச் சோறளித்தனர். பிறகு வேதாரணியம் என்னும் திருமறைக்காடு சென்றனர். நேரே கும்பிட எண்ணியவர்களாய் மறைகளால் பூசித்து அடைக்கப்பட்டிருந்த கதவினைத் திருநாவுக்கரசர் பாடலால் திறக்கச் செய்து, தாம் அடைக்க பாடினார் அது முதல் திறக்கவும் அடைக்கப் பாடினார்.அது முதல் திறக்கவும் அடைக்கவுமாக இருந்து வருகிறது அக்கதவு.

**பாண்டி நாட்டில் சைவம்**

பாண்டி நாட்டில் நெடுமாற பாண்டியன் சமண சமயம் சார்ந்து இருந்தமையை மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் என்ற இருவர் வாயிலாகத் தெரிந்து மதுரைக்குப் புறப்பட்டார். நாளும் கோளும் நலமில்லா திருந்தும் உமையொருபாகன் உள்ளத்திருப்பதால் ”அவை நல்ல நல்ல” என ஏகினார்.பாண்டியன் வெப்பு நோய் அகற்றினார். அனல் வாதத்தாலும், புனல் வாதத்தாலும் அமணர்களை வென்றார்

பாண்டி மன்னனையும், பாண்டி நாட்டு மக்களையும் சைவம் தழுவச் செய்தார். பாண்டி நாட்டில் உள்ள தலங்களைத் தரிசித்தார். சோழநாடு மீண்டார். பிறகு ”பல தலங்களைத் தரிசித்துத் திருப்பூந்துருத்தி அடைந்தார்.

அப்பர் சுவாமிகள் இவரது சிவிகையைத் தாங்கியமை அறிந்து உடனே கீழிறங்கி இருவரும் அளவளாவி இருந்தனர். திருஓத்தூரில் ஆண்பனைகளைப் பெண்பனைகளாக்கிக் காய்க்கச் செய்தார். மயிலாப்பூர் சிவநேசச் செட்டியாரின் மகள் பூம்பாவை “பாம்பு தீண்டி இறக்க“ அவளது எலும்பைக் குடத்யிலு சேமித்து வைத்தார் சிவநேசர். அதனை அறிந்த திருஞானசம்பந்தர் திருக்கோயில் முன் ஆக்குடத்தைக் கொணர்வித்து ”மட்டிட்ட புன்னை” என்ற பதிகம் பாடி உயிர்ப்பித்தார்.

**சோதியிற் கலத்தல்**

பெற்றோர் விருப்பத்திற்கிணங்கவும், வேத நெறியில் நின்று காட்டவும் ஆச்சாள்புரம் என வழங்கும் திருநல்லூர்ப் பெருமணத்தில் நம்பியாண்டார் நம்பிகள் திருமகளை மணமகளாக ஏற்று ”இந்த இல்லொழுக்கம் வந்து சூழ்ந்ததே இவன் தன்னோடும் அந்தமில்லா சிவன்தாள் சேர்வன்” என்ற கருத்தமைந்த “கல்லூர்ப் பெருமணம் என்ற பதிகம் பாடினார். பெருமானது அசரீரியின் படி மனைவியோடும் உடன் வந்தாரோடும் வைகாசி மூல நன்னாளில் அங்குத் தோன்றிய சோதியில் கலந்தார்

நம்பியாண்டார் நம்பி இவர் மீது ஆறு பிரபந்தங்களில் பாடி இவர் வாழ்க்கை வரலாற்றை ஓரளவு கூறினார். பின்னர் சேக்கிழார் பெரிய புராணத்தில் இவர் வரலாற்றை விரிவாகப் பாடினார்..

”தேவாரம் என்ற சொல் வழிபாடு, மூர்த்தம் வழிபாடு கடவுளுக்குச் சூட்டப்படும் பாமாலை, கடவுளுக்குரிய இசைப்பாட்டு என்று படிப்படியாக பொருள் வளர்ச்சி பெற்றுள்ளது. கைகளில் தாளம் ஏந்தி ஊர்ஊராகச் சென்று அன்றைய சூழலில் இப்பாடல்களை பாடிய சைவ சமயத்தை அவர் வளர்த்தார்.”3

இவரால் பக்தி இயக்கம் மக்கள் இயக்கமாக ஆக்கப்பட்டது.சமண பௌத்த சமய மேலாதிக்கத்தை எதிர்த்து அவர்களோடு வாது செய்து வைதிக சமயத்தை,அவர் மீட்டெழச் செய்தார்.

“சமயம் பரப்புவதற்காக பல்வேறு அற்புதங்களை செய்து மக்களிடம் சமய நம்பிக்கையை வளர்த்தார்.அச்செயல்களில் மனிதநேயம், சமூக உணர்வுஎன்பவை காணப்பட்டன.”4

தம் பாடல்கள் பலவற்றில் இறைவனை அன்போடு உணர்ந்து பாடுவார்க்கு வீடுபேறு எளிதாமே என்று சொன்னதை அவர் நிறுவினார்.

சமண,பௌத்த சமயங்களுக்கு மாறானதாகச் சைவ சமயத்தை அவர் வடிவமைத்தார். பிற்காலச் சைவ சித்தாந்த நூல்கள், தலபுராணம், சிற்ப நூல்கள்,இலக்கிய வகைகள், யாப்புமரபு,இசை என்ற அனைத்திற்கும் முன்னோடியாகவும் முன்மாதிரியாகவும் பாடல்கள் பாடினார்.

”பதிகம், மாலைமாற்று, மொழிமாற்று, சக்கரமாற்று, பல்பெயர்ப்பத்து ,கூடற் சதுக்கம், கோமுத்திரி அந்தாதி (வழி நடக்கும் ஆவின் பாச்சல்), வழி மொழித் திருவிராகம்,திருப்பதிக்கோவை, வினா உரை, முக்கால், ஈரடி, இயமகம்,திருப்பாசுரம் திரு இருக்குக்குறள்,திருவிராகம், ஈரடிமேல் வைப்பு,நாலடி மேல் வைப்பு, திருவெழு கூற்றிருக்கை (பிற்கால ரத பந்தம்)ஆகிய புதிய இலக்கிய வகைகளை முதன்முதலாகப் பாடியுள்ளார்.”5

பெரும்பாலானவைகளுக்கு சம்பந்தர் பெயரும் தந்துள்ளார்.சங்க காலத்திணை தெய்வ மரபிற்கு மாறாகச் சிவனைப் பரம்பொருளாக்கி உமை (கொற்றவை), முருகன், விநாயகர், ஆகியோரை, முறையே சிவனின் மனைவி, பிள்ளைகளாக்கி ஒரு குடும்ப அமைப்பில் பாடியுள்ளார்.

முதன் முதலாகச் சிவனின் மாகேசுவர மூர்த்தங்கள் (25) உட்பட சிவனின் பல்வேறு வடிவங்களையும் அவைகளுக்குப் பெயர்களையும் அவர் பாடியுள்ளார்.

சங்க அக மரபைக் குறியீடாக பயன்படுத்தி இறைவனுக்கும் உயிருக்கும் இடையே ஏற்படும் அருளியல் அனுபவத்தை விளக்கியுள்ளார். "இதன் மூலம் இறைவன் உயிர் இடையே ஏற்படும் பேரின்ப அனுபவத்தை விளக்கும் நாயக-நாயகி பாவக் கவிதை மரபை குறியீட்டுக் கவிதை மரபை அவர் முதன்முதலாக இந்திய மரபில் உருவாக்கினார்."6

**"காதலாகி கசிந்து கண்ணீர் மல்கி**

**ஓதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது**

**வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது**

**நாதன் நாமம் நமச்சி வாயவே"**

என்று அவருடைய பாடல் தமிழ் மரபில் ஐந்தெழுத்தின் பெருமையினை எடுத்துரைக்கிறது. வடமொழி வேதத்தை விடவும் தமிழ் வேதம் (திருமுறை) உயர்ந்தது.

எளிமையாக பக்தியின் மூலம் இறைவனை அடையலாம் என்று விளக்கினார்.

**திருநாவுக்கரசர்:**

திருநாவுக்கரசர் அப்பர் எனவும் அழைக்கப்படுகிறார். இவர் பாடியபாடல்கள்4,5,6திருமுறைகளாத் தொகுக்கப்பட்டுள்ளன.

"திருநாவுக்கரசர் அருளியனவாக இன்று கிடைத்துள்ள பதிகங்கள் 312. தேவாரப் பாடல்களின் எண்ணிக்கை 3066.திருநாவுக்கரசரின் நான்காம் திருமுறையில் இடம்பெற்றுள்ள பதிகங்களைத் திருநேரிசை என்று குறிப்பர்.

இத்திருமுறையுல் இடம்பெற்றுள்ள பதிகங்கள் 113.பாடல்கள் 1070.நான்காம் திருமுறையுல் 50 சிவத்தலங்களுக்கு உரிய பதிகங்கள் இடம்பெற்றுள்ளன.1.கொல்லி (1), 2.திருநேரிசை (58), திருவிருத்தம் (34), (இவ்விருவகைப் பாடல்களும் கொல்லிப் பண்ணில் சேர்க்கப்பட்டுள்ளன).3.காந்தாரம் (6), 4.பியந்தைக் காந்தாரம் (1), 5.சாதாரி (1), 6.காந்தார பஞ்சமம் (2), 7.பழந்தக்கராகம் (2), 8.பழம்பஞ்சுரம் (2), 9.சீகாமரம் (2), 10.குறிஞ்சி (1), என நான்காம் திருமுறையுல் 10 பண்கள் இடம்பெற்றுள்ளன. இத்திருமுறையில் அற்புதத் திருப்பதிகங்கள் ஒன்பது இடம் பெற்றுள்ளன."7. அவதாரம்

சைவ சமயாசாரியர் நால்வருள் இரண்டாமவராக வைத்து எண்ணப்படுபவர் திருநாவுக்கரசர். கிபி ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் நடுநாட்டில் உள்ள திருவாமூரில், சைவ வேளாளர் குலத்தில், குறுக்கையர் குடியில், புகழனார்க்கும், மாதினியார்க்கும் அருந்தவச் செல்வராய்த் திலகவதியார்க்குப் பின் தோன்றியவர். மருள்நீக்கியார் என்பது இவரது பிள்ளைத் திருநாமம். இவரது இளமைப் பிராயத்திலேயே பெற்றோர் பிரானடி சேர்ந்தனர். பெற்றோரது பிரிவாலும், பெற்றோர்களால் தமக்கு மணாளனாக உறுதி செய்யப்பட்ட கலிப்பகையார் போரில் உயிர் துறக்க நேர்ந்ததாலும் ஏற்பட்ட வருத்தத்தால் தானும் உயிர் துறக்க எண்ணினார் திலகவதியார். இஃதறிந்த மருள்நீக்கியார் தமக்கைக்கு முன்தாம் உயிர் துறக்கத் துணிந்தார். தம்பியார் உளராக வேண்டும் என வைத்த கருணையினாலே உயிர்தாங்கி மனைத்தவம் புரிந்து வந்தார் திலகவதியார்.இன்னிலையில் மருள்நீக்கியார் உயிர்க்கு உறுதி பயக்கத் தக்க சமயம் எதுவென ஆராய்ந்து சமண் சமயம் சார்ந்தார். அச்சமயத்தில், "தருமசேனர்" என்ற பட்டம் பெற்றுச் சிறப்பெய்தினார்.

இவருடைய பாடல்களில் ஆங்காங்கே சிற்சில குறிப்புக்களில் தம்மை வெளிப்படுத்திக் கொள்ளுகிறார். இவருடைய வாழ்க்கை வரலாற்றைச் சேக்கிழார் தான் விரிவாகப் பாடுகிறார்.

இவருடைய காலம் கிபி ஏழாம் நூற்றாண்டின் தொடக்கம் ஞானசம்பந்தருக்கு முன்னமே அப்பர் தேவாரம் பாடத் தொடங்கிவிட்டார்.

தம்முடைய 70ஆம் வயதில் ஞானசம்பந்தரைஇவர் சந்திக்கிறார். இருவரும் சேர்ந்தும் பின் தனித்தனியாகவும் தலங்களுக்குச் சென்று தேவாரம் பாடி சைவம் வளர்த்தனர்.

“பொதுவாக இவருடைய பாடல்களில் உணர்ச்சி மிகுதியாகக் காணப்படும் சமண சமயம் சார்ந்து பின்னர் சைவ நெறிக்கு வந்து, வாழ்வின் பெரும்பகுதியேச் சிவனை வழிபடாமல் வீணாக்கி விட்டோமே என்றுகழிவிரக்கம் காணப்படுவதால் பாடல்கள் உணர்ச்சி மயமாக இருக்கும்.”8

இவரும் சங்க அகமரபில் தம்முடைய அருளியல் அனுபவத்தப்ை பாடியுள்ளார். இவருடைய பாடல்களில் பதிக அமைப்பு ஞான சம்பந்தர்பாடல்களில்இருப்பது போலத் திட்டவட்டமாக இல்லை.

குறுந்தொகை, தாண்டகம், திருநேரிசை, விருத்தம், விண்ணப்பம், அங்கமாலை, தச புராணம், வினாவிடை, ஆகிய பல்வேறு இலக்கிய வகைகளில் இவர் பாடியுள்ளார்.

இவர் மிகுதியாகத் தாண்டகம் என்ற இலக்கிய வகைப் பாடியதால் தாண்டக வேந்தர் என்று போற்றப்படுகிறார். இவருடைய பாடல்களும் பண்மரபில் அமைந்த இசைப் பாடல்கள் ஆகும்.

**"குனித்த புருவமும்கொவ்வைச் செவ்வாயில்குமின் சிரிப்பும்**
**பனித்த சடையும் பவளம்போல் மேனியில்பால் வெண்நீறும்**
**இனித் தம் உடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்**
**மனித்த பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே"**

என்ற அவருடைய பாடல் இறைவனின் ஆடல்வல்லான் கோலத்தை கண்முன் நிறுத்துகிறது.

சிற்ப சாத்திர நூல்கள் உருவாகாத காலத்தில் நாவுக்கரசரின் இப்பாடல் முதன்முதலாகக் கூத்தபிரான் ஆடும் கோலத்தை விளக்குகிறது.

**சூலை தீர்த்தாட் கொள்ளல்**

தம்பியாருக்காக உயிர்தாங்கித் தவம் புரியும் திலகவதியார் திருவதிகைப் பெருமானிடம் தம்பி சைவம் சார வேண்டுமென்று விண்ணப்பித்து வந்தார்.அதிகைப்பெருமானும் "அன்னவனைக் சூழல் கொடுத்து ஆட்கொள்வோம்" என்று அருள் செய்தார். சிலநாளில் தரும சேனராக மருள் நீக்கியார் சூலை நோயால் துன்புற்றார்.அமண் சமய அருகரால் சூலை தீராது போகவே தம் தமக்கையாரிடம் சார்ந்து பணிந்தார். திலகவதியார் திருவாளன் திருநீற்றை ஐந்தெழுத்தோதிக் கொடுத்து அதிகைப் பெருமான் சந்நிதிக்கு அழைத்துச் சென்றார். ஆண்டவன் அருளால் பாடும் உணர்வு பெற்ற மருள்நீக்கியார் "கூற்றாயினவாறு விலக்கிலீர்" என்ற திருப்பதிகம் பாடிப் பரவினார். இறையருளால் சூலை நீக்கியதோடு திருநாவுக்கரசர் என்ற பெயரும் பெற்றார். சூலை தீர்த்து அடியேனை ஆட்கொண்டாரே என்பது அப்பரடிகள் அகச்சான்று.

**நின்மலன் அருளால் நீற்றறை குளிர்ந்தது**

இச்செய்தி யுணர்ந்த அமணர்களும், அமணர் வயப்பட்ட மகேந்திரவர்மப் பல்லவ மன்னனும் இவருக்குப் பலவகையிலும் இன்னல்

விளைவிக்கத் திட்டமிட்டு நாவுக்கரசரை அழைத்துவரச் செய்தனர். நாவரசர் ”நாமார்க்கும் குடியல்லோம்” என்ற தாண்டகம் பாடி அவரெதிர் சென்றார். அமணர்கள் இவரை நீற்றறையில் (சுண்ணாம்புக் காளவாய்) இட்டனர். அங்கு ”மாசில் வீணை” என்ற திருப்பதிகம் பாடி நீற்றறைக் குளிரச் செய்தார்.

**நஞ்சும் அமுதாம் எங்கள் நாதன் அடியார்க்கு**

நீற்றறையில் வேகாது பிழைத்த திருநாவுக்கரசர் தங்கள் சமண் சமயத்தில் சுற்றியிருந்த மந்திர வலிமையால் தான் நீற்றறையில் வேகாத பிழைத்தார் என்ற தூர்ப்போதனையை அரசனுக்குக் கூறினார்கள். நஞ்சு கலந்த பால் சோற்றை நாவரசர்க்கு அருந்தினர்.“நஞ்சும் அமுதாம் எங்கள் நாதன் அடியார்க்கு“ என்று நஞ்சுணவை ஏற்று உண்டு ஊனமொன்று இன்றி உயிர் வாழ்ந்தார் நாவரசர்.”வஞ்சனைப் பாற்சோறாக்கி வழக்கிலா அமணர்தந்த நஞ்சமுதாக்குவித்தார் நனிபள்ளி யடகளாரே”என்பது அப்பர் சுவாமிகள் அகச்சான்று.

**இடர் செய ஏவிய யானை பணிதல்**

நஞ்சு மீண்டும் உயிர் பிழைத்த நாவுக்கரசரைக் கொலைத் தொழில் வல்ல யானையை விட்டு இடற முற்பட்டனர். மதயானை வருதலைக் கண்ட நாவரசர் ”அஞ்சுது யாதொன்றும் இல்லை அஞ்ச வருவதும் இல்ல” என்ற உள்ள உறுதியோடு” சுண்ணவெண் சந்தனச் சாந்தும்” என்ற திருப்பதிகம் அருளினார். கொலைத் தொழில் வல்ல யானையும் நாவரசரை வலம் வந்து வணங்கித் தன்னை யேவிய அமணர்களையே துன்புறுத்தது. ”தலைவ னாகிய ஈசன்தமர்களைக் கொலைசெய்யானைதான்கொன்றிடுகிற்குமே”9 என்பது அப்பர் சுவாமிகள் அகச்சான்று.

**கல்லே மிதப்பதாய்க் கடலைக் கடந்தது**

சமணர்கள் தாங்கள் செய்த சூழ்ச்சிகள் பலவற்றாலும் துன்புறாத நாவுக்கரசரைக் கடைசியாகக் கட்டிக் கடலில் இட்டனர். அரன் ஐந்தெழுத்தை ஓதி அக்கல்லே தோணி யாகக் கடலில் மிதந்துவர,திருப்பாதிரிப்புலியூருக்கு அருகில்கரையேறினார்.கரையேறிய இடம் கரையேறிவிட்ட குப்பம் என்ற பெயரோடு இன்றும் திகழ்கிறது.

**"கல்லி னோடுஎனைப் பூட்டி அமண்கையர்**
**ஒல்லை நீர்புக நூ க்க என் வாக்கினால்**
**நெல்லு நீள்வயல் நீலக்குடி அரன்**
**நல்ல நாமம் நவிற்றி உய்ந்தே னன்றே."**
**கல்துணைப் பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்**
**நல்துணை யாவது நமச்சிவாயவே." 10**

என்பன அப்பரடிகளின் அச்சான்று.

**சூலக் குறியும் இடபக் குறியும், ஆலமுண்டானது அருளால் பெற்றது**

கடலினின்றும் கரையேறிய திருநாவுக்கரசர் தமக்குற்ற துன்பங்களைத் துடைக்க இறைவன் தந்தையும் தாயும், தமக்கையுமாய் உதவி செய்த நன்றியையுணர்ந்து போற்றுவாராய்த் திருப்பாதிரிப்புலியூர்த் திருக்கோயிலைச் சார்ந்து, "ஈன்றாளுமாய் எனக் கெந்தையுமாய் உடன்றோன் றினராய்," என்ற திருப்பதிகம் பாடிப் பரவினார்.அமணர் சூழ்ச்சியும் நாவரசர் மாட்சியும் உணர்ந்த பல்லவ மன்னன் தானும் சமண சமயத்தை விட்டுச் சைவம் சார்ந்தான். அமண் பாழிகளையும் பள்ளிகளையும் இடத்து அக்கற்களைக் கொண்டு திருவதிகையில் "குணபரவீச்சரம்" என்ற சிவன் கோயிலை எடுப்பித்தான். பின்னர் நாவரசர் சிவதலயாத்திரை மேற்கொண்டு திருப்பெண்ணாகடம் என வழங்கும் திருத்தூங்கானை மாடம் சென்று தொழுதார். அங்குள்ள இறைவனிடத்துத் தாம் சமண் சமயம் சார்ந்ததால்

ஏற்பட்ட மாசுநீங்க, சூலக் குறியும் இடபக் குறியும் பொறித்தருள வேண்டினார். அவ்வாறே இறையருளால் சூலக்குறியும் இடபக்குறியும் பொறிக்கப் பெற்றார்.

”பொன்னார் திருவடிக்கு ஒன்றுண்டு விண்ணப்பம் போற்றி செய்யும், என் ஆவி காப்பதற்கு இச்சையுண்டேல் இருங்கூற்று அகல மின்னாரு மூவிலைச் சூலம் என்மேற் பொறிமேவு கொண்டல், துன்னார் கடந்தையுள் தூங்கானைமாடச்சுடர்க்கொழுந்தே”.

**தில்லைக்கூத்தன் திருவடி தொழுதது**

சூலக் குறியும் இடபக் குறியும் பொறிக்கப்பெற்ற திருநாவுக்கரசர் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு தில்லையை அடைந்து கூத்தப்பெருமான் குஞ்சிதபாதம் தொழுதார். ”என்று வந்தாய் எனும் எம்பெருமான்றான் திருக்குறிப்பைப்” புலப்படுத்திப் பதிகங்கள் பல பாடினார். அவ்வூரை விட்டுப் புறப்படுங்கால் அத்தலத்தை உடலால் புரண்டு புரண்டு (அங்கப்பிரதஷிணம்) வலம் வந்தார்.

**அரசும் கன்றும் அரனடி தொழுதது**

திருநாவுக்கரசர் தில்லையில் இருந்த பொழுது சீர்காழியில் உமாதேவியாரால் ஞானப்பால் உண்டு திருஞானசம்பந்தராய்த் திகழ்ந்த ஆளுடையபிள்ளையாரின் அருள் திறம் கேட்டு அவரை வணங்க விரும்பினார். சீர்காழி எல்லையை அடைந்தார். நாவரசர் வருவதறிந்த திருஞானசம்பந்தர் இவரைச் சீர்காழி எல்லையில் பரிவாரங்களோடு எதிர் வந்து வரவேற்றார். சிவவேடப் பொலிவழகோடு திகழ்ந்த நாவரசரை, “அப்பரே!“ என்று அழைத்தருளினார்.இது முதல் “அப்பர்“ என்ற பெயர் வழங்கலாயிற்று. நாவரசரும் கலைஞானக் கன்றாகிய திருஞானசம்பந்தர் முன் “அடியேன்“ என்று மறுமொழி கூறினார். ஞானக் கன்றாம் சம்பந்தரும், திருநாவுக்கரசராம் அப்பர் தோணியப்பரைப் பதிகம் பாடிப் பரவினார்கள்.

**நல்லூர்ப் பெருமான் நற்றாள் சூட்டல்**

காழிநாதன் கழலடி வணங்கிய அப்பரடிகள் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திருச்சத்திமுற்றம் சென்று அங்குள்ள இறைவனிடம் தமக்குத் திருவடிதீக்ஷை அருளுமாறு வேண்டினார். பெருமானும் நல்லூருக்கு வருக என்றருளித் திருவடி சூட்டி அருளினார்.

” கோவாய் முடுகியடுதிறல் கூற்றம் குமைப்பதன்முன்
பூவாரடிச் சவடு என்மேல் பொறித்துவை”
” இனமலர்கள் போதவிழ்ந்துமதுவாய் பில்கி
நனையந்தனைய திருவடிஎன் தலைமேல் வைத்தார்
நல்லூர் எம் பெருமானார் நல்லவாறே” 11

**அரசரும் அப்பூதியடிகளும்**

திருவடிதீடக்ஷை பெற்ற நாவரசர் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திங்களூர் வந்தடைந்தார். அந்தணரின் மேம்பட்ட அப்பூதியடிகளார் தமது புதல்வருடன் சாலை, குளம், கிணறு, தண்ணீர்ப் பந்தல் முதலிய எல்லா அறங்களையும் திருநாவுக்கரசர் பெயராலேயே அமைந்திருந்ததைக் கண்டும் கேட்டும் காரணம் அறிவதற்காக அப்பூதி அடிகளை காணச் சென்றார்.அப்பூதியடிகளின் செந்தண்மையைக் கண்ட நாவரசர், அவரது விருப்பத்திற்கிணங்கி அமுது கொள்ள இசைந்தார். திருவமுது படைப்பதற்கு இலை கொணரச்சென்ற மூத்த திருநாவுக்கரசு அரவம் தீண்டியதால் வாழையிலையைத் தாயிடம் சேர்ப்பித்து உயிர்நீத்தார். இறந்த பிள்ளையை மறைத்து வைத்து அப்பருக்கு அமுது செய்விக்க முயன்றனர். அமுதுகொள்ள எழுந்தருளிய அப்பரடிகள், மூத்த திருநாவுக்கரசு அரவந் தீண்டி இறந்ததை அறிந்து அவ்வுடலைத்திருக்கோயிலின் முன் கொண்டு வரச் செய்து ”ஒன்று கொலாமவர் ” எனுந் திருப்பதிகம் பாடி உயிர்பெற்றெழச் செய்தார்.

**திருப்புகலூரில் அப்பர் சம்பந்தருக்கு ஆதிரைச் சிறப்பைச் செப்பி மகிழ்தல்**

விடம் தீர்த்த திருப்பதிகம் அருளிச்செய்த திருநாவுக்கரசர் திருவாரூர்த் தியாகேசப் பெருமான் திருவடி தொழுது ”தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் தமக்கும் உண்டாகுமோ” என்ற கருத்தமைந்த பதிகம் முதலாகப் பல பதிகங்கள் பாடிப் பரவினார். திருவாதிரைத் திருநாளில் தியாகேசப் பெருமான் திருவுலாக் காட்சியைக் கண்டு தொழுத அப்பரடிகள் அங்கிருந்தும் திருபுகலூர் சென்றார். அப்பொழுது திருஞானசம்பந்தர் சீர்காழியினின்றும் புறப்பட்டுப் பல தலங்களையும் வணங்கித் திருப்புகலூரை அடைந்து முருகநாயனார் திருமடத்தில் எழுந்தருளியிருந்தார்.அவர் திருநாவுக்கரசரின் வரவை அறிந்து, அடியார்கள் புடைசூழ எதிர்கொண்டு வரவேற்றார். ஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் பால் ஆரூரில் நிகழ்ந்த ஆதிரைச் சிறப்பைக் கேட்டுத் தாமும் திருவாரூர் சென்று தொழுது திரும்பினார். திரும்புங்கால் திருநாவுக்கரசர் அடியார்கள் புடைசூழ ஞானசம்பந்தரை வரவேற்று மகிழ்ந்தார்.இது இரண்டாவது சந்திப்பு.

**படிக்காசு பெற்றுப் பஞ்சம் தீர்த்தது**

ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும் அடியார்கள் புடைசூழ, திருக்கடவூர் முதலிய பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திருவீழிமிழலை சென்றனர். அப்போது மழையின்மையால் பஞ்சம் உண்டாயிற்று. அப்பஞ்சத்தால் அடியவர்கள் துன்புறா வண்ணம் கோயிலின் கிழக்கு மடத்தில் திருஞானசம்பந்தருக்கும், மேற்கு மடத்தில் திருநாவுக்கரசருக்கும் மிழலைப்பெருமான் நாள்தோறும் படிக்காசு வைத்து வந்தார்.அக்காசு கொண்டு அடியவர்கட்கு இரு மடங்களிலும் பறைசாற்றிச் சோறிட்டனர். உழவாரத் தொண்டு செய்த பான்மையினால் வாசியில்லாக் காசு பெற்றார் வாகிசர். ஞானப்பால் உண்டமையால் திருக்குமாரராம் பான்மை வாய்ந்த ஞானசம்பந்தர்வாசியுள்ள காசு பெற்றார்.(வாசி-வட்டம் கொடுத்து மாற்றும்

காசு) ”இருந்து நீர் தமிழோடிசை கேட்கும் இச்சையால் காசு நித்தம் நல்கினீர்” என்ற சுந்தரர் வாக்காலும்,

> **” பாடல் காரப் பரிசில் காசருளிப் பழுத்த செந்தமிழ் மலர்சூடி நீடலங்காரத்து எம்பெருமக்கள் நெஞ்சினுள் நிறைந்து நின்றானை” 12**

என்ற திருவிசைப்பாவாலும் இந்நிகழ்ச்சியை நன்கு தெரியலாம்.

**திருமறைக்காட்டில் கதவு திறந்தது**

பஞ்சம் நீக்கிய இருபெருமக்களும் வேதரணியம் என வழங்கும் திருமறைக்காட்டிற்குச் சென்று திருக்கோயிலை வலம்வந்து வாயிலை அடைந்தனர். கதவு அடைக்கப்பட்டு இருப்பதை வினவினார். “முற்காலத்தில் வேதங்கள் வழிபட்டுத் திருக்காப்பீட்டுச் சென்றன என்பதையும், அதுமுதல் பக்கத்திலே வாயில் அமைத்து அன்பர்கள் வழிபட்டு வருகின்றனர்“ என்பதையும் அங்குள்ளோரால் அறிந்து நேரே கும்பிட வேண்டும் என்ற விருப்புடையோர் ஆயினர். திருஞானசம்பந்தர் நாவுக்கரசரைப் பார்த்துத் திருக்கதவும் திறக்குமாறு பாடியருளுக என்றார். அதற்கிணங்க அப்பர் சுவாமிகள்,“பண்ணின் நேர்மொழியாள்“ என்று தொடங்கும்

திருபதிகத்தில் பத்துப்பாடல்கள் பாடியும் கதவு திறவாமையால் பதினோராவது பாடலில் ”இரக்கம் ஒன்றிலீர்” என்று பாடி வணங்கிய அளவில் மறைக்கதவும் திறக்கப்பெற்றது. இருவரும் நிலமுறப்பணிந்தனர். திருநாவுக்கரசரது விருப்பத்திற்கு இணங்கத் திருஞானசம்பந்தர் அடைக்கப் பாடினார். அன்றுமுதல் திறக்கவும் அடைக்கவுமாக இருந்து வருகிறது.

**திருவாய்மூரில் சிவனுருக் கண்டது**

திருநாவுக்கரசர், தாம் அரிதின் முயன்று திறக்கப் பாடியருளியதையும், ஞானசம்பந்தர் ஒரு பாடலில் அடைக்கப் பாடியருளிய எளிமையினையும்

எண்ணிப் பெருமான் திருள்ளக் கிடக்கையை உணராது அயர்ந்தேன் என்ற கவலை உடையவராய் அறிதுயில் கொண்டார். அப்பொழுது வெண்ணீறணிந்த கோலத்தோடு இறைவன் எழுந்தருளி ”நாம் திருவாய்மூரில் இருப்போம்; அங்கு எம்மைத் தொடர்ந்துவா” என்றருளி மறைந்தனர். துயிலுணர்ந்த நாவரசர்.

**” எங்கே யென்னை இருந்திடம் தேடிக்கொண்டு**

**அங்கே வந்தடை யாளம் அருளினார்**

**தெங்கே தோன்றும் திருவாய்மூர்ச் செல்வனார்**

**அங்கே வாவென்று போனார் அதென்கொலோ”13**

என்ற பாடலை முதலாகக் கொண்ட பதிகம் பாடிக் கனவில் தோன்றிய வடிவத்தோடு இறைவன் வழிகாட்ட உடன் சென்ற நாவரசருக்கு ஒரு போற்கோயிலைக் காட்டி மறைந்தருளினார் இறைவன். ஞானசம்பந்தர், நாவரசர் திருவாய்மூர் செல்கின்றார் என்பதை அறிந்து அவரும் அங்குச் சென்றார்.

”திறக்கப் பாடிய என்னினும் செந்தமிழ் உறைப்புப் பாடியடைப்பித்தார் உந்நின்றார்” என்று நாவரசர் பாடிய அளவில் திருஞானசம்பந்தருக்கு இறைவன் காட்சி கொடுத்தருளினார். கண்டு தரிசித்த ஞானசம்பந்தர் நாவுக்கரசருக்கு காட்டினார்.

திருநாவுக்கரசர் கண்டு மகிழ்ந்து”பாட அடியார் பரவக் கண்டோன்” என்ற திருத்தாண்டகம் பாடிப் பரவினார். இருவரும் திருமறைக்காடு சேர்ந்தனர்.

**பழையாறை வடதளிப் பரமனைக் காணுதல்**

மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் இருவரது வேண்டுகோட்கிணங்கித் திருஞானசம்பந்தர் பாண்டிய நாட்டிற்கு எழுந்தருளினார். திருநாவுக்கரசர் திருமறைக்காட்டினின்றும் பல தலங்களையும் தரிசித்துப் பழையாறையை யடைந்து வடதளியென்னும்

கோயிலை நோக்கித் தொழுதார். அக்கோயிலிலுள்ள சிவலிங்க மூர்த்தியை மறைத்துச் சமணர்கள் அருகதேவனை வைத்துத் தொழுது வந்தனர். இ∴தறிந்த அப்பர் சுவாமிகள் மூர்த்தியை வழிபட்டே உணவு கொள்வேன் என்று விரதம் இருந்தார். அடியவர் கருத்தறிந்து முடிக்கும் ஆண்டவன் சோழமன்னன் கனவில் தோன்றித் தான் இருக்கும் இடத்தை அடையாளங்களுடன் சுட்டி ஆலயம் அமைக்க ஆணையிட்டருளினார். அவ்வண்ணமே சோழ மன்னன் அமணர் மறைத்து வைத்த சிவனுருவைக் கண்டு ஆலயம் அமைத்து வழிபட்டான். அப்பரடிகளும் சென்று வழிபட்டுத்

**"தலையெலாம் பறிக்குஞ் சமண் கையருள்**

**நிலையினால் மறைத்தால் மறைக்கொண்ணுமோ"**14

என்று தொடங்கும் திருப்பதிகம் பாடிச் சிலநாள் தங்கிப் பணிபுரிந்தார்.

**திருப்பைஞ்ஞீலியருகில் பொதிசோறு பெறுதல்**

திருப்பழையாரை வடதளியினின்றும் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திருப்பைஞ்ஞீலிக்கு எழுந்தருளினார். அப்பொழுது பசியும் நீர்வேட்கையும் வருந்தின. உடல் தளர்ந்தாலும் உளம் தளரா வாகீசர் வரும் வழியில் பைஞ்ஞீலி இறைவர் சோலையும், குளமும் தோற்றுவித்துத் தாம் ஓர் அந்தணர் கோலத்தில் பொதிசோறு சுமந்து சென்று நாவரசருக்கு அளித்து அருந்தச் செய்தார். உணவு அருந்திக் களைப்பு நீங்கிய நாவரசரை அந்தணர் வடிவுகொண்ட இறைவன் பஞ்ஞீலிக்கு அழைத்துச் சென்று மறைந்து அருளினார். அவ்வதிசயம் கண்ட அப்பரடிகள் பதிகம் பாடித் துதித்தார்.

**திருவையாற்றில் கயிலைக் காட்சி**

பைஞ்ஞீலிப் பரமனைப் பரவிய நாவரசர் நடுநாட்டுத் தளங்களையும், தொண்டைநாட்டுத் தலங்களையும் தரிசித்துத் திருக்கயிலை யாத்திரையை மேற்கொண்டார். இமயமலைப் பகுதியில் கரடுமுரடான பாதைகளில் நடந்தும்

ஊர்ந்தும் உடலுறுப்புகளெல்லாம் தேய்ந்து நடை சோர்ந்தார். இந்நிலையில் கயிலைப் பெருமான் முனிவர் வேடம் தாங்கி நாவரசர் முன் தோன்றி ”மனிதரால் அடையத்தக்கதன்று திருக்கையிலை” என்று அறிவித்தார். அது கேட்ட நாவரசரோ” ஆளும் நாயகன் கயிலையின் இருக்கை கண்டல்லால் மாளும் இவ்வுடல் கொண்டு மேளேன்” என்று உறுதி உரைத்தார். அவரது மனத்திண்மை கண்ட பெருமான் மறைத்து ”ஓம்கும் நாவினுக்கரசனே எழுந்திரு” என்று அசரீரி அருளினார் அதூக்கேட்டு ஊறுநீங்கிய உடலுடன் எழுந்த நாவரசர் கயிலைக்காட்சி வேண்டிப் பணிந்தார். இறைவன் ”அருகில் உள்ள இத்தடாகத்தில் மூழ்கிய் திருவையாற்றை அடைந்து அங்கு நம் திருக் கயிலைக் காட்சியைக் காண்பாயாக” என்று அருளினார். அவ்வாறே அருகில் உள்ள தடாகத்தில் மூழ்கி ஐயாற்றில் உள்ள திருக்குளத்தில் எழுந்து திருக்கயிலையிலுள்ள காட்சியைக் கண்டு ”மாதர் பிறைக் கண்ணியானை” என்ற திருப்பதிகம் பாடிப் பரவினார்.

**திருப்பூந்துருத்தியில் திருமடம் அமைத்தல்**

கயிலைக்காட்சி கண்ட திருநாவுக்கரசர் திருமழபாடி முதலிய தலங்களை வணங்கித் திருப்பூந்துருத்தியையடைந்து இறைவனைத் தொழுதார். அங்குப் பலநாள் தங்கிப் பணிபுரிய விரும்பியதால், திங்களும் ஞாயிறும் தோயும் திருமடம் ஒன்று அமைத்தார். உழவாரப்பணி புரிந்ததோடு திருவங்கமாலை முதலிய பலதொகைத் திருப்பதிகங்களையும் அருளிச் செய்தார். இந்நிலையில் பாண்டிய நாடு சென்று சிவநெறி பரப்பிய திருஞானசம்பந்தர் சோழ நாட்டிற்கு வந்து திருநாவுக்கரசர் திருப்பூந்துருத்தியில் எழுந்தருளி இருப்பதைக் கேள்வியுற்றுத் திருப்பூந்துருத்திக்கு எழுந்தருளினார்.அ ஃதறிந்த திருநாவுக்கரசர் ஞானசம்பந்தரை நேரே கண்டு கும்பிட வேண்டுமென்ற விரும்பினராய் அடியவர் எவரும் அறியாவண்ணம் ஞானசம்பந்தர் எழுந்தருளிய பல்லக்கைச் சுமந்து

வந்தார். திருப்பூந்துருத்திக்கு அருகில் வந்த ஞானசம்பந்தர், "அப்பர் எங்குற்றார்?" என வினவ" உம்முடைய அடியேன் உமது திருவடிகளைத் தாங்கும் பெருவாழ்வு வந்து எய்தப் பெற்று இங்குற்றேன்" என்றார் அப்பர். அது கேட்ட பிள்ளையார் சிவிகையினின்றும் இறங்கி ஒருவரை ஒருவர் வணங்கி மகிழ்ந்து சிலநாள் அத்தலத்து எழுந்தருளியிருந்தனர். இது மூன்றாவது சந்திப்பு.

**அரம்பையர் வலையில் அகப்படா திருத்தல்**

திருநாவுக்கரசர் பாண்டிய நாட்டுத் தலங்களைத் தரிசித்து, சோழநாடு மீண்டு திருப்புகலூரையடைந்து உழவாரப்பணி செய்து கொண்டு அங்கேயே தங்கியிருந்தார். அப்பொழுது க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகம் முதலிய பல பதிகங்கள் பாடினார். புகழூரிறைவனை திருக்கோயில் பிரகாரத்தில் உழவாரப்பணி செய்யும் பொழுது, இறையருளால் பொன்னும் நவமணிகளும் தோன்றின. அவற்றையெல்லாம் கல்லோடும் புல்லோடும் தூக்கி எறிந்தார். இவரது நடையறாப் பெருந்துறவை நாட்டிற்கு எடுத்துக்காட்டத் தேவ அரப்பையர்களை இவர் முன்னர்த் தோற்றுவித்தார் இறைவன். அவர்களது ஆடல் பாடல்களாலும் இவரது உள்ளம் மாறுபடவில்லை. ம்றுபடா மாண்பைப் "பொய்ம்மாயப் பெருங்கடலில்" என்று தொடங்கும் திருத்தாண்டகப் பதிகத்தால் புலப்படுத்தியுள்ளார்.

**திருப்புகலூரில் சிவன்தாள் சேர்தல்**

பக்தியின் வடிவு கொண்ட திருநாவுக்கரசர், பரம்பொருளையடையுங்காலம் அணித்தாக விரும்பியதை அறிந்து ஆண்டவனது புகலாகி அடைக்கலப் பொருளாகிய தன்னைப் புகலூர்ப் பெருமான் சேவடிக்கீழ் இருத்துவார் என்ற கருத்துடன் பல திருப்பதிகங்கள் பாடி முடிவாக, "எண்ணுகேன் என்சொல்லி எண்ணு கேனோ" என்று தொடங்கும் திருத்தாண்டகத்தை அருளிச் செய்து புண்ணியா உன்னடிக்கே

போதுகின்றேன், பூம்புகலூர் மேவிய புண்ணியனே” என்று புகன்று சித்திரைச் சதய நன்னாளில் திருவடி நிழலில் இரண்டறக் கலந்தார்.

**சுந்தரர்:**

தேவாரம் பாடிய மூவரில் இறுதியாக வருபவர் சுந்தரர்.திருஞானசம்பந்தர் அப்பர் காலங்களுக்குப் பிறகு 7ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர்.

அவர்களைப் போல இவரும் பல்வேறு சிவத்தலங்களுக்குச் சென்று இசைப் பாடல்களைப் பாடி சைவசமயத்தை வளர்த்தவர்.

“சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய ஏழாம் திருமுறையுல் 100 பதிகங்களும் 1026 அருட்பாடல்களும் இடம்பெற்றுள்ளன. 96 திருத்தலங்கள் இவர் பாடல் பெற்றுச் சிறந்துள்ளன. இவர் 17 பண்களில் பாடியுள்ளார். இவர் அவதரித்த நோக்கமே திருத்தொண்டத்தொகை என்ற அடியார் வரலாறு கூறும் பதிகம் பாடுவதற்கென்று சேக்கிழார் குறிக்கிறார்”15

பண் மரபில் பாடப்பட்ட இசைப்பாடல்கள் இவை. ஞானசம்பந்தரைப் போல இவரும் திட்டவட்டமான முறையில் பதிக அமைப்பை பின்பற்றியுள்ளார்.

கடைசிப் பாடலில் ஒவ்வொரு பதிகத்திலும் பாடிய தன் பெயரையும் நூற் பயனையும் இவர் குறிப்பிட்டுள்ளார்.தம் காலத்திலும் தமக்கு முன்னும் வாழ்ந்த சிவனடியார் தொகையடியார் ஆகியோரைப்போற்றி திருத்தொண்டத்தொகை பாடியுள்ளார்.

இதுதான் பிற்காலத்தில் நம்பியாண்டார் நம்பி திருத்தொண்டர் திருவந்தாதியும் சேக்கிழார் பெரிய புராணமும் பாடுவதற்குத் முதல் நூலாக அமைந்தது.

“பொதுவாக சுந்தரர் வரலாற்று உணர்வு மிக்கவர். தம்முடைய வாழ்க்கை குறித்தும் பிற சிவனடியார்களுடைய வாழ்க்கை குறித்தும் தேவாரப் பாடல்களில் பாடி புனைமுறை இசை வழியுறுத்தும் வாழ்க்கை வரலாறு (தன் வரலாறு,பிறர் வரலாறு) இரு வகைகளிலும் பாடப்படும் முறைக்கு தமிழ் மரபில் இவர்தான் முன்னோடி இவருடைய பாடல்களில் ஞான சம்பந்தர் பாடல்களில் காணப்படுவதைப் போலத் தலபுராணக் குறிப்புகள் உள்ளன.”16

பண்முறையில் இசைப் பாடல்களாகப் பாடியுள்ளார்.பிற்காலத்தில் காளமேகப்புலவர் வசைகவிஆண்டாள் ஆகியோர் பழிப்பது போலப் புகழ்வது என்னும் வகையைப்(நிந்தாஸ்துதி) பாட இவர் பாடல்களே முன்மாதிரியாகும்.

**கயிலையில் சுந்தரர்**

சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆலாய சுந்தரர் என்ற திருப்பெயரோடு திருக்கயிலையில் சிவபெருமானுக்கு உடன் இருந்து பணிவிடை புரிவது அவசியம் அணுக்கத் தொண்டு ஆற்றி வந்தார் அதுபோல் உமாதேவிக்கு அநிந்திதை கமலினி என்ற இரு சேடியர்களும் அணுக்கத் தொண்டாற்றினர்.இவர்கள் நாள் தோறும் மலர் கொய்து இறைவனுக்கும் உமாதேவியாருக்கும் சார்த்தி வந்தனர். ஒரு நாள் மலர் கொய்யும் தொண்டாற்று கையில் ஆலால சுந்தரர் அநிந்நிதை ,கமலினி என்பார் மீது மனம் போக்கினார். அவர்களும் இவர் மீது இச்சை கொண்டனர். எல்லாம் வல்ல இறைவன் இதனை அறிந்து, ”ஆலால சுந்தர! நீ பெண்கள் மீது இச்சை கொண்டமையால் பூவுலகத்தில் மனிதனாகப் பிறந்து அப்பெண்களுடன் இன்புறுவாயாக!” எனக் கட்டளையிட்டார். அதுகேட்ட சுந்தரர் வருத்தமுற்றவராய் ”அடியேன் மானுட வாழ்வில் மயங்கத் தலைப்படும் பொழுது தேவரீர் தடுத்து ஆட்கொண்டருள வேண்டும்” எனப் பிரார்த்தித்தார். அண்ணலும் அவ்வாறே வரம் தந்து அனுப்பினார்.

**ஓலையை கிழித்தல்**

ஆலால சுந்தரர் நடு நாட்டிலே திருநாவலூரிலே, ஆதி சைவ அந்தணர் மரபிலே, சடையனார், இசைஞானி அம்மையார் என்ற அருந்தவத்துப் பெரியவர்கட்கு மகவாய் அவதரித்தார். பெற்றோர்களால் நம்பியாரூரர் என்ற பிள்ளைத் திருநாமம் இடம் பெற்றார் .பரமன் அருளால் பல கலைகளையும் பயின்றார் நடு நாட்டு மன்னரான நரசிங்கமுனையரையரரின் அபிமான புத்திரராய் மன்னவர் திருவும் வைதிகத் திருவும் பொங்க வளர்ந்து வந்தார் .மணப்பருவம் உற்றார் புத்தூர் சடங்கவி சிவாசாரியார் உடைய திருமகளைப்பெரியோர் மணம் நேர்ந்தனர் புத்தூரியிலே திருமண விழாத்தொடங்கியது பரம்பொருள் திருக்கயிலையில் வரம் அளித்தபடி சுந்தரரை தடுத்தாட் கொள்ள வேண்டி விருத்த வேதியராய்த் திருமணப்பந்தலில் எழுந்தருளினார்.அங்குக்கூடியிருந்த அனைவரும் அவரை மகிழ்ச்சியுடன் வரவேற்றனர். வந்தவர் நம்பியார் ஊரை நோக்கி எனக்கும் உனக்கும் இடையே ஒரு வழக்கு உள்ளது .அவ்வழக்கு நீ எனது அடிமை என்பதேயாகும். அதனை முடித்தே மணம் தொடங்க வேண்டும் என உரைத்தார் அது கேட்ட அனைவரும் அதிசயித்தனர். நம்பியாரூரர் விருத்த வேதியரை நோக்கிக் ஒரு அந்தணர் மற்றொரு அந்தணருக்கு அடிமையாதல் நீர் சொல்லத்தான் கேட்டேன் இவ்வாறு சொல்லும் நீர் பித்தரோ என வெகுண்டு பேசி அவர் கையில் இருந்த ஓலையைப்பற்றிக் கிழித்தெறிந்தார்.வேதியர் இது முறையோ எனக்கூக்குரலிட அப்போது ஆரூரர் உமது ஊராகிய திருவெண்ணைநல்லூர் மறையவர்கள் இடத்திலேயே இவ்வழக்கைத் தீர்ப்போம் என்றனர்.

**தடுத்தாட் கொள்ளல்**

அவ்வண்ணமே மூல ஓலை காட்டி ஆரூரர் அடிமை என்பதை வேதியர்நிருபிக்க சுந்தரர் அடிமை நிலையை ஏற்றார்வேதியரின் இருப்பிடம்

வினவினார். கிழ வேதியர் திருவெண்ணை நல்லூர் அருட்டுறை ஆலயத்துக்குப்புகழ்ந்தார். பின்தொடர்ந்த மறையவர்கள் திகைத்தனர். அதுக் கண்ட சுந்தரரும் வியப்புற்றார்.

திருக்கயிலையில் கூறியபடி உன்னை தடுத்தாட்கொண்டோம் என மொழிந்து இறைவன் காட்சி வழங்கினார். உண்மை உணர்ந்த சுந்தரர் அப்போது வழி அடிமை செய்ய வேண்டும் என வேண்டினார் .வன்மை பேசி வன்றொண்டன் எனும் பெயர் பெற்றாய் நமக்கு பெரிய அன்பின் மிக்க அர்ச்சனை வழிபாடு பாட்டே ஆகும் ஆதலால் நம்மீது சொற்களில் காடுகள் என ஆணையிட்டார் அதுகேட்ட சுந்தரர் எப்படி பாடுவேன் என ஏங்கினார் .பக்தர்கள் அறிய என்னை பித்தன் என்றே பாடுகள் என அடியெடுத்துக் கொடுத்தார் அப்படியே முதலாகக் கொண்டு பித்தா பிறைசூடி என்னும் பதிகம் பாடினார் .

**சித்த வட மடத்தில் திருவடி தீட்சை**

பிறகு சுந்தரர் திருநாவலூரைத்தரிசித்துக்கொண்டு திருத்துறையூர் சென்று இறைவனை நோக்கித்தவநெறியருள வேண்டினார். அப்பர் சுவாமிகள் திருத்தொண்டு செய்த இடமாகிய திருவதிகையை மிதித்தற்கு அஞ்சி அதன் அருகில் சித்த வடம் மடத்தில் இரவு தங்கி நித்திரை செய்கையில் அதிகைப் பெருமான் கிழ வேதியராய் அருகில் படுத்துத்திருவடி தீட்சை செய்தனர். பின்னர் சிதம்பரம் அடைந்து கூத்துப் பெருமான் குஞ்சித சரணம் கும்பிட்டார். பெருமான் கட்டளைப்படி திருவாரூர் செல்லும் வழியில் சீர்காழியை குறுகிறார் திருஞானசம்பந்தர் அவதாரமான திருத் தலம் ஆதலால் அதனை மிதிக்க அஞ்சினார். ஊர்ப்புற எல்லையை வலம் வந்தார் . இறைவன் காதில் வெண்குழையனாய்க் காட்சி நல்கியதைத் தரிசித்தார்.

**தம்பிரான் தோழர்**

பின்னர்ப் பல தலங்களைத் தரிசித்துத் திருவாரூர் சேர்ந்து வன்மீகநாதரைத்தரிசித்தார். அப் பெருமான் ”உனக்கு நம்மைத் தோழனாகத் தந்தனம். நீ கொண்ட மணக்கோலத்துடன் எப்பொழுதும் இருப்பாயாக” என்று அருள் செய்தார். அன்று முதல் தம்பிரான் தோழராக, தியாகேசப்பெருமானைத் தரிசித்து வந்தார். அப்போது கையிலிருந்த கமலினி என்பார் அவ்வூர் உருத்திர கணிகையர் குலத்தில் பரவையார் என்ற பெயருடன் தோன்றி நாள்தோறும் தியாகேசப்பெருமானைத் தரிசித்து வந்தார். ஒரு நாள் இருவரும் திருக்கோயிலில் சந்தித்து ஒருவரையொருவர் நேசித்தனர். இறைவன் திருவருளால் இருவருக்கும் மணம் நிகழ்ந்தது. பரவையாருடன் வாழ்ந்து வந்த சுந்தரர், தேவாசிரிய மண்டபத்தில் சிவனடியார்கள் இருந்ததைக் கண்டு அவர்களுக்கு அடியனாகும் நாள் எந்நாளோ என எண்ணியவராய், சுவாமி தரிசனம் செய்தனர். இறைவன்,” நீ நம்முடைய அடியவர்களைப்பாடுக” எனப் பணித்துத் ”தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்” என்னும் முதலடி எடுத்துக் கொடுத்தனர். அதனையே முதலாகக் கொண்டு திருத்தொண்டத் தொகைபாடினார். பின்னர்க் குண்டையூர் கிழார் என்னும் வேளாளர் அரிசி முதலிய பொருள் கொடுத்துத்தொண்டு அதுபஞ்சத்தால் தடைப்பட்ட போது கிழார் இறைவனைப் பரார்த்தித்தார்.குண்டையூர் முழுவதும் நெல்-மலையாய் நிறைந்தது. இதனை அறிந்த சுந்தரர் அவற்றைத் திருவாரூர் கொண்டு போக ஆளின்மையால் நீள நினைந்தடியேன் என்ற திருப்பதிகத்தைப் பாடி பூதகணங்களால் நெல்மலை திருவாரூர் வரப்பெற்றார். எல்லோரும் நெல் பெற்றனர்.

**பொன் பெற்றார்**

பிறகு திருநாட்டியத்தான்குடியில் கோட்புலி நாயனார் தம் புதல்வியர்களான சிங்கிளடியாரையும் ,வனப்பகையாரையும் மணம் செய்து

கொள்ளுமாறு வேண்ட அவ்விருவரையும் தம் புதல்வியர்களாக ஏற்றுப் போற்றினார் .பிறகு பங்குனி உத்திரச் செலவுக்குப் பரவையார் பொன் வேண்டியதற் கிணங்கத் திருப்புகலூர் சென்றார். அங்குச் செங்கற்களைத் தலைக்கு வைத்து நித்திரை செய்தார்.அவை பொன்னாக மாறின.அது கண்டு ”தம்மையே புகழ்ந்து” எனும் திருப்பதிகம் பாடித் திருவருளை பிறந்தார் .பின்பு பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு, திருப்பாண்டிக்கொடுமுடி சேர்ந்து, “மற்றுப் பற்றெனக்கின்றி“ என்னும் நமச்சிவாயத் திருப்பதிகம் பாடினார். பின்னர்த் திருமுதுகுன்றத்தில் பழமலைநாதர் அருளிய பன்னீராயிரம் பொன்னை மணிமுத்தா நதியில் இட்டுத் திருவாரூர்க் கமலாயத்தில் பதிகம் பாடி எடுத்தார்.

**சங்கிலியார் திருமணம்:**

பிறகு திருகுருக்காவூர் வெள்ளடையில் களைப்புற்ற தமக்கு இறைவன் பொதிசோறு கொடுத்து மறைந்த அருட்டிறத்தைதப் புகழ்ந்து பாடினார். பிறகு தொண்டை நாட்டுத் தலங்கள் பலவற்றைத் தரிசித்துத் திருவொற்றியூரை அடைந்தார். கயிலையில் இருந்த அநிந்திதை ஒற்றியூர் அடுத்துள்ள ஞாயிறு என்ற ஊரில் ஞாயிறுக்கிழார் என்னும் வேளாளருக்குச் சங்கிலியார் என்ற பெயரோடு மகவாய்த் தோன்றி வளர்ந்து வந்தார்.மணப்பருவம் உற்றும் ஒருவரையும் மணந்து கொள்ளாது இறைவனுக்குத் திருமாலை சார்த்தும் தொண்டாற்றி வருகையில் சுந்தரர் அம்மாதினைக் கண்டு இச்சை கொண்டு இறைவனிடம் அவரைத் தமது மனைவியாக்கும்படி வேண்டினார்.இறைவனும் தெரிவித்து, அம்மையாரின் விருப்பத்திற்கிணங்க மகிழமரத்தடியில் சுந்தரரைக் கொண்டு ”உன்னை பிரியேன்” என்று அவரிடம் சபதம் செய்ய செய்து தொண்டர்களைக் கொண்டு அவர்கட்குத் திருமணம் நிகழ்ந்துவித்தார்.

**கண் பெற்றார்**

இவ்வண்ணம் சுந்தரர் இங்கு இருக்கும் நாளில், திருவாரூர் வசந்தவிழா நினைவிற்குவர,"எத்தனைநாள் பிரிந்திருக்கேன் என் ஆரூர் இறைவனையே" என்று பாடியவராய் ஒற்றியூரை விட்டகன்றார். சபதம் தவறியனமையால் கண்ணொளி இழந்தார். திருவெண்பிக்கத்தில், "திருக்கோயில் உள்ளீரோ" எனப்பாட இறைவன் "உளோம் போகீர்"என்று ஊன்றுகோல் கொடுத்து உதவினார். பின்னர்க் காஞ்சிபுரத்தில் கச்சி ஏகம்பனைக்காண இடக்கண் பெற்றோர். வழியில் பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு திருவாரூர் சேர்ந்து "மீளா அடிமை" என்ற பதிகம் பாடி வலக்கண்ணும் பெற்றார்.

**சேரமான் தோழன்**

சங்கிலியாரை மணந்ததைக் கேள்வியுற்ற பரவையார் ஊடல் கொள்ள, தியாகேசப் பெருமான் இரு முறை தூது சென்று ஊடலைப் போக்கினார். இந்நிகழ்ச்சிகயைத் தவறு எனக் கருதி ஏயர்கோன் கலிக்காம நாயனாருக்கு இறைவன் சூலைநோய் கொடுத்து அதைத் தீர்க்குமுகத்தால் சுந்தரருடன் நட்புக் கொள்ளச் செய்தார். சேர நாட்டு மன்னரான சேரமான் பெருமான் நாயனார், சுந்தரருக்கு நண்பினரானதால் சேரமான் தோழர் எனவும் சுந்தரர் அழைக்கப்பெற்றார். அதுமுதல் இருவரும் பல தலங்களையும் தரிசித்துக் கொண்டு வெள்ளம் பெருகிய காவிரி வழிவிட, திருவையாற்றுப் பெருமானைத் தரிசித்தனர். பிறகு சேரமான் நாட்டில் சிலகாலம் தங்கினார்.திருவஞ்சைக்களத்தப்பனை வழிபட்டார். திருவாரூர்த் தியாகேசப் பெருமானைத் தரிசிக்க விரும்பினார்; சேரமான் பெருமாள் கொடுத்த பொருள்களைத் திருவாரூருக்கு எடுத்துச் சென்றார். செல்லும் வழியில் திருமுருகன் பூண்டியில் பூதகணங்களாகிய வேடர்கள் பொருள்களைக் கவர்ந்தமை கண்டு அவ்வூர்ப்பெருமானை ஏத்துக்கு இங்கிருந்தீர் எனப்பாடிப் பொருளை மீண்டும் பெற்றுத் திருவாரூர் சேர்ந்தார்.

**கயிலை மேவினார்**

சிலநாள் கழித்துச் சேரமான் நாட்டிற்குச் செல்ல விரும்பினார்.வழியில் கொங்கு நாட்டுத் தலங்கள் சிலவற்றைத் தரிசித்துத் திருப்புக்கொளியூர் அவிநாசியில் முதலை உண்ட பாலனைப் பெற்றோர் மகிழ மீட்டுக் கொடுத்தார். பின்பு சேர நாடு அடைந்து சேரமான் பெருமானுடன் வதிந்தார்.இப்படி இருக்கும் நாளில் ஒரு நாள் திருவஞ்சைக்களம் சென்றார். உலக வாழ்வினின்றும் விடுபட விரும்புவதை விடையேறும் வித்தகனிடம் விண்ணப்பித்தார்.விண்ணவர் பெருமானும் விருப்பத்தை நிறைவேற்ற வெள்ளை யானையைத் தேவர் களுடன் அனுப்பினார். ஆடிச் சுவாதி நன்னாளில் வெள்ளை யானையின்மீது அமர்ந்து சேரமான் பெருமானை நிறைந்த வண்ணம் சுந்தரர் கயிலை சேர்ந்தார்.இதனையுணர்ந்த சேரமான் பெருமான் குதிரையின் செவியில் ஐந்தெழுத்தோதிச் சுந்தரரைப் பின்தொடர்ந்து திருக்கயிலை மேவினார்.பரவையாரும் சங்கிலியாரும் முன் போலவே கமலினி, அநிந்திதையாகக் கயிலை சேர்ந்தனர்.சுந்தரர் அருளிய திருப்பதிகங்கள் 100. இவை ஏழாந் திரு முறையாக இலங்குகின்றன.

இறைவனைத் தோழமை நெறியில் பாடி உருகும் இவருடைய பாடல்கள் உணர்ச்சிமயமானவை தம்முடைய அருளால் அனுபவத்தை விளக்க இவரும் சங்ககால அகமரபைக்குறியீட்டு உத்தியாகப் பயன்படுத்தி நாயக நாயகி பாவப் பாடல்களைப் பாடியுள்ளார்.

**” மீனா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே**
**மூளாத் தீப்போல் உள்ளே கனன்று முகந்தால் மிகவாடி**
**ஆனாய் இருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்**
**வாளாங்கு இருப்பீர் திருவாரீர் வாழ்ந்து போதீரே”17**

என்னும் பாடல் உணர்ச்சி மயமானது. கண் இழந்த நிலையில் இறைவனுடைய அருளைப் பெறத் தாமதம் ஆன நிலையில் மிகுந்த

தோழமை உணர்வோடு முக்கண்ணனிடம் வேண்டியப் பாடும் பாடல் இது தமிழ் சைவ மரபில் இவருடைய பாடல்கள் ஏழாம் திருமுறையாகத் தொகுக்கப் பட்டுள்ளன.

**சான்றெண் விளக்கம்**

1. சைவ சமயம் வரலாற்றுப் பார்வை-ப.எண்-34
2. சைவமும் தமிழும்-ப.எண்-31
3. புதிய இலக்கிய வரலாறு (தொகுதி II)-ப.எண்-108
4. மேலது-ப.எண்-108
5. மேலது-ப.எண்-108
6. மேலது-பக்.எண் -108
7. சைவமும் தமிழும்-ப.எண்-35
8. புதிய இலக்கிய வரலாறு(தொகுதி II)-ப.எண்- 110
9. சைவ சமய வரலாற்றுப் பார்வை-ப.எண்-39
10. மேலது-ப.எண்-40
11. மேலது-ப.எண்-41
12. மேலது-ப.எண்-43
13. மேலது-ப.எண்-44
14. மேலது-ப.எண்-45
15. சைவமும் தமிழும்-ப.எண்-44
16. புதிய இலக்கிய வரலாறு(தொகுதிII)-ப.எண்- 110
17. மேலது-ப.எண்-111

# இயல் 3

## பண்சுமந்த தேவாரப்பாடல்கள்

'பண் சுமந்த தேவாரப்பாடல்கள்' என்ற தலைப்பின் கீழ் பேராசிரியர் கூறியுள்ள கருத்துக்களே இந்நூலின் தலைப்பிற்கு பொருந்துவதாக அமைகிறது . தேவாரப் பாடல்களின் பண்முறை குறித்து ஆராய்ந்து, தேவாரப் பாடல்கள் பண்ணோடு இசைக்கப்பட்டன என்பதை உலகுக்கு எடுத்துக்காட்டும் விதமாக, ஒவ்வொரு பதிகங்களும் எந்த பண்களின் அடிப்படையில் முறைப்படுத்தப்பட்டிருக்கின்றன என்பதையும் அதற்கு அடிப்படையான தாளக்கட்டினையும் எடுத்துக் கூறியுள்ளார்.

"மூவராலும் அருளிச் செய்யப் பெற்ற திருப்பதிகங்கள் முழுவதும் "பண்முறை" எனவும் "தலமுறை" எனவும் இருவேறு முறையில் வரிசைப்படுத்தப் பெற்று நடைமுறையில் இருப்பதை அனைவரும் அறிவர். " 1 என்று உரைக்கும் ஆசிரியர் பண்முறை பழைய முறை என்றும் இம்முறை அமைப்பே ஏட்டுச் சுவடிகளில் இடம்பெற்றுள்ளதாகவும் திருமுறை பகுப்பிற்கு இப்பண்முறை அமைப்பே அடிப்படையாக அமைந்துள்ளது என்றும் கூறியுள்ளார். சம்பந்தர் பாடிய பாடல்கள் முதல் மூன்று திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டுள்ளன. அவருடைய தோடுடைய செவியன் என்று துவங்கும் பிரமபுரத்திருப் பதிகம் முதல் பதிகமாக வைக்கப்பட்டுள்ளது. இதற்குக் காரணமாக

"எல்லை இல்லா மறைகளுக்கெல்லாம் முதலாக அமைந்தது "ஓம் "எனும் எழுத்தாகிய பிரணவம் ஆகும். "ஓம் "என்பதில் உள்ள ஓகாரத்தினை "தமிழ்" என்பதன் முதலெழுத்தாக அமைந்த தகர மெய்யுடன் இணைத்து தோன்றிய சிறப்பு தோடுடைய செவியன் என்ற இத்திருப்பதிகத்திற்கு

உண்மை யால் முதல் திருமுறையில் முதல் திருப்பதிகம் ஆக முறைப்படுத்தப் பெற்றது. ”2 என்று கூறுகிறார்

முதல் திருமுறை,

நட்டபாடை,

தக்கராகம்,

பழந்தக்கராகம்,

தக்கேசி,

குறிஞ்சி,

வியாழக் குறிஞ்சி,

யாழ்முரி

ஆகிய ஏழு பண்கள் அடங்கிய 136 பதிகங்களை உடையது என்ற செய்தியை அறிகிறோம் .ஒவ்வொரு பண்ணிலும் அமைந்த பாடல்கள் இப்பதிகத்தில் வைக்கப்பட்டமைக்கான காரணத்தையும் ஆசிரியர் ஆராய்ந்து இருக்கிறார். “இத்திருப்பதிகத்திற்குரிய பண் நைவளம் என்பதாகும் .இதனை இக்காலத்தார் நட்டபாடை என வழங்குவர் .முதன்முதலில் பாடியருளிய திருப்பதிகத்தின் அமைந்த பண் நட்டபாடை ஆதலின் பிள்ளையார் நட்டபாடை பண்ணில் பாடி அருளிய திருப்பதிகங்கள் யாவும் தோடுடைய செவியன் என்ற திருப்பதிகத்தை யொட்டி முதல் திருமுறையில் முதற்கண் வைக்கப் பெற்றன. ”3

இதேபோன்று ஒவ்வொரு பண்ணிலும் அமைந்த திருப்பதிகங்கள் வைக்கப் பெற்றமைக்கான காரணங்களை விளக்கியுள்ளார் . இரண்டாம் திருமுறையில்

இந்தளம்,

சீகாமரம்,

காந்தாரம்,

பியந்தைக் காந்தாரம்,

நட்டராகம்,

செவ்வழி

ஆகிய ஆறு பண்களில் அடங்கிய 122 திருப்பதிகங்கள் முறைப்படுத்தப் பட்டுள்ளதாக அறிகிறோம் இத்திருமுறையில் தான் “வேயுறு தோளிபங்கன் “ எனவரும் கோளறு திருப்பதிகம் ; கூன் பாண்டியனின் வெப்பு நோய் நீங்கப் பாடிய “மந்திரமாவது நீறு“ எனும் திருநீற்றுப்பதிகம்; மயிலாப்பூரில் பூம்பாவை எனும் பெண்ணை உயிர்ப்பித்த “மட்டிட்ட புன்னையங் கானல்“ எனும் பதிகம் ஆகியன இரண்டாம் திருமுறையில் அமைந்த அற்புத திருப்பதிகங்களில் சில என்பதை அறிய முடிகிறது.

மூன்றாம் திருமுறையில்,

காந்தாரப் பஞ்சமம்,

கொல்லி,

கொல்லிக்கெளவாணம்,

கௌசிகம்,

பஞ்சமம்,

சாதாரி,

பழம்பஞ்சரம்,

புறநீர்மை,

அந்தாளிக் குறிஞ்சி

எனும் ஒன்பது பண்களுக்குரிய 125 பதிகங்கள் இடம்பெற்றுள்ளன. கோயில் என்றாலே அது சிதம்பரத்தைக் குறிக்கும் என்பர் . இக்கோயிலுக்குரிய காந்தாரப்பஞ்சமம் பண்ணில் அமைந்த “ஆடினாய் நறு நெய்யொடு பால்தயிர்“ என்ற திருப்பதிகத்தை முதற் பதிகமாக வைத்துள்ளனர்.இப்பதிகத்தில் இடம்பெற்றுள்ள பஞ்சாக்கரத் திருப்பதிகம் ;சமணர்களுடன் வாதிடுகையில்

அனல் வாதத்தின் போது பாடிய “தளரிளவளர் என உமை பாட“ என்ற திருப்பதிகம்; புனல் வாதத்தில் வைகையில் இட்ட ஏடு எதிரில் செல்லுமாறு பாடிய “வாழ்க அந்தணர்“ என்ற பதிகம் உள்ளிட்ட அற்புதத் திருப்பதிகங்கள் பற்றி எடுத்துரைத்துள்ளார். இத்திருமுறையில் இறுதியில் சம்பந்தரின் திருமணம் காண வந்தோர் அனைவரையும் அழைத்துக் கொண்டு பெருஞ் சோதியுள் புகும்பொழுது பாடிய “நல்லூர்ப் பெருமணம்“ என்ற பதிகம் இறுதியாக வைக்கப்பட்டுள்ளது.

இவற்றை அடுத்து நாவுக்கரசர் பெருமான் பாடிய பாடல்கள் நான்கு ஐந்து, ஆறாம் திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டுள்ளன. நான்காம் திருமுறையில்,

கொல்லி,
காந்தாரம்,
பியந்தைக் காந்தாரம்,
சாதாரி,
காந்தாரப்பஞ்சமம்,
பழந்தக்கராகம்,
பழம்பஞ்சுரம்,
இந்தளம்,

குறிஞ்சி ஆகிய பத்து பண்களும் திருநேரிசை, திருவிருத்தம் எனும் யாப்பியல் விகற்பமும் அமைந்த 113 பதிகங்கள் இடம்பெற்றுள்ளன.

“திருநேரிசை என்பது கூவிளம், புளிமா, தேமா, கூவிளம், புளிமா, தேமா எனவரும் கட்டளை வடிவினையுடைய செய்யுளாகும் ”4 என்று விளக்கம் அளித்து அதற்கான பாடலையும் எடுத்துக்காட்டாக தருகிறார். நேரிய இசையமைத்த திருப்பாடல்கள் நேரிசை என்று பெயர் பெறுவதாகவும்

விளக்கம் கூறுகிறார் ." திருவிருத்தம் என்பது இக்காலத்தில் கட்டளை கலித்துறை என்ற பெயரால் வழங்கப்பெறும் யாப்பாகும் ".5 இதில் இடம்பெற்றுள்ள அற்புதத் திருப்பதிகங்கள் ஒருசில "கூற்றாயினவாறு விலக்ககிலீர்;" நாவுக்கரசர் பெருமான் சமணர்கள் உந்துதலினால் அரசன் கடலில் தள்ளிய பொழுது "சொற்றுணை வேதியன்" என்ற நமச்சிவாயத் திருப்பதிகம் ; அப்பூதியடிகள் மகனை உயிர்ப்பிக்கப் பாடிய "ஒன்று கொலாம்" என்ற திருப்பதிகம்; திருவையாற்றில் சிவனும் உமையும் காட்சி தந்தது கண்டு பாடிய "மாதர் பிறைக் கண்ணியானை" என்ற பதிகம் போன்றனவாகும்.

ஐந்தாம் திருமுறையில் உள்ள 100 திருப்பதிகங்களும் திருக்குறுந்தொகை எனும் யாப்பில் அமைந்தவை "குறுந்தொகை யாப்பு என்பது நாற்சீர் நாலடியாய் அடிதோறும் தேமா, புளிமா என்னும் மாச்சீர்களுள் ஒன்று முதற் சீராகவும் கருவிளம் கூவிளம் என்னும் விளச்சீர்களுள் ஒன்று நான்காம் சீராகவும் இடையிலுள்ள இரண்டு மூன்றாம் சீர்கள் பெரும்பாலும் விளச்சீர்களாகவும் அமைய வரும் செய்யுள் விகற்பம் ஆகும்"

நாவுக்கரசர் பெருமான் ஒரு தலத்திலிருந்து மற்றொரு தலத்திற்கு நடந்து செல்லும் பொழுதும் , உழவாரப் பணி மேற்கொள்ளும் பொழுதும், இறைவனைப் போற்றிப் பாடும் பொழுதும், இறைவனது பெருமையை உலக மக்களுக்கு எடுத்துரைக்கும் பொழுதும் பாடுவதற்கு ஏற்ற சொந்தமாக குறுந்தொகை யாப்பு அமைந்திருக்கிறது என்பதனை அறிய முடிகிறது. மேலும் ஆழ்வார்கள் அருளிச்செய்த நாலாயிரத் திவ்யப்பிரபந்தத்தில், திருமங்கை ஆழ்வார் திருப்பாசுரங்களில் திருக்குறுந்தாண்டகம் இடம்பெற்றுள்ளது என்ற செய்தியையும் ஆசிரியர் கூறுகிறார்.

“தாண்டக வேந்தர்“ என்பது அப்பருக்குரிய சிறப்புப் பெயர்களில் ஒன்று. அதற்குக் காரணமாகிய தாண்டகப் பதிகங்கள் 99 ஆறாம் திருமுறையில் தொகுக்கப்பட்டுள்ளன.

சுந்தரர் அருளிய திருப்பதிகங்கள் அனைத்தும் ஏழாம் திருமுறையாகத் தொகுக்கப் பட்டுள்ளன இதில்

இந்தளம்,

தக்கராகம்,

நட்டராகம்,

கொல்லி,

கொல்லிக்கௌவாணம்,

பழம்பஞ்சுரம்,

தக்கேசி, காந்தாரம்,

பியந்தைக் காந்தாரம் , காந்தாரப்பஞ்சமம்,

நட்டபாடை,

புறநீர்மை ,

சீகாமரம் ,

குறிஞ்சி ,

செந்துருத்தி,

கௌசிகம்,

பஞ்சமம்

ஆகிய 17 பண்களுக்குரிய திருப்பதிகங்கள் தொகுக்கப்பட்டுள்ளன. நம்பியாரூரருக்குத் திருமணம் நடக்கையில், சிவபெருமான் தடுத்தாட்கொண்ட நிகழ்வின்போது இறைவன் பணித்தபடி பாடிய “பித்தா பிறை சூடி “என்ற பதிகம் முதல் பதிகமாக வைக்கப்பட்டுள்ளது.

வடமொழி யாப்பிலக்கண மரபில் கூறியுள்ள லகு,குரு என்ற எழுத்து அமைப்பு குறித்து ஆசிரியர் விளக்கமாக எடுத்துரைத்துள்ளார்

தேவாரத் திருப்பதிகங்களில் யாப்பு வகையினைக் “கட்டளை“ என்று அழைப்பர்” கட்டளை என்பது மாத்திரை அளவும் எழுத்து இயல் நிலையும் பற்றிச் செய்யுள்களில் அமைந்த ஓசைக் கூறுபாடாகும்”7

என்ற விளக்கம் அளிக்கும் ஆசிரியர் அதற்கு, சான்றும் கூறி நிறுவுகிறார் . இக்கட்டளையமைப்பினை அடியொற்றியே இசைப் பாடல்களில் தாளம் அமையும். தொல்காப்பியர் கூறியுள்ள அடிவரையறை பற்றிக் கூறுகையில், அடி வகைகள் பற்றியும், அவை பகுக்கப்பட்ட முறையையும் எடுத்துரைத்துள்ளார். எழுத்தெண்ணி வகுக்கப்பட்ட ஐவகை அடிகளை, “கட்டளை அடிகள்“ என்று வழங்குவர். ”ஒற்று நீக்கி எண்ணுங்கால் எல்லா அடிகளும் எழுத்தொத்து வரும் கலிப்பாவினைக்“ கட்டளைக் கலிப்பா“ எனவும், நெடிலடி நான்கினால் எழுத்தொத்து வரும் கலித்துறையினைக் “கட்டளைக் கலித்துறை“ எனவும் இவ்வாறு கட்டளையாசிரியம், கட்டளை வஞ்சி எனவும் வழங்கும் பா வகைகள் எழுத்தளவாகிய கட்டளையோசை பற்றிப் பகுத்துரைத்தனவாகும். ”8

இசைப் பாக்களில் சந்த அமைப்பை அறிய, தான, தன, தானா, தனா போன்ற சொற்களை சந்தக் குறிப்பு சொற்களாக இசை ஆசிரியர்கள் எடுத்தாண்டு உள்ளனர். அருணகிரிநாதர் பாடிய திருப்புகழை அனைவரும் உணர்ந்து பாடுவதற்கு மேற்கூறிய சந்தச் சொற்களே உதவுகின்றன. அருணகிரிநாதருக்கு வழிகாட்டியவர்கள் தேவாரம் பாடிய மூவரே. ஆகவே தேவாரப் பாடல்களின் கட்டளைகளைப் பிரித்தறிதல் வேண்டும் என்று ஆசிரியர் கூறுகிறார். திருமுறை கண்ட புராணத்தில், பண்களுக்குரிய பதிகங்கள், அவை எத்தனை கட்டளைகள் உடையன என்பது பற்றி தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. திருமுறைகண்ட புராணம் கூறும் விவரங்கள்,

விபுலானந்த அடிகளாரின் யாழ் நூலிலும் இடம்பெற்றுள்ளது. “தேவாரஇயல்“என்ற பகுதியில் கட்டளை முறைகளை, விரிவாகக் கூறியுள்ளார். இதனை அடியொற்றி ஆசிரியர் திருப்பதிகங்களின் கட்டளைப் பகுப்பை எடுத்துரைத்துள்ளார். முதலாம் திருமுறையில் முதல் பண்ணாக அமைந்துள்ள நைவளம் எனும் நட்டபாடை எட்டு கட்டளைகள் உடையது இதனை ”சொல் நட்டபாடைக்குத் தொகை எட்டும் கட்டளையாம் எனும் திருமுறைகண்ட புராணத் தொடரால்” அறியலாம். 9

”கட்டளை 1

தோடுடைய செவியன் விடை

தான தானதன தானன

யேறியோர் தூவெண் மதிசூடி

தானன தானா தனதானா”

இதுபோன்ற எட்டு கட்டளைகளுக்கும் சான்றளித்து உள்ளார். முதல் இருபத்தி இரண்டு பதிகங்கள் இந்த யாப்பு முறையில் அமைந்து இருக்கின்றன

தக்கராகப் பண்ணிற்கு கட்டளை விகற்பங்கள் ஏழு. இருபத்திமூன்றாம்பதிகம் முதல் நாற்பத்தி ஆறாம் பதிகம் வரை இருபத்தி நான்கு பதிகங்கள் தக்கராகப் பண்ணில் அமைந்தவை. பழந்தக்கராகப் பண்ணுக்கு உரியவை 16 பதிகங்கள். இதற்கான கட்டளை விகற்பம் மூன்று என்று திருமுறைகண்ட புராணம் கூறினாலும் யாப்பியல்பு நோக்கி வகைப்படுத்துகையில் ஆறு வகையாக அமைந்துள்ளன. அறுபத்தி மூன்று முதல் எழுபத்தி நான்கு வரை பனிரெண்டு பதிகங்களும் தக்கேசி பண்ணுக்குரியவை. இதற்கான கட்டளைகள் இரண்டு. எழுபத்தி ஐந்து முதல் நூற்றி மூன்று முடிய இருபத்தி ஒன்பது பதிகங்கள் குறிஞ்சி பண்ணுக்குரியன.இவை ஐந்து கட்டளைகளில் அமைந்துள்ளன.

வியாழக்குறிஞ்சி எனும் பண்ணில் நூற்றி நான்கு முதல் நூற்றி இருபத்தி எட்டு வரையில் இருபத்தி ஐந்து பதிகங்கள் அமைந்துள்ளன இவற்றிற்கான கட்டளை விகற்பங்கள் ஆறு.

நூற்றி இருபத்தி ஒன்பது முதல் நூற்றி முப்பத்து ஐந்து வரை அமைந்த ஏழு திருப்பதிகங்களும் மேகராகக் குறிஞ்சிப் பண்ணில் அமைந்தன. இவற்றிற்கான யாப்பு விகற்பங்கள் நான்கு. இறுதியாக அமைந்துள்ள 136 ஆவது பதிகம் யாழ்முரி எனும் பண்ணைச் சார்ந்ததாக அமைகிறது. இதேபோன்று ஒவ்வொரு திருமுறையிலும் அமைந்த பண்களுக்கான யாப்பு விகற்பங்களை, திருமுறைகண்ட புராணத்தை சான்றாகக் கொண்டு மிகவிரிவாக எடுத்துரைத்துள்ளார். ”தேவாரத் திருப்பதிகங்களை இசையுடன் பாடியும் கேட்டும் மகிழ வேண்டுமானால் அப்பதிகங்களுக்குரிய பண்ணாகியஇசை அமைப்பினையும், பாடல்களுக்கு உரிய தாள அமைப்பினையும் நன்கு உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். செய்யுட்களின் தாள அமைதியினைப் புலப்படுத்துவன. அவற்றில் அமைந்த சீர்நிலைகளேயாகும். “சீர்“என்னும் சொல்லுக்குத் தாளம் என்பதும் ஒரு பொருள். எனவே திருப்பதிகப் பாடல்களின் சீர்நிலைகளாகிய யாப்பமைதியினைப் பகுத்து உணருங்கால் அதனை நிலைக்களனாகக் கொண்டு நிகழும் தாளக் கூறுபாடும் இனிது விளங்கும்”10

பெரிய புராணம் இயற்றிய சேக்கிழார் காலத்திற்கு முன்பிருந்தே பதிகங்களுக்குரிய பண்களும் கட்டளைகளும் வழங்கி வந்துள்ளன. திருமுறை வகுத்த நம்பியாண்டார் நம்பி காலத்திலேயே பண்ணடைவும் கட்டளை வகைகளும் இருந்தமையை அறிகிறோம்

**”திருப்பெருகு பெருங்கோவில் சூழவலங்**

**கொண்டருளித் திருமுன் நின்றே**

**அருட்பெருகு திருப்பதிகம் எட்டொருகட்**

**டளையாக்கி அவற்றுள் ஒன்று**

**விருப்புறுபொற் றிருத்தோணி வீற்றிருந்தார்**

**தமைப்பாட வரவு காதல்**

**பொருத்தமுற அருள்பெற்றுப் போற்றியெடுத்**

**தருளினர் பூவார் கொன்றை”11**

என்ற பெரிய புராணப் பாடல் தக்க ராகப் பண்ணுக்குரிய கட்டளைகள் பற்றி எடுத்துரைக்கிறது.

தேவாரப் பாடல்களின் பண்களை புதிய நோக்கில் ஆராய்ந்துள்ள பேராசிரியர், இறுதியாக திருமுறைகண்ட புராணம் கூறும் செய்திகள் யாவும் முன்னமேயே சேக்கிழார், நம்பியாண்டார் நம்பி ஆகியோர் எடுத்துரைத்ததை அடியொற்றி அமைந்துள்ளதாக முடிக்கிறார்.இதனை,

”இதுகாறும் எடுத்துக்காட்டிய குறிப்புகளால் தேவாரத் திருப்பதிகங்களில் சீர் நிலை பற்றியும், எழுத்தளவாகிய மாத்திரை பற்றியும், சீர்களில் முன்னும் பின்னும் உள்ள எழுத்துகள் அசையாய் நின்று முன் பின்னுள்ள சீர்களில் ஈற்றிலும் முதலிலும் பிரிந்திணைந்து இசைத்தலால் உளவாம் இசை முறை பற்றியும், அமைந்த ஓசை கூறுபாடுகளே திருமுறைகண்ட புராணம் கூறும் தேவாரப் பதிகங்களில் கட்டளைகளாம் என்பது நன்கு தெளியப்படும். ”12 என்று ஆசிரியர் கூற்றின் வாயிலாக அறிய முடிகிறது இப்பகுதியில் பேராசிரியர் கூறியுள்ள செய்திகள் யாவும் அவரது ஆழ்ந்த இசை அறிவினை நமக்கு அறிவிக்கிறது.

## சான்றெண் விளக்கம்

1. மூவர் தேவாரம் புதிய பார்வை-ப.எண்-137
2. மேலது-ப.எண்-137
3. மேலது-ப.எண்-138
4. மேலது.ப.எண்-144
5. மேலது-ப.எண்-145
6. மேலது-ப.எண்-147
7. மேலது-ப.எண்-158
8. மேலது-ப.எண்-159
9. மேலது-ப.எண்-161
10. மேலது-ப.எண்-247
11. மேலது-ப.எண்-247
12. மேலது-ப.எண்-158
13. மேலது-ப.எண்-159
14. மேலது-ப.எண்-161
15. மேலது-ப.எண்-247
16. மேலது-ப.எண்-247

# முடிவுரை

மூவர் தேவாரம் என்பது அனைவருக்கும் அறிமுகமான பெயராக இருப்பினும் பேராசிரியர் ந சுப்பு ரெட்டியார் அவர்கள் இதனைப் புதிய பார்வையில் அணுகியிருக்கிறார்

தமிழரின் கருவூலமாக விளங்கும் தேவாரப் பாடல்கள் எவ்வாறு தொகுக்கப்பட்டன என்பதையும் தேவாரம் என்ற சொல் தோன்றிய வரலாற்றையும், அதன் பொருளையும் ஆசிரியர் எவ்வாறு ஆராய்ந்து உள்ளார் என்பதை முதல் இயல் எடுத்துரைக்கிறது

இரண்டாம் இயலில் தேவாரம் பாடிய மூவரது வாழ்க்கை வரலாறு, அவர்கள் செய்த அற்புதச் செயல்கள் ஆகியவை எடுத்துரைக்கப்பட்டுள்ளது

மூன்றாம் இயலில், நூலின் பெயருக்கேற்ற வகையில் தேவாரத்தைப் புதிய பார்வையில் ஆராய்ந்து உள்ள ஆசிரியர் தேவாரப் பாடல்களின் பண் அமைப்பை விளக்கமாக ஆராய்ந்து கூறியுள்ளார். இதன் வாயிலாக அவரது ஆழ்ந்த இசை அறிவு வெளிப்பட்டுள்ளது. பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் புதிய நோக்கில் தேவாரத்தை ஆராய்ந்துள்ளார் என்பதை இத்திட்டக் கட்டுரை எடுத்துரைக்கிறது

# துணைநூற்பட்டியல்

**முதன்மை ஆதாரம்**

1. சுப்புரெட்டியார்.ந- புதிய பார்வையில் மூவர் தேவாரம் முதற்பதிப்பு

**துணைமை ஆதாரம்**

1. சிற்பி பாலசுப்பிரமணியம் நீலபத்மநாபன்- புதிய தமிழ் இலக்கிய வரலாறு சத்திய அகாடமி முதற் பதிப்பு-2013
2. இரா. செல்வக்கணபதி- சைவமும் தமிழும் பரணி ஆப்செட் பிரிண்டர்ஸ் முதற் பதிப்பு, நவம்பர்,2005
3. தருமை ஆதீனம்- சைவ சமயம் வரலாற்றுப் பார்வை (அறிமுகம்) பாரதி அச்சகம் முதற்பதிப்பு,மார்ச் 1988



# India Book of Records

# CERTIFICATE

## CENTENARY CELEBRATIONS OF PROF DR. N SUBBU REDDIAR

**Prof Dr S Ramalingam (born on 13 Oct 1949) Organizing Secretary, Na Subbu Reddiar 100 Educational Trust, Chennai, Tamil Nadu, has conceived, designed and meticulously executed 108 Centenary Events throughout Tamil Nadu during the Centenary Year (2015-2016) of Prof. Dr. N Subbu Reddiar who served the cause of education for 65 years andwritten 135 books in various fields (100 books after retirement).**



**Biswaroop Roy Chowdhury**
Chief Editor
**India Book of Records**

**Date: March 19, 2018**




**First Paper:** *என்ன ஆச்சரியம்?* **"Enna Aacharyam !" [1949]**

# ஓர் அறிமுகம்

**பேராசிரியர்**

# ந சுப்பு ரெட்டியார்



Books Published : **135 + 1**
Papers Published : **200** [Tamil 173 + English 27]
Endowments established: **10**
Endowment Lectures : **12**
Awards received: **8**
Prizes won : **14**
Titles conferred : **8**

## Masterpieces:

**1) Tamil Payitrum Murai [1957]**
**2) Religion & Philosophy of Naalayira Divyap-pirabhandham with special reference to Nammalwar [English][His PhD thesis ] [1977]**
**3) Kalvi Ulaviyal Kotpaadukal [1989]**
**4) Vainava Selvam [1995]**

## Financial Aid for publishing the Books:

**a) Tirumala Tirupathi Devasthanams - 21**
b) Directorate of Tamil Development
Government of Tamil Nadu - 6

***Research on Professor's Books***

a) University of Madras - 1993 (leading to PhD)
b) Madurai Kamaraj University - 2017 (leading to PhD)
c) Bharathiyar University - 2020 (leading to PhD)


ISBN 978-81-945046-4-1
9 788194 504641 >

பேராசிரியரின் 135 நூல்களில், தெரிவு செய்யப்பெற்ற 100 நூல்கள் (முழுமையாக)
https://archive.org/details/@centenary1916nsr2016
எனும் இணையதளத்தில் உள்ளன. [freely downloadable]